உ
சிவபெருமான்றிருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை

விருத்தாசலம்
ஸ்ரீகுமாரதேவர்
ஆதீனபரம்பரையைச்சேர்ந்த
வேதசிரோணி
சிதம்பரசுவாமிகள்
மாணாக்கராகிய
சண்முகசுவாமிகள்
அருளிச்செய்தது.

இஃது
திருமயிலை. முருகேசமுதலியாரால்
பரிசோதிக்கப்பட்டு,

ஊ. புஷ்பரதசெட்டியாரது
சென்னை,
கலாரத்நாகா அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

ஆங்கிரசவூ வைகாசிமீ



1933

உ

சிவபெருமான்றிருவருள்வாழ்க.

# சாத்துகவி.

இஃது

விருத்தாசலம்.

ஸ்ரீகுமாரதேவசுவாமிகள் ஆதீனம்.

சொக்கலிங்கசுவாமிகளால்

இயற்றப்பட்டது.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அருமறையா கம முதற்சாத் திரங்க ளினி லமைந்த
வநுபவார்த் தங்களுந் தன் னநுபவத்தி னிடமாய்த்
திருவருணின் றறிவிக்குஞ் செம்பொருளும்விளங்கச்
சிறுபடிகந்தனிற்பெரியபொருள்களைக்காட்டுதல்போல்
உருகுறமுள் ளன் புடையவுத்தமர் கட் கிரங்கி
யொப்பறுதத் துவ ஞான தீபிகை யென் றோர்நூல்
தெருளுறச்செய் தளித் தனனற்சிதம்பர மாந்தலத்திற்
றிகழுறுசண்முக நாமத்திருந்தவர்கண் மணியே.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# சாத்துகவி.

---

இஃது

வேதசிரோணி,

சிதம்பரசுவாமிகள்மாணாக்கராகிய

## சிவசுப்பிரமணியதேசிகர்

இயற்றிய

நிலமண்டிலவாசிரியப்பா.

பொன்னார் விரியிதழ்ப் பூங்கேழ் கஞ்சத்
தின்னா ரமிர்த மெனவீற் றிருக்கும்
அன்னமென் னடைபயி லாயிழை வாணுதல்
மின்னலங் கொடியின் விளங்குறுங் கொண்மூ
நிறந்திகழ்மேனி நெடியோ னடல்செறி
மறந்திகழ் நேமி வலவன் முராரி
உந்தியங் கமலத் துதித்தநான் முகத்து
மைந்தன் கலைமகண் மணாளன் செருக்குப்
போக்குபு நாளும் புரப்பான் கருணை
மீக்கொடு சாம வேதசி-தத்தன்

91-2

பிறைதவழ் மௌலிப் பெம்மா னலைதரூஉம்
கறைதவழ் நீல கண்டனெங் கோமான்
உமையொரு பாகத் தொப்பி லொருவன்
அமைவுற நெஞ்சத் தருணடக் கூத்தன்
கொடுமுடி யகந்தங் கோடி குலாவி
டுமுடி யடியின் ஞானச் சுடராய்
று வுலக மனைத்தையு மூடித்
தானே தானாய்த் தனிநிற் புதவாய்
பண்டிரைக் கையான் மணிமுத் தாகதி
ண்டிரை நாற்ற மலர்மணி வில்லம்
ரகில் சந்தங் கடிசமழ் நானம்
ரகத் தெங்கு நெடுங்கழை வீசிப்
சித்து நிற்கும் பொலிவுள தாகி
சித்து நிற்கு நெஞ்சகங் கொண்டே
ள்ளங் கலங்கா வுரோமச முனிவன்
ள்ளங் களைத்துக் கருத்தைத் திருத்தி
புணர் வெய்தி யருந்தவ மாற்றி
மெய்யுணர் வெய்தி மேன்மே லுவக்கும்
லையது வாகி நிகழன் பினேனும்
லைவுறு முள்ளத் தன்பகன் றேனும்
ரிடை மரணஞ் சார்தரு முயிர்கட்
ல் விடைமே லம்பிகை யோடும்
ர்கட் கிறைபோந் துபதே சித்துச்
அது மத்தாள் சேர்ப்பதற் கிடமாய்ச்

சதுமறை புகழத் தான்விளங் குவதாம்
முதுகிரி யென்ன மொழிதிருப் பதியில்
பரகுரு சிவசர பத்திவித் திட்டுத்
திரவி சுவாசத் தெண்ணீர் பாய்ச்சிக்
காமக் குரோதக் களைசட் டோம்பி
ஏமப் பைங்கூ ழினிது விளைத்துக்
கையா டுநர்வாழ் கன்னட தேசத்
தையார் செங்கோ லரசினை யொருவி
இருவினை யொப்பு மிருண்மல பாகமும்
பருவமென் சத்தி பாதமு நான்கு
சாதன மாகுஞ் சம்பத்துங் கொடே
ஆசர வுடனே யகநெக் குருகி
ஆரண மொருபா லாகம மொருபால்
பூரண நோக்கம் பொருந்தின ரொருபால்
உதயாத் தமன முருப்பரஞ் சுடர்கண்
டிதயா காசத் திருக்குந ரொருபால்
இராப்பக லில்லா விடத்தே யைவர்
பராக்கற நிற்கும் பண்பின ரொருபால்
ஆடுந ரொருபா லன்பொடு கானம்
பாடுந ரொருபாற் பதைக்குந ரொருபால்
தேடுந ரொருபாற் றிகைக்குந ரொருபால்
சூடுந ரொருபாற் சூட்டுந ரொருபால்
நாடுந ரொருபா னகைக்குந ரொருபால்
ஊடுந ரொருபா லோரொண் சித்தித்

தாகிய வொருபாற் சாற்றுமட் டாங்க
யோகிய வொருபா லுண்மைய வொருபால்
சூழ்தர நாப்பண் டிலங்குந் தேசிகன்
ஆழ்கட லனைய வாரரு ளாளன்
தருவளர் பேறைச் சாந்தலிங் கையன்
திருவடிக் கமலஞ் சென்னியிற் சூடி
அருக்கிர கம்பெற்ற வனரு ளையினல்
தனித்துவந் தெய்திச் சமாதியுற் றிருப்ப
அரிய நாயகிபே ராநந்த வல்லி
பெரிய நாயகியெம் பிராட்டிபொற் கிண்ணத்
தேந்திவந் துதவு மின்சுவை யமிர்தம்
மாந்தி மாந்தி வழிநடை விடாயும்
விடாதுறும் பிறவி விடாயுந் தீர்ந்து
சடாமுனிக் குற்ற சாபமும் போக்கிக்
கிளர்தரு மவ்வூர்க் கிராம தேவதையுள்
தளர்வுறு மமையந் தனிற்றறற் காத்து
மதியி லியாய மாந்திரி கற்குக்
கதியுற வொற்றைக் கண்டனை யுதவி
அணிவள ராரூ ரண்ணல் விழாவின்
மணிவளர் பொற்றேர் மறுகி னிறுத்தி
மீளவு மிக்க விரைவி னடாத்தி
ஆளரி யேற்றி னகிலத் துலாவித்
தாம்பெறு பேறித் தாரணி பெறுதற்
காம்படி யுள்க லறிஞர்தம் வழக்கே

என்பத னுற்சிவை யெம்பெரு மாட்டி
இன்புரு வாயுள் ளெய்தா மொழிய
ஆத்திக ரின்னே யாவையுமடையச்
சாத்திரக் கோவை தான்முடித் தருளிப்
பாசவை ராகம் பகரரு ணேசம்
ஈசுர பத்தி யெழிற்சிவ ஞானம்
நான்குமோ ருருவாய் நன்குவீற் றிருக்கும்
வான்குல முழுதும் வழிபடும் பெருமைக்
குமார தேவ குருபரம் பரையில்
ஏமாசு நீக்கி யின்னருள் புரிவான்
பாற்கட லுதித்த பனிமதி யெனவும்
கார்க்கடன் முகட்டிற் காண்கதி ரெனவும்
திகழு மாணிக்க தீபம தெனவும்
தகவுறு மமிர்த சாகர மெனவும்
தோற்றுபு வானோர் சுரருல கிச்சை
மாற்றுபு வீழும் வளம்பல வுடைய
வேத சிரோணி மேம்பதி யதனில்
மாதவர் சூழ வைகுந் தபோநிதி
சிதம்பர தேவன் றிருவருண் மூர்த்தி
சிதம்பர ஞான தேசிக னருள்கொண்
டாணவ மாயை யான்மா வருள்சிவம்
காணவந் துதிக்குங் கதிரொளிப் பிரபை
விரிதரு பேய்த்தேர் விண்ணுறு நீலம்
புரியுமிவ் வைந்து பொருள்போன் மென்ன

உன்னினத் துவித முண்மையா மென்றே
நன்னய மாக நயன பாஷையினல்
சொல்லாது சொல்லச் சுத்தநன் னிலையில்
நில்லாது நின்று நிகழாது நிகழும்
ஆநந்த நிர்த்த மறியா தறியும்
ஞாநந் திகழரு ணட்டம துடையான்
ஆகம முடிவு மாரண முடிவும்
ஏகம தாமென் றிதயத் துணர்ந்தோன்
அன்பாற் குணத்தா லறிவா லருளால்
பொன்போல் யாரும் போற்றற் குரியான்
என்றவத் துணைவ னென்னிரு கண்மணி
கன்றவத் தென்னைக் கைவிடாவன்பன்
மண்முகம் வாரா வழியருள் புரியும்
சண்முக தேவன் சற்குருராயன்
மனிதர்க் காயுளு மதியுமோ வற்பம்
புனிதநல் வேத புராணு கமங்கட்
களவிலை யெவ்வா றறிவன வறிப
தளர்வுறு பந்தந் தணவா முத்தி
எவ்வா றடைப வென்றுள் ளிரங்கி
ஒவ்வா முரணை யொருவியா வர்க்கும்
அருமறை நெறியு மாகம நெறியும்
இருமையு மொருமை யெய்துநன் னெறியும்
ஐயந் திரிபு மறவே யுள்ளநம்
கையுறு நெல்லிக் கனிபோற் காட்டும்

நன்பயி றத்துவ ஞானதீ பிகைபென்
றன்பொடு மிந்நூ லருளிச் செய்யா
அம்மா வுதவின னணிதரு முகில்போல்
கைம்மாறு வேண்டாக் கருணையின் மாதோ.

திருச்சிற்றம்பலம்.

---

உ
சிவபெருமான்திருவருள்வாழ்க.

# சாத்துகவி.

இஃது
திருநெல்வேலி,
முருகதாசரென்றும் திருப்புகழ்க்காரரென்றும்
வழங்குகின்ற
## தண்டபாணிசுவாமிகள்
இயற்றியது.

பதின்சீர்க்கழிநெடிலாசிரிய வண்ண விருத்தம்.

தத்தனதான தானன தன்னன தனனா.

பொற்குவைநீலமேனிகர்கண்ணியர்புவிமால்
புத்தியின்மேவிடாதருள்பண்ணிடுநலமார்
சற்குருபாதமாமிருநன்னிலைநடுவாழ்
தத்துவஞானதீபிகைபன்னியபெரியோன்
எற்குயிர்போலுமாதரனுண்ணியவுணர்வான்
எய்ப்பறுசீலவாரிதிபுண்ணியவடிவோன்
நற்குணமியாவுநீடலினுண்மையையிகழான்
நக்கனைநாடும்வீறுறுசண்முகமுனியே.

முற்றிற்று.
திருச்சிற்றம்பலம்.

உ

சிவபெருமான் திருவருள் வாழ்க.

# சூசிபத்திரிகை.

---

இஃது

விருத்தாசலம்,

ஸ்ரீகுமாரதேவசுவாமிகள் ஆதீனம்

சோக்கலிங்கசுவாமிகளால் இயற்றப்பட்டது.

## நிலமண்டிலவாசிரியப்பா.

திருவளர்கமலச் செம்ம ணன்முகத்
தொருவ னளித்த வுலகினிற் பன்னாள்
ஆற்றுறு சிவ புண் ணியமுதிர் வதனால்
ஊற்றமிகுந்தவ யாக்கையோ டுதித்து
பொய்ச்சம யங்களைப் போக்கியாகம
மெய்ச்சைவசமய விதிகைக் கொண்டே
பிறைக்கொழுந்தணி சடைப் பெருமான் சேவடி
நறைக்கொழுங் கூவிள நன்னீராதிய
தேடியர்ச் சித்துத் திருவருளிரந்து
பாடிப்பணியும் பத்திமான் கட்கும்
பதிபசுபாச விதிமுறை தெரிந்து
சதிருடைச் சைவசித் தாந்தசா தகர்க்கும்

திருக்குத்திரிசியத் தெரிபொரு டெரிந்தே
இருக்கும்வேதாந்த வேத்திய ரிவர்க்கும்
அமரருமறிந்த் கருமைத் தானநற்
சமரசஞானச் சாதகர் தமக்கும்
அரும்பொருள் காட்டு மஞ்சனம்போலப்
பெரும்பொருள் ஞான.ப் பெருநிதிகாட்டுமித்
தத்துவஞான தீபிகை தன்னுள்
ஒத்துற வமைந்த வொன்ஞெழியாரு
ருமுதலாத்ம வநுபவ சாரம்
தோமறுஞான சோடச சூசகம்
பதார்த்தத்திரய தீபிகை பழிப்பில்
எதார்த்த முறைக்கு மிதோபதேசம்
திருவருள்விளக்கந் தெளிவிலார் கொடிய
கருவகல் பிரமோப தேசக்கட்டளை
சிதம்பரரகசிய சிந்தனை யதன்பின்
மதந்தவி ருபயஞா னமார்க்க சிந்தனை
அத்தியாரோப வபவாத சங்கிரகம்
தத்துவோற்பத்தி லயக்கிரம சங்கிரகம்
ஈங்கிவையிரண்டு சிந்தனை யிதன்பின்
ஓங்கியதத்துவ சங்கிரக மொள்ளிய
ஆத்மசொருப நிர்ணய மரிதாம்
ஆத்மாநாத்ம விசார மாசில்
பிரமஞான சிந்தனை பெட்பார்
பிரமஞாநாதி சதுட்டயம் பெரிதாம்

பிரமஞானாதி தவத்துவம் பீடார்
வரமகா வாக்கி யார்த்த சிந்தனையே
சார்த்தசட் பதார்த்த சாமானியவிசே
ஷார்த்தசங்கிரக சிந்தனை யதன்பின்
மாயாஞ்ஞான நிரசனம் வழுவில்
தேயாமத்திய கத ஞான சிந்தனை
அத்வைதசிந்தனை யாமதன் பின்னர்
ஒத்துறுசகசா நுபவகன் கோங்கும்
எதார்த்தநிலையை யெளிதி னுணர்த்தும்
பதார்த்தபஞ்சக நிரூபக சிந்தனை
பவத்தாம்பந்தபஞ் சக நிவர்த்தகமுடன்
அவத்தாபஞ்சக நிவர்த்தக மரிய
துரியாநுபவ சிந்தனை தகளில்
துரியாதீத சொரூபாநு பவம்
சத்தியர்புகழுஞ் சதுட்பாத சிந்தனை
சித்திதரு ஞான சித்திசிந் தனையே
பந்தமில் ஞானராச்சிய பார
சிந்தனைஞானவி யாபார சிந்தனை
ஞானக் கிருஷி சிந்தனை நவிலரி
தானகுணபே தாவஸ்தாவிவ
காரஞ்சற்குரு கடாக்ஷபிரபாவம்
சாரிவைதஞ்சிந் தனைதுதிபதிகம்
எனுமிவை யடங்கிய வெழினூலதனை
மனுமொருசாலி வாகன சகாப்தம்

ஆயிரத்தெழுநூற் றெண்பத் தொன்பதில்
வயவகூஷய மெனுமாண் டதனில்
மகரத்திங்கணன் மதிவா ரத்தினில்
அகமதில் விளங்குதன் னநுபவப்படியே
செப்பினனழகார் சிதம்பரந் தனில்வாழ்
தப்பிலா ஞானத் தவராஜ சிங்கம்
சண்முகனெனுநா மத்தொரு தவத்தோன்
மண்முகம்வாரா வழியருள் பவனே.

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# சூசிபத்திரிகை.

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவபெருமான்றிருவருள்வாழ்க.

## ஆத்மஸ்துதி.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சின்மயமகண்டாகாரசிவமயம்பரமஞானம்
மின்மயம்போதவெட்டவெளிமயமழிவிலாத
சன்மயம்பிரமாநந்தத்தன்மயமாகிநிற்கும்
என்மயமம்மவம்மவென்சொல்கேனிருந்தவாறே.

## சிவஸ்துதி.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கோணலாநடையோருமிகுமதங்
கொண்டபேருங்கொலேஞரும்வெண்மதி
பூணுமென்னடிக்கன்புளநெஞ்சரோற்
போதவீடுறுவாரொனச்சான்றதாக்
காணுங்கண்ணிடந்தப்பனைநாகத்தைக்
கரியையுங்கொடுகாட்டியுங்கண்டிலேன்
தாணுவாய்ச்சதுர்வேதசிரோணிவாழ்
தண்டபாணிதயாபரமூர்த்தியே.

## இதுவுமது.

என்னையுஞ்செகந்தன்னையும்வேறற
யாவன்காண்பவனன்னவன்முத்தியை
மன்னுமென்றன்றுநின்னைமுனம்வலம்
வந்துமாங்கனிவாங்கியகுஞ்சரம்
என்னுமாமுகன்சாக்கியைக்காட்டியு
மேழையேனினம்பேதமறந்திலேன்
தன்னைநேர்சதுர்வேதசிரோணிவாழ்
தண்டபாணிதயாபரமூர்த்தியே.

---

## எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நாரியின்முடியில் வையமும் வைய
நடுவினிற் சிலையுமச் சிலைமேல்
பாரியவுருளு முருளினுட் கணையும்
பகழியுட் பாகனும் பாகன்
சீரியமுகத்திற் றுரங்கமுந் துரங்கச்
சிகையினிற் றலைவனு மிருந்து
போரியலவுணர் புரஞ்செறு மாண்மை
புகலுறிற் புன்சிரிப் பாமே.

---

உ

சிவபெருமான் திருவருள்வாழ்க.

# நடேசர் துதி.

---

## எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பேதையருட்பெரும்பேதையான வென்னைப்
பெரிதிரங்கியாட்கொளனின்னருளுக்கான
ஊதியமாயிருக்கவதைவீணிற்போக்கி
யுலையவெனைவிடுத்திடுதல்றமாங்கொல்லோ
பாதிமதிச்சடையமுழுமதியராய
பரமவடியார்களகத்தென்றுங்காண
மாதுமையோடானந்தநிருத்தஞ்செய்யு
மாதேவநினதருளைவழங்கல்வேண்டும்.

---

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தக்ஷிணாமூர்த்திஸ்துதி.

---

## இரட்டாசிரியவிருத்தம்.

ஆரணம்புகலரியபூரணமெனுந்தூல
வாக்கையும்பரசிவர்கட்
கத்துவிதமூரசமேயெங்கணுமுழக்கும்வா
யஃதுமுட்கரணமாதி
ஆஞ்சருவசங்கப்பரித்தியாகமேபுரியு
மங்கரமூான்னெறியிலே
அமரிக்கையாய்ச்சுத்தநடைகள்பயிலும்பாத
மதுவுமும்மலமொழிக்கும்
வீரமிகுபாயுவும்பலபராக்கிரமமுதல்
வீரியவிசர்ச்சனஞ்செய்
மேன்மைமிகுலிங்கமும்முபஸ்தவாக்கியமேன்
மிகுபிரியமானசெவியும்
வெம்பவச்சுடுகைவிட்டுபசாந்தமென்பரிச
மேலுறவிரும்புதொக்கும்
மேதினியெலாம்பிரமமயமாககாட்டமூறு
விழியுமெய்ஞ்ஞானரசமே

சீரானவிளங்கவுணர்சிதுவையுங்கருணைமுதல்
    செய்யசுபவாசனையெலாம்
தெரிகின்றநாசியுஞ்ஞானேயகண்டபர
    சின்மயாநந்தவடிவென்
சிந்தனைசெய்சித்தமுந்நாளுங்கலங்காது
    தீரமாநிற்குமனதும்
செகமாதியென்னைவிடவில்லையெனநிச்சயஞ்
    செய்கின்றபுத்தியதுவும்
காரணமதாமெனக்கொருவர்சமமில்லையெனக்
    கருதுமாங்காரமதுவும்
கடலனையசொருபவாநந்தமயமாய்வேறு
    கருதாதபோதமதுவும்
சடையனேற்கருண்ஞானமுத்திரைக்கையினாற்
    கற்பனைபுரிந்தாளுவாய்
கல்லாலடிக்குள்வளர்தக்ஷிணாமூர்த்தியே
    கருணாநிதிக்கடவுளே.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அதிசயமொன்றுகல்லாலடியினிற்கண்டேஞ்சீடர்
முதியவர்குரவன்காளைமோனமுத்திரைதரித்துத்
துதிசெய்யுங்குரவனின்றுன்சொற்றவச்சீடரெல்லாம்
மதியினிலையந்தீர்ந்துமறைப்பொருளுணர்ந்திருந்தார்.

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# குருஸ்துதி.

---

## பதினான்குசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

காயநின்பூசை செய்யவும் வாக்கு
[illegible]னத்தநின் றுதிபுரிந் திடவும்
கருத்துநின் சொரூபத் தியானமேசெயவுங்
கவினுநின் சந்நிதா னத்தில்
ஏயவெங் கதிர்முன் விளக்கொளி குன்றி
யிருப்பது போலவென் போதம்
இருப்பவு மொருயா னின்னொடுமொன்று
யிரண்டறக் கலக்குநா ளுளதோ
தூயசிற் சொரூபா நந்ததே சிகனே
தொண்டர்கள் வழுத்துதே சிகனே
சுருதியின் முடிவி லிலகுதே சிகனே
சுகமருள் விகிர்ததே சிகனே
மாயவெம்பிறவி யகற்றுதே சிகனே
மறைப்பொரு ளுணர்த்துதே சிகனே
வளப்பெருஞ் செல்வத் திருப்பரங்கிரிவாழ்
மாசறு ஞானதே சிகனே

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மறைமலர்க்காப்போய்ப்புகழ்மலரொடுத்து
மன்னுபாதத்தொடைபுனைந்தெனது
குறைதவிரருட்டாண்மேல்விழுமுமலங்
கொல்புயமணியுநாளுளதோ
நறைமலிகனியேகன்னலங்குழம்பே
நான்மறைவடித்ததெள்ளமுதே
தறைமுதல்பரவுஞ்சிதம்பராநந்த
சற்குருமூர்த்திநாயகமே.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மன்னுமாமறைமாலயனுணர்வரு
மாசறுசுயஞ்சோதி
தன்னைநேருஞசலகுருவெனத்
தண்ணருள்வடிவாகி
அன்னைபோல்வருமவனடிக்கமலங்க
ளம்மவோவெளிகாண்பான்
என்னமாதவஞ்செய்திவணிருந்தவோ
வெனதுகண்ணிணைதாமே.

குறள்வெண்செந்துறை.

திருச்சிற்றம்பலச்செல்வனருட்கழல்
கருத்திற்றங்குறிற்கதிபெறல்சதமே.

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

௨

கணபதிதுணை.

சிவபெருமான் திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

## பாயிரம்.

### கடவுள்வணக்கம்.

கலிவிருத்தம்.

நிலநீரனலநிலம்வெளிநிலவாதவனணுவோ
டுலகாயவையாகாதொளிரொருசிற்சுகவடிவைப்
பலவாமுலகொருதன்னுயர்படிவம்மெனவுணர்வான்
நிலவார்மனத்துள்ளன்பொடுநினையாதுறநினைவாம். ()

கட்டளைக்கலிப்பா.

எந்தநாயகன் மாயையையீன்றதற் கிணையிறந்தையு
மின்புறச் சேர்ந்ததற், கந்தமார்தவ னும்மதினுற்றன
தளவிலாத குணங்களிலங்கியே, சந்தமாமக வும்மெ
னவாகியுஞ் சற்றுமிந்தத் தருமமுருதவன், அந்தவோர்
கரு ணாகரனாகிய வமலவீசனடிக டுதிசெய்வாம். (௨)

கலிவிருத்தம்.

உலகமோடுயிருயர்பரமாகியவனைத்தும்
இலகுமாமறையிமையவருணர்வருமெந்த
அலகிலாதமெய்யறிவின்பத்தாற்களித்திருந்தே
நிலவுமோவந்தநிசரில்கூத்தனைப்பணிந்திடுவாம். (௩)

குமாரதேவர்துதி.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மாதவனு மலரவனு நான்மறையு மின்னும் ௮
மதித்துரைசெய் திடற்கரிய மன்னுபரம் பொருளே
நாதமுடிவாமருளாற் றிருவுருக்கொண் டெய்தி
நாயேனைவலிந்தீர்த்து நன்மொழிகள்புகன்றே
ஆதரவினெடுந்தனடி யவர்குழுவிற்கூட்டி
ஆளாக்கியடியேன்றன் முடியிலடிசூட்டும்
மேதகுமெவ்வுயிர்க்குமுயர் வீடெளிதினளிக்கும்
விருத்தகிரி யமர்குமர தேவனடி பணிவாம். (௪)

சிதம்பரசுவாமிகள்துதி.

உலகமதிலொன்றுமறியாதுழலுமடியேற்
குண்மைநெறிகாட்டியதிலொழுக்கியநுதிரமும்
கலைபுகன்மெய்த்திருவேடந்தரித்திடவுமருளிக்
கருணைதிருப்பெயரருளியமலபஞ்சாக்கரத்தால்

இலகுபதிபசுபாசப்பொருணிலைகடெருட்டி
இன்பமுறச்சுத்தநிலைதெரித்தெனையுமாண்ட
அலகிலருளுருவர்குஞ்சிதம்பரமெய்ஞ்ஞான
ஆரியன்பொற்பதநினைந்துவாழ்த்திவணங்குவனே.

## அவையடக்கம்.

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

எவனருட்பார்வையாலேயிருவிதவவத்தைநீங்கிச்
சிவமுணர்ஞானந்தோன்றிச்சிற்சுகப்பதப்பேறெய்தும்
அவனருளாலேதத்துவஞானதீபிகைநூலாமென்
றுவமையிலறிஞர்முன்யானுரைத்தலிங்கழகிற்றம்மா. ( )

பாயிரமுற்றிற்று.

---

# நூல்.

ஆல்-வது

## ஆத்துமாநுபவசாரம்.

---

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சிவமேஞானதேசிகனுத் திகழக்கண்டோ ரருந்தவனெம், பவமேவெனைநின் திருநோக்க மதனாற்பாச மைந்தொழித்து, நவமாமொனது சொரூபமதை நாடிச் சிவமா யமைந்திடநீ, தவலாதருள்ல் வேண்டுமெனச் சாற்றியன்போ டடிபணிந்தான். (க)

வந்துபணிந்தான் முகநோக்கி மைந்தாநின தாசொரூபமதை, உந்துகரத்தா மலகமென வுணர்த்துநெறியை யுரைக்குமொரு, சந்தத்தொழினங் கடனுகுஞ் சாற்றுமாறுன் னிதயத்துப், பந்தமறவே கொண்டுணரும் பரநின்றனக்கா மெனவருளி. (உ)

அன்பாயமைந்த வுளத்தானு மருட்கணோக்க மதனுனும், இன்பாஞ்சரண கரபரிச மியலும்வாக்கு களினுனும், வன்பாமலங்கள் பொடிசெய்து மன்னுஞ்சிவநின் சொரூபமெனத், தன்பானதைநீக் கிடும்பரம சுகத்தை யளித்து மெனத்தொடங்கி. (ங)

அருமாமறையி னுட்பொருளை யருள்வோநினது நடைகண்டே, ஒருபாவனையு நினையாதுன் னுளநம் வசனப் பேரமுதை, இருகாதெனும்வாய் கொடுபருகி லிணையிலின்ப மடைவையெனக், குருநாதனுமோர் வசனுர்த்தங் கூறவுளங்கொண் டருள்செய்வான். (ச)

வேதமதனிற் புருடார்த்தம் விளங்கவுரைக்கு நான் கவற்றுள், ஈதலுறுநல் லறம்பொருளோ டின்பமூன்று மிகந்தரிய, போதமதனு லுறும்வீடே புருடற்கரிய ப யனென்று, நாதனொருமா வாக்கியத்தான் ஞானமருளி னன்மகற்கே. (ரு)

உடலம்பொறியோ டுயிர்கரண முடையோ னவித் தைமுதலாகச், சடமதாயு மசத்தாயுந் தன்னுலறியப் ப டுமெவற்றிற், கிடமதாகு மறிவுருவே யிலங்குமினது மெ ய்யுருவாம், மடமைநீக்கி யாமருளு மதியாற்காணத் தோன்றிடுமே. (சு)

இந்தவுடலிற் சேர்பொறிக ளிடத்தேயிருந் தைம்பு லன்களையும், எந்தவறிவிங் கறிகின்ற திணையிலதுநின் னுருவாகும், பந்தமறவே யதைச்சுட்டிப் பார்க்கிற்சூ நியமதாகும், அந்தவறிவைத் தானெனநன் கறிந்தங்க துவா யுறல்வேண்டும். (எ)

பற்றும்விடயந் தனைவிடுத்தே பகருமற்றோர் விடய முளம், பற்றும்போதந் நடுநிலையே பரமாநந்த சிதம்ப ரமாம், உற்றவஃதுன் சொரூபமென வுணர்வாயிதுவே நூன்முடிபாம், சற்றுமிதனி லையமிலைச் சாற்றும் வ சனஞ் சத்தியமே. (அ)

நானொன்றே கேட்பவனாய் நவிருனெளிர்வ தறி யாது, நானொன்றே நீகேட்டன் ஞாலமதிலோர் பெரு ம்பேதை, நானேகூட்ட மதிற்சென்று நாடாதென்னை

க் கைவிடுத்தேன், கோனேயென்னைக் கைக்கொளநீ கூட்டியருளென் பதற்கிணையே. (கூ)

இருக்குமிடஞ்சே ணாகவதை யெங்கென்றோடித் தேடுவர்போல், இருக்கின்முடிவாம் வாக்கியத்தி னிலக்கியார்த்த வறிவாயே, இருக்குந்தனையே யுணராம லிங்கங்கென்றே பார்ப்பதுவாய், இருக்குமந்த வியலறிவே யிணையினினது மெய்யுருவாம். (கO)

அவத்தைமூன்றி னுளவறிவை யநுபோகித்து மறியாய்போல், அவத்தைமயனு யழிவதுவு மறிவக்கழ கோவக்கொடிய, அவத்தைமூன்று மொன்றிடத்தொன் றழிந்தேசடமாய்த் திரிந்திடுமால், அவத்தைகளிலோர் படித்தாகின் றகமென்றெளிரு மறிவாவாய். (கக)

அநியமாகு முலகிலறி வறியாமைகடாம் வரன்முறையே, அநியமிலாத வறிவினிடத் தவைதாம் வருதலடுக்குமதோ, அநியமிலாத வென்னிடத்தே யநுபோகமதா மெனச்சொலினீ, அநியமாயே யிருந்தவற்றை யறிதலானிற் கியல்பன்றே. (கஉ)

கதிராற்றோன்றுங் கார்முகிலே காணுதஃதை மறைப்பினுமக், கதிரைக்காணுங் கண்களுக்கே காட்டாதொளிக்கு மிவ்விதமும், கதிரோவிளக்கு மதுபோலக் கழறஞ்ஞான மறைப்பினுமக், கதிர்கொளறிவை யன்றெனநீ கருத்தினுணர்ந்து தெளிகுவையே. (கங)

அறிவாந்தானே மூவவத்தை யறியுஞ்சகச வநுபவ மார், குறியாந்தனக்கு மறியாமை கூடுந்தகவேது மைமைந்தா, செறிவாஞ்சுழுத்தி தனிலறியுஞ் செய்கையிலேயே யெனில்விருத்திப், பிறிவாற்பொருந்து மாயினுமிப் பேதமறிந்த வறிவிலையோ. (௧௪)

நாமோரகண்ட வறிவாயி னமக்கோரிடத்து மறியாமை, ஆமோவதனால் விருத்திகொண்டு மறிவாயின்ப மடைவமெனின், போமோவஞ்ஞா னம்புகினும் போதமின்பா லயமன்றோ, மாமோகந்தா னகல்சுழுத்தி மன்னியறிவி லநுபவிப்பாய். (௧௫)

அகிலமதனை யொழித்தின்ப மடையக்கருதிற் சுழுத்தியினில், அகிலமொழிந்தும் பேரின்ப மடைந்தாரு ளரோ வாதலினால், சகலவுருப்பேர் மயமான சகங்கடனது வடிவென்றே, தகவோடறியி னப்பொழுதே சகசாநந்தக் கடல்படிவாய். (௧௬)

எந்தவின்ப மெதனாலே யெப்போதடைந்தா யதன்பின்னர், அந்தவின்ப மதனீக்கத் தப்போதேவீந் தரந்தைதரும், இந்தவின்ப மியாதொன்று மில்லாவிடத்திற் றன்னாலே, எந்தநாளுந் தானேயா யிலகப்பெறிலெவ் வணம்போமால். (௧எ)

அலையுநினைவத் தன்மையினை யகலவிடுத்தோர் நிலையாகி, மலையினிலைமை யாரறிவின் மன்னும்பொழுதே சுகமதெனும், கலைமந்தணத்தை யுணராதோர் க

டையாமூலக விடயமதே, தொலைவிலின்பென் றதற்
கென்றுஞ் சுணங்கன்றனைப்போற் சுழலுவரோ. (கஅ)

விருத்தியிந்தி யங்களினும் வெறிதாஞ்சுழுத்தி யினி
லுமுற, விருத்தியடையா தமலமதாய் விமலவறிவோ
டபேதநிலை, அருத்தியுடனே யநவரத மாகப்பழகி ல
றைந்தபடி, திருத்திக்கெல்லா மாலயமாஞ் சிவோக
மெனவே திகழ்ந்திடுவாய். (கக)

எல்லாநின்று லுண்டாகி யிலங்கியின்ப மாமதனுல்,
சொல்லான்மனத்தா னறிவரிய சுகமெய்யறிவுன் னுரு
வதனே, எல்லாமொடுங்குஞ் சுழுத்தியிலு மியலாதா
ன கனவினிலும், பொல்லாவிடய நனவினிலும் பொ
ருந்தநோக்கி நிலைபெறுவாய். (உ0)

நானுவிதமாய்க் கனவிலுரு நாமமாகி யழிந்திடத்த
ந், நானுவிதங்க ளறிந்தவனு நாசமாகி யதனுடனே,
போனுனென்ப தெங்குமெந்தப் போதுமுணாப்பா ரிலை
யதுபோல், தானுகியசிற் சத்தழியா சகந்தானழிந்த வி
டத்தினுமே. (உக)

கனவிற்றனையே பிணமாகக் காட்டத்திருத்தி யெரி
கொளுத்தத், தினமுமறிந்த வறிவெந்தத் தேகேந்திரிய
கரணமொடும், இனமுற்றென்றுய்ச் சேர்ந்தறிந்த தி
யம்பாயதனு லவற்றினுக்சோர், அனியமாய்முன் றவத்
தையையு மறியுமறிவே தனதுருவாம். (உஉ)

சுகியாயிருந்துந் துயில்கனவிற் றுக்கமயனு மொரு வனைப்போல், சுகமார்தான்றன் சங்கற்பத் தொடர்பா ற்சீவ வடிவாகி, மிகவே துன்பத் துற்றுழல்வன் மிளிர் மெய்யுணர்வா லத்தொடர்பைத், தகவேநீக்கித் தனைய றியிற் ருனாந்த னுயிருப்பன். (உரு)

தன்னுற்றோன்றுங் கனவதனிற் றுனோக வடிவா கிப், பின்னுத்மகனு யிருந்ததனுற் பிறக்குமின்ப துன் பங்கள், பின்னுருடலை நனவதனிற் பிறித்தன்னியமாய் த் தானறியின், உன்னேரின்ப துன்பமுண்டோ வுணர் ந்தோர்க்கமக்கு மில்லையதுபோல். (உச)

காணுங்கனவை விழித்தபின்னர்க் கடும்பொய்யாக க்காண்பதற்கே, பேணுமுயற்சி செயாதிருந்தும் பிறழ் பொய்யாக வதுதோன்றும், பூணுமதன்றன் ரகசியத் தைப் போதத்தூன்றி யுணர்வையெனின், காணியகில மப்பொழுதே கனவாய்நினது நிலைவெளியாம். (உரு)

கனவிற்காணும் பொருளெல்லாங் கனவைக்கண்ட தானேயாய், நனவிற்றோன்று மதுபோல நனவினினை வாற்றோன்றுலகும், நனவைக்காணு நாமேயாய்நம்மிற் காணிற் குறையுளதோ, நினைவிலிதைநீ யூகித்து நிற்பா யபேத நிலையாயே. (உசு)

அறிவேநினைவாய் நினைவுலகா யமருமதனை யறுதின மும், அறிவாஞேக்கி யதன்மூல மானநினைவி லபேதிக்

கில், அறிவாந்தனது சொருபமதி லபேதமாயந் நினைவ டங்கும், அறிவேயநிய மிலாதொளிரு மப்போதத்து விதநிலையாம். (உஎ)

உலகமுயிர்கள் பரமிவையுன் னுன்னலாகு முனது ருவம், உலகமுயிர்கள் பரமாசா துணர்வேயாகு மாத லினால், உலகமுயிர்கள் பரமாகு முன்னருனாய் நோக் கியிடின், உலகமுயிர்கள் பரந்தானுயொளிருமுள்ள நி லையிதுவே. (உஅ)

மனமேயுலக மஃதிலையேன் மன்னுமுலகெவ் விடத் துண்டாம், நனவுகனவுகளின் மனமுநன்றுயிருதத லா னுலகுண், டுனவேசுழுத்தி தனின்மனமு மொளிராத தனு னுலகில்லை, அனகாவந்த நினைவுமுன தறிவிலா ரோ பிதமாமே. (உக)

நினைவுவந்த தென்றறியி னினைவினிலையு முளதாகும், நினைவினினைவைக் கொண்டுகே நெறியாலதனை நோக்கி யிடின், அனகநினது சொருபமது மப்போதகண்ட மா யொளிரும், நினைவுமுலகு மொருதானுய் நிசமுமந்த நி லைதனிலே. (௩௦)

தானுமறிவே பிரமமதாந் தனதுநினைவே மாயைய தாம்,நானுவுருவ நாமங்க ணவிலுமுலக முயிர்பரமாம், பானுகரமாம் விருத்தியெனும் பரசத்தியினு லிவ்வண் ணம், ஆனுவருப வந்தனிலே யறிவோர்க்கரந்தை யிலை யென்பார். (௩௧)

இல்லாநீல நிறங்கொண்டே யியம்புங்ககனந் தனே வருவாச், சொல்லாநின்ற தன்மையெனச் சொரூபந்த ாக்கிதெனவொன்றும்,இல்லாநினைவாற்பிரமமதை யி ருக்காமுலகென்பார்மடவர், எல்லாமுணர்ந்தோரது தனேயே யிணையிலபவா தமதென்பார். (௩௨)

தன்னிற்றோன்று நினைவான சகத்திலவாவைத் தா னுறிஞேர், தன்னினினைவாங் கனவிடத்துந் தனக்கவ் வாசை யுறல்வேண்டும், அன்னகனவி லும்முறுமே லப் போதகில மின்புருவாய்ச், சொன்னமூல வறிவுமொ ரு சூக்குவடிவாய்த் திரிந்திடுமால். (௩௩)

உலகமெய்யென் றெண்ணினன்றோ வுவர்ப்புமதனி லுண்டாகும், உலகினுவர்ப்பினுலுமன மொளியின்வெ யிலிற் புழுவாகும், உலகமெனுமோருளைக்குளையுமொ ருதானென்றே யுணர்வையெனின், உலகம்பொருளா யொளிராதுன் னுளமாநந்த முற்றிடுமே. ௩௪)

புரியைப்புரியென் றுண்மையுணர் போதுபொய்யா ம் பணியணியைப், புரியைமுழுவ தும்மறந்து பொரு ளாயெண்ண முனிவாசை, வருவதுளதோ வதுபோல மலமிறனேயே யுணர்ந்தபினும், வருவதிலையா மவ்விர ண்டும் வையம்பொய்யா தலினுலே. (௩௫)

பொன்னென்றுலே பணிபலவாய்ப் பொருந்தவவற் றை யிருபகுப்பாப், பொன்னேமறந்து மேல்கிழாப் புர்

தியிடைக்கொண் டவாவெகுளி, சொன்னவவற்றில்
ரன்முறையோ சுகமெய்யறிவே சகமானுல்,அன்னவ
லவ் விரண்டுமுய்த்த லழகாங்கொல்லோ வறிஞருக்கே

அடியுமுடியுந் தானேயா யறிந்தவுடலி னபிமான
முடிநன்றடிதீ தெனவிருப்பு முனிவுங்கோட லுன
கொலோ, அடியுநடுவு முடிவுமிலா வகண்டசிவமோத
லகென்ருல், படியையிரண்டாக் கருதியிச்சை பாக்
முனிவு கொளனெறியோ. (ரு௭)

அறிவில்விருப்பு மானசக மதனில்வெறுப்பு முறுவ
னெனின், அறிவுதனக்குப் புறம்பாயவ் வகில
செயல்புரிக, பிறிவின்மறைசொல் லியதென்னிற் பே
மதியோர்க் குரைத்ததது, செறியுமறிவு முலகுமொரு
சிவமானேர்க்கு மென்சொலுமே. (ரு௮)

ஆசைவெறுப்புக் கொளவென்ற வதனுட்கருத்தைப்
புகலுவன்கேள், பாசவுலகி னேதுவெனப் பகருநினை வி
லுவர்ப்புமதை, நாசஞ்செயுமோர் நெறியதனி னணுக
விருப்பு மாமிதனைப், பேசில்வழக்கா மாதலினற் பே
சாதுரைத்த படிமுயல்வாய். (ரு௯)

ஆசைமுனிவு முண்டாகி ஞண்டேயுலக மங்கியமா
ம், பீசவடிவா மவைநீங்கிற் பேதமிலதாந் தன்னுருவே,
மாசதறவெங் கனுமென்று மன்னியெவையு மாயிருக்
க, நேசமுனிவங் கெங்ஙன்வரு நினைவிலிதைநீ யாய்ந்
திடுவாய். (௬௦)

உன்னலீதென் றனப்படுமே லுளதாமுருவ நாமம து, தன்னுலன்றே நலந்தீங்கு சார்ந்துவிழைத லொடு வெகுளி, மன்னுயிற்கு மவைபவமாம் வகுக்குமிவற்றி ன் காரணந்தான், உன்னுமனமென் றறிந்ததனை யொ டுக்கிலெல்லா மொழிந்திடுமே. (உக)

அறிவாந்தன்னி லுதித்திருந்தே யழியுமகில மெனவ றிந்தால், பிறிவாயொன்றின் விருப்புவர்ப்புப் பிறக்கு ங்கொல்லோ பேதைமையால், அறிவேயகில மெனக் காணு தவர்களளவில் கலைபயின்றும், சிறியார்மணற் சோறுண்டுவக்குந் திறம்போற்றிரிவ ரெனத்தெரிவாய்.

கனவுசுழுத்தி தனிற்றேன்று காணுநனவி னினைவா க, அனகவதுபோ விச்சகமு மறிவாந்துரிய மதினினை வாத், தினமுமொளிரு மதீதமதிற் சிறிதுமொளிரா தொருதானும், கனசிற்சொருபந் தோன்றுமதே கதி யாமிதுகட் டுளையாமே. (உங)

நனவினுடலுங் கனவகமு நனவிலிருத்த லானனவு ம், கனவுநனவிற் றேன்றமுறுங் கனவினினைவு மாத் திரத்தால், கனவதொன்றே தோன்றுமிந்தக் கருத்தே போலத் துரியமதில், நினைவுமறிவுந் தோன்றலுறு நிக ழுமதீதத் தறிவொன்றே. (உச)

கனவினனவு காணுது காணுங்கனவு மாத்திரமே, நனவிலுபய வவத்தைகளு நலமாவிளங்கு மதுபோல

க், கனசிற்சொரூப மதிற்ருனே களங்கமின்றி விளங்கியுறம், நினைவிலுலகு மொருசிவமு நீங்காதிருந்த நிலவிடுமே. (சடு)

போதமவத்தை மூன்றிடத்தும் புகலும்விருத்தி யிரண்டிடத்தும், பூதவுலகோ ரிடத்துமுறப் பொருந்தஞ் சகஞ்சொப் பனமதனில், சாதலடைய மனஞ்சுழுத்தி தனிலேயடங்கு மவித்தையது, வேதமுடிவா மறிவதனில் வீயும்வீயா தறிவெங்கும். (சசு)

உலகமழிந்துந் தானிருந்தே யொளிருநிலையைச் சுழுத்திகொடும், உலகமெல்லாந் தானேயா யொளிருநிலையைக் கனவுகொடும், நிலவுமுகத் தநுபவமா நெறியுற்றுணர்வோர்க் கெவ்விடத்தும், செலவிலறிவு நினைவுமொரு சின்மாத்திரவீ லையதாமே. (சஎ)

தானேமூன்று காலத்துஞ் சத்தாவிருத்த லானுமுள்ள, தானேகருவித் துணையாதுந் தழுவாதறித லானுமுணர், தானேயென்றும் விடப்படாத் தன்மையானுந் தனிமறைதேர், தானேசச்சி தாநந்த சாக்ஷியான சிவரூபம். (சஅ)

தன்னிற்ருேன்றுஞ் சகமொருகாற் றரியாதழித லானஃது, தன்னிற்ருேன்றி விளங்கியிடாத் தகைமையானன் னதுசெவ்வே, உன்னினரிய தாயினும்விட் டொழிக்கப்படுத லானசத்தா, மன்னிச்சடமாய்த் துக்கமதாய் வார்த்தைமட்டாய் வழங்கிடுமே. (சகூ)

இருத்தலான தானென்றே யிலங்குமதுவே யின்பம தாம், இருத்தலான தன்மையிலா விந்தவுலக மிலங்கு வதில், இருத்தலொளிர்த லிலாவதனுக் கெங்ஙனுதிக்கு ஞ் சுகமம்மால், இருத்தலாதி யுடையதுபோ லிருக்குஞ் சகமென் றுணர்ந்திடுவாய். (ருo)

ஒன்றேயுணர்வு வேறில்லை யுளதேலதவு மிதனுலே, நன்றுவறியப் படுபொருளா நணுகிச்சடமா யழிந்திடு மால், அன்றுமெனுநின் னினைவினைவிட் டறிவாயமர்ந் தா லப்பொழுதே, ஒன்றுஞ்சுகமு நீயேயா யொளிர் வாய்சுருதி யுண்மையிதே. (ருக)

எல்லாந்தனது நினைவாயே யிலங்குமஃதுந் தனைவி டவே, றல்லாதொளிரு மெனவுணர்ந்தோ ராசித்துல கை நினைத்திடவும், சொல்லால்வேறென் றுரைத்திட வுந் தவக்கான்மெய்யென் றியற்றிடவும், கல்லாதவர் போன் முயலுதலுங் கருமமாமோ கருதுவையே. (ருஉ)

சென்றகனவும் வருங்கனவுஞ் செகத்திலெவர்க ளெ ங்கேனும், நின்றுநிகழ்வ் தாக்காணு நெறிதானுளதே னிமெய்யாச், சென்றநாளின் வருநாளின் செகத்தைநி னைக்க லாகுநிகழ், கின்றதெனிலோ கனவெனநின் கி ளருஞ்சொருபத் தாரோபம். (ருங)

கனவிலனந்த விதமுறினுங் கழன்றுநனவை யுறில ந்தக், கனவின்பொருள்பொய் யாய்நினைவிற் காணும

துபோ லிங்ஙனவும், தனதுசுயமாந் துரியமுறிற் சங்க
ற்பத்தே கனவதென, அனகவொளிரு மதனுனம் மறி
விற்காணி யாதுளையாய். (நுச)

கனவிலநேக ரிடத்தொருவன் கனமாஞான வஞ்ஞா
னப், பினமுற்றநேக விதமாகப் பிறப்பனெனினு மதில
வனுக், குனுநற்சுபாவ மொன்றிலைபோ லுணர்வாந்தன
து நினைவுருவாய்க், கனியிவ்வுலகம் பலவிதமாக் காட்
டுமெனினுந் தனக்கிலையே. (நுரு)

நன்றுங்கனவைக் காண்பதற்கு நலமில்கனவை
யொழிப்பதற்கும், குன்றுமுயற்சி நனவிடத்தே குறித்
துச்செய்வா ரிலாததுபோல், ஒன்றுந்தனது நினைவத
னு லுலகாமெனத்தே ருளத்தினருக், கன்றுமெனவோ
ர் பொருளுமிலை யனைத்தும்விநோத மாய்விடுமே. ()

கடங்கள்விவகா ரித்தலினற் கடவிண்டானு மசைவ
துபோல், கடன்களிடத்திற் காண்பரவை காணுதஃதை
க் காணிலதின், றிடங்கொளுலகத் திதுபோல வியங்
குநாம வுருவுகளால், இடங்கொளுண்மை யறிவின்பத்
திசைக்கும்விகார மிலதாமே. (நள)

கதிராலொளியு மதனெழிவாற் கங்குலதுவுங் ககன
மதில், சதுராயுறவவெனவறிந்தாற் சாற்றுமதற்கொன்
றுரித்தாமோ, அதுபோற்சகல கேவலங்க ளறிவினிடத்

த வெனினுமறி, வதுவவ்விரண்டி னியல்பன்றென் ற றியக்ககன நின்வடிவே. (ருஅ)

அலையுமநிலத் துதித்தொடுங்கா தமர்சித்திரத்தின் றீ பமென, உலையும்பொய்ம்மா யையினலே யுதித்தலொடு ங்க லொருகாலும், சலையின்முடிவா நின்னிடத்திற் கா ணினிலையா தலினலே, நிலவுமிதைநீ யாரியனு னிமல விசாரஞ்செய்தறிவாய். (ருகூ)

இந்தவருண னுதயமதா யெழினுமத்த மனமாகி, அ ந்தமுறவே யொழிந்திடினு மலர்தல்குவித லுளவாகா, சந்தமுறுமா டககஞ்சந் தனக்கிங்கதுபோ லொளியாரு ம், சிந்தையுறினு மறினுமிலைச் சித்தாநினக்கோர் சேர்த் தாழ்வே. (சூ0)

விண்ணிற்றேன்றும் பலவடிவாம் விகற்பமதனி வி ருந்தேயவ், விண்ணேயாது.செயுமதுபோல் விருத்திய நேக வுருப்பெயராக், கண்ணிற்றேன்று மாயினுமக் க ரியையிவைதா மென்செயலாம், கண்ணிலபேத மாய் நிகழுங் களங்கமகன்ற கருத்தினர்க்கே. (சூக)

சின்மாத்திரமாம் பெருவெளியிற் சிந்தையாகுங் க ரியமுகில், சொன்மாத்திரமா முலகமெனுந் தொலைவி ன்மழையைப் பெய்திடினும், எண்மாத்திரமு நிலைகல ங்கா தியல்பாயென்று நின்னின்முனே, முண்மாத்திர மு மெய்யன்று முற்றும்விநோத மெனக்காண்பாய். ()

பரவையிடத்தோ ரநிலமதிற் பகருமலேயும் புற்றரு கில், புரியிலிருளா லுரகமதும் புகலுங்கான றனிற்கள ற்ருல், உரியசலமு முதிப்பனபோ லுலகாதிகளு நினைவ தனுல், புரணவறிவிற் ருேன்றிடினும் புணாதீர் தனில்வே றலவவையே. (௬௩)

நானுவிதமாஞ் சகமுமதை நாடுமுயிரு மதற்கொளி யை, ஞானகரனு யிருந்தளிக்கு நாதன்ருனு மின்மல மாய்த், தானுயொளிரு மறிவிடத்தே சாற்றுநினைவு மா த்திரமாம், ஆனுவகண்ட வந்நினைவு மதனிலநிய மாகா தே. (௬௪)

கண்டவறிவல் லாதுலகங் காணின்வேறென் றுணா த்திடலாம், விண்டவறிவைச் செறியுலகம் விசும்பி லநி யப் பொருள்போலும், ஒண்டா தையெனி னவ்விசும் பி னுருவையூகித் துணரினஃ, துண்டோவதினேர் பே தமதா யுலகுமதுபோற் பேதமன்றே. (௬௫)

எந்தப்பொருளுந் தோன்றுதன்மு னிலகுங்ககன மி தையறியா, தந்தப்பொருளைக் காண்பரதை யடுக்காதி தையே யுறநோக்கின், விந்தைப்பொருளாஞ் சகநீங்கி விண்ணேவிளங்கு மதுபோலப், பந்துவுருவ நாமமும் போய்ப்பரமேவிளங்கு மறிவையுறின். (௬௬)

தோன்றுநினைவைத் தானேயாய்த் துரியவறிவா லெ ய்பொழுதும், ஊன்றிநோக்கி னிலதாகு முளதேலஃதி

ன் றன்மையதாத், தோன்றுமுலகை யறிபவனுய்த்தொடர்பற்றிருக்கி னப்பொழுதே, சான்றதாகுந் தன்னிடத்திற் சகமுஞ்சொல்லாய் முடிந்திடுமே. (சுஎ)

சிறுவர்குழுமி லீலமணஞ் செய்துகொளினும் பொய்யிதென, அறியும்பருவத் தறிந்தண்மை யாகும்வதுவைக் கிசைதலெனச், செறியுந்தமது நினைவிடத்திற் செகமெய்யாகத் தோன்றினும்பின், அறிவையறியிற் சகமித்தை யாமென்றறிவு தனிற்சேர்வார். (சுஅ)

செறியும்படமும் வன்னமுமார் சித்திரங்க ளெனுமவையும், பொறியுற்றுணரி னொருபடமாப் புந்தியதனிற் றேன்றுதல்போல், அறிவுநினைவு மகிலமுமோ ரமலசொரூப மேயென்ன, அறிவுற்றமல சமாதியினி லறியினென்று யமர்ந்திடுமே. (சுகூ)

நமதுசத்தியதனுலே நாமரூபமாமுலகில், நமதுசொரூப விலக்கணத்தை நாடினுமே தோன்றியது, நமதுபாலாரோபிதமா நழுவுமிலையேற் றன்மயத்தால், நமதுசொரூப மாய்நிகழு நாமேயனைத்து மாதலினுல். ()

உலகிற்கன்ன லினைக்கல்லா வுணர்வார்க்கின்ப முண்டாமோ, இலகுகண்டா யறிபவர்க்கே யின்புண்டது போ லின்மையதாம், உலகையுருநா மங்களென வுணர்வோர்க்கின்ப முற்றிடுமோ, நிலவுமுண்மை யின்பென்றே நிலைகொள்வோர்க்கே யின்புறுமால். (எக)

பொன்னையின்ன தெனவறிந்தாற் பூண்போயொழியும் பொன்னாகிப், பொன்னையின்ன தெனவறியான் புத்திக்கொளிரும் பூண்களெனத், "தன்னையின்னா னெனவறிந்தாற் சகம்போயொழியுந் தானாகித், தன்னையின்னா னெனவறியான் றனக்கேவிரிந்த சகமாமே.' (௭௨)

பொன்னிற்றோன்றும் பணிகளெலாம் பொய்யேயெனினு மப்பொய்யும், சொன்னமதனின் வேறாகத் தோன்றாததுபோ லிவ்வுலகம், நின்னிற்றோன்று மாயினுமந் நிலையிலுலக நினக்கயலோ, தன்னில்விவகா ரந்தனிலச் சகமோர்லீலை யெனத்தோன்றும். (௭௩)

உலகம்வேறென் றன்னுவதே யுற்றபந்த மாதலினால்
உலகநீயென் றுணர்ந்திடுவா யுண்மைவீடு மஃதேயாம்
நிலைமையாகு நின்னுருவே நிலவுசகமா வுறுதலினால்
உலகுநீயாயுறுமிந்த வுண்மைமறையு மறையுமரோ. ()

ஈசன்முதலா வெறும்பீறு வெல்லாருள்ளு மிருந்ததிதல், பாசமறுநின் னறிவுருவே பார்க்கினதனின் வேறில்லை, நேசமொடுநின் னினைவாகி நிகழ்சொப்பனத்தே கண்டறிவாய், நாசமாகுமுடல்விடுத்தே நானென்பதத்தின் பொருளறிவோய். (௭௫)

நினதுமாயாசத்தியினா னீயேயுலகாத் தோன்றிடுவை, நினதுஞானசத்தியினா னீயேசிவமாத் தோன்றிடுவை, கனவிச்சத்தி களும்வேறாக் கருதப்படாநின் பூர

ணத்தே, அனகவிதுநின் சந்நிதியி னமைந்தகூத்தென் றறிந்தமைவாய். (எசு)

ஆசையெனும்பேீ யணுகாம லரியநிராஸை யெனுநீற் றைப், பேசுமுலக மெனுஞ்சொற்குப் பிழையில்பொரு ளாம் பிரமமெனும், நாசமணுகா மந்திரத்தை நன்றுத் தியானித் தெறியினதன், மோசமொழிந்தக் கணப்பொ ழுதே முத்தியின்பம் விளைந்திடுமால். (எஎ)

ஏதமில்லா விரத்தியெனு மெழிலாபரணம் பூண் டொளிரும், பேதமகற்று மருண்ஞானப் பெரியவுடை யை யணிந்தமைந்த, கோதின்மனமாங் கல்யாணக் கோமாட் டியைச்சேர்ந் தவற்குவெய்ய, சாதலுடனே பிறப்பறுநற் றனிவீட்டின்பஞ் சார்ந்திடுமால். (எஅ)

சித்தத்தசைவை யறுத்திடுமோர் சின்மாத்திரமாந் தி யானத்தால், நித்தமுலையா முயற்சியொடு நீடாதரவா ய்ப்பயின்றுவரின், கத்தத்துவம்போ யுபசாந்தக்கதியி விளைப்பாறுதலடைந்தே, பத்துத்திசையுங் கடந்தொ ளிரும் பரமாநந்தவடிவாவாய். (எகூ)

மனத்தினசைவே துன்பமசை வின்மையின்ப மாத லினுல், சனிக்குமசைவைத் தியானத்தாற் றகையினு பசாந் தமதாமவ், வனத்தவிருப்பே தவமுடிவும் வா னோர்க்கரிய பேரமுதும், கனத்தமுத்திப் பதமுமென க் கழறுமுயர்வே தாந்தமெலாம். (அ௦)

மனமாமெழிற்பூங் கொடிக்கூறு வளைக்குமசுத்த வா
தனையாம், தனிமுட்புதரா யுலகுவந்து சாற்றுஞ்சுத்த
வாதனையாம், நனிகூர்வாளாற் சேதிக்கி னுசமாமப் பூ
ங்கொடியும், கனசிற்சுகநீ ரான்வளர்ந்து கவினுற்றலர்
ந்து பயன்றருமால். (அக)

அரிதாங்குணத்தை யுளனுத லமையுமசுத்த வாதனை
யைப், பெரிதாஞ்சுத்த வாதனையாற் பேர்த்துநாச மு
றச்செய்தல், ஒருநாமகண்ட சிவமேயா முலகிலென்
ற விம்மூன்றும், சரியாயென்று நிரந்தரமாய்ச் சாதித்
திடினீ சுகம்பெறுவாய். (அஉ)

எந்தநினைவும் வருமுன்ன ரியல்பாயிருக்கு நிலைமே
வி, அந்தவிடமா மறிவுருவா யமர்ந்தவ்வறிவு கொண்
டென்றும்; பந்தவாத னையினுலே பரவுநினைவு கெடமு
யலின், சிந்தையுடனவ் வாதனையுஞ் சிதைந்தாநந்தக்
கடல்படிவாய். (அங)

தானேசிவமென் றறிந்திடினுந் தனக்கவ் வறிவித்
தசைக்கூடு, தானேநீங்கும் வரையினுமோர் தடையற்
றெளிர வேண்டுமொப்பின், ஞானுகரமாம் விருத்தியு
ட னல்வாதனையைக் கொண்டென்றும், கானுடசலத்
தெங்கேனுங் களிப்போடுனது நாள்கழிப்பாய். (அச)

என்றுமொருவ னுயிருந்தே யிசைத்தமொழிக ளின்
பொருளை, ஒன்றுபடுசிந் தையனுகி யூகித்துணர்ந்தே

யநுபவமாய்ப், பொன்றுமுடலை மறந்தினிய புரணச மாதி யடைவையெனின், அன்றுநினது வெம்பவம்போ மன்றிவசனத் தகலாதே. (அ௫)

எங்கெங்கோடித் தேடினுமுன் னிதயாலயத்தி லிருந்தொளிரும், பங்கிலபரிச் சின்னசுக பரமேயலது வேறுளதோ, அங்கிங்குண்டென் றன்னலொழித் ததுதானுமென் றமைவுபெறின், எங்குஞ்சிவமாய்த் தோன்றிடுமோ ரிணையிலருளா ரியனாலே. (அ௬)

நீரிற்கரத்தா லோவியங்க ணேராவெழுத லாயினும்பின், நீரதாயே தோன்றுதல்போ னினைவற்றுலக விவகாரம், சாரமுடையோர் செய்தறினுந் தானாய்த்தோன்று மச்செயலும், வீரமுடையோய் தோன்றுவது விநோதத்தலது மெய்யினன்றே. (அ௭)

சொல்லவேண்டு வனவெல்லாஞ் சொன்னோநினது மாதவத்தால், அல்லனீங்கி யொருநினைவோ டசைவற்றின்ப வறிவுருவாய்ச், செல்லுகின்ற காலமதிற் சேர்போகம்பொய் யெனக்கொண்டு, புல்லுமிறப்போ டெதிர்காலம் புந்திசெயாதாட் டயருதியால். (அ௮)

சீதமதிபோ லுளங்குளிர்ந்து சிவமேயாவு மெனத்தெளிந்தோர், பேதசமயக்கடன்மூழ்கிப் பெரிதும்விருப்பு வெறுப்பெய்திப், பூதமயமாமுடலுருமாய்ப் பொரு

ந்துவாரோ பொச்சாந்தும், ஏதமறுநின் னறிவாலே யி தனையூகித் துரைசெய்வாய்.  (அக)

இந்தவுலகோர் சொன்மயக்குக் கிறைப்போதேனுஞ் செவிகொடுக்கின், அந்தக்கணமே சகசீவ வரன்மெய் யென்னு மயக்கமுறும், சிந்தையடைவை யதுபந்தஞ் சேர்க்குமதனல் யாரையும்விட், டுந்திநீயுன் னுடன்வா ழ்வா யுரைத்தோமுனக்கா முறுதியிதே.  (கூ0)

உள்ளத்திருப்பைச் சிறிதேனு முணர்த்தாதிந்த வுலக மதில், மெள்ளப்பிறர்வந் தாலுமுடல் வினையாற்சொல் லா லவ்வவர்போல், பிள்ளைத்தனங்காண் பித்தவர்க்குப் பிரியனுகி நினக்கெவரும், எள்ளத்தனையுநடுங்காத விய ல்போடிருக்கும் படிநடவாய்.  (கூக)

இந்தவுலகிற் பவந்துன்பென் றெண்ணியொழுகு ம வற்கரனே, பந்தமகன்ற குருவுருவாய்ப் பரிந்துவந்து ன் மெய்யுருவம், சிந்துமுலகா தியின்மூலச் சித்தமுதித் துற் றெருடுங்கிடற்காம், எந்தவகண்ட சிதம்பரமோ வி ணையிலதுவாமென்றருளும்.  (கூஉ)

மதியாலுயர்ந்த மாணவக மணியேயாஞ்சொ லுப தேசம், அதியூகத்தா லுட்கொண்டே யதுபோகத்தை யடைந்ததனைச், சதுராயுரைக்க வேண்டுமெனத் தவ மேவடிவா மகனெழுந்து, விதியாற்பணிந்து பன்மு றைபின் மிகவும்வழுத்தி யுரைசெய்வான்.  (கூங)

உடலமுதலா மாயைவரை யுணர்வாலநியமாய்நீக்கி ப், படலிலந்தவுரனுனுய்ப் பகுப்பினுனேயதுவாகி, நடலையுலகமுயிரீசனென்னுமனைத்துநானேயாம், விடலில கண்டசொருபமதாய் விளங்காநின்றே னினதருளால்.

நீயும்யானு மொருபொருளாய் நின்றநிலையீ தெனக் காட்டி, ஆயுமறிவா லந்நியமா யடுக்குநிலைவை யபேதமதாய்த், தோயும்படியுன் னருட்கடைக்கண் டுலங்கவிந்த வுடலளவாய்த்; தேயுமெனது வடிவகண்ட சிவமாயுணர்ந்தேன் குறையென்னே. (கரு)

கடமாதிகளும் பணியாதி களுமண்கனகத் தினில்வேருத், திடமாக்காணி னிலையவைபோற் செகசீவேசராநினைவும், இடமாமெனக்கோ ரந்நியமா யிலங்காதெனவே யநுபவத்தின், தடமாக்கண்டேன் கண்டிடத்தே சகசாநந்த மாய்ப்பொலிந்தேன். (கசு)

அந்தோவந்தோ விதைநெடுநா ளறியாதலகில் வறிதுழன்ற, முந்தோர்தவமுஞ் செய்தறியா முழுமூடனையுந் தடுத்தாட்கொண், டெந்தாய் பெறுக வென்றருளயானுமாங்கே பெற்றவொரு, சந்தோடத்தை யென் சொல்கேன் சகசாநந்த சற்குருவே. (கஎ)

என்னுலறியா வொன்றுனைத்தா யானுமுணர்தற் கரியதுகண், டுன்னுரருளா லறிவித்தா யுனையோர்கணத்து ணிலைநின்றே, தன்னுமனத்திற் கதீதமதாஞ் சொ

ருபாநந்தக் கடல்படிந்தேன், என்னுயகமே நினக்கெ
ளியே னியற்றுகைம்மா றென்றுளதோ. (கஅ)

பந்தமோக்ஷ மெனுமவற்றின் பகுப்புச்சிற்றம் பல
மாமென், அந்தவுருவி லிலவாகி யனைத்துநானு யெப்
பொழுதும், இந்தவுலகில் வேண்டியவா றினிதாவிளை
யா டிடவளித்த, முந்துநினது கருணைதனக் குளதோ
மொழிகைம் மாறென்றும். (கக)

இந்தவுலக சராசரங்கள் யாவுந்தோன்றி யிருந்தொ
டுங்கற், கெந்தவறிவாம் விண்ணிடமோ யானேயதாவா
யெப்பொழுதும், சிந்தையிறந்து விநோதமதாய்த் திரி
யும்படிநீ யருள்செய்த, விந்தைசொலயான் விரும்பின
து விளக்குமெளன மளவிறந்தே. (க00)

திரிமூர்த்திகளு மறிவரிய சின்மாத்திரமாம் பெரு
வெளியை, ஒருநாயடியேன் றனக்கெளிதா வுணர்த்த
வெழுந்த வொண்சுடரே, பெருமாதவமு மன்புமிலாப்
பித்தனெனினும் பெருமானின், திருநாண்மலர்த்தாட்
டுணைப்புணையைச் சேர்ந்துசனனக் கடல்கடந்தேன். ()

நின்னாரருளா லுறுபதத்தை நீயேயருளப் பெற்றன
னல், மன்னுவினியோர் பதம்வேண்டா வாழ்விற்களித்
தே விளையாடும், என்னுற்பயனே ரனுவிலேநிற் கெனி
னுமுடல முளவளவும், முன்னுனின்றுன் பணிசெயவே
முன்னின்றருட்கண் பார்த்தருளே. (க0உ)

இனியான்செய்வ தடைவதொன்று மில்லையெனினு நின்றிருமுன், றனிபேரன்போ டுனைப்பணிந்தன் னுமநாவினவின்றிந்தத், தனியாருடலம் விழுமளவுந் தொண்டுபுரிந்தென் மனங்களிக்க, முனைவாவேண்டுமெனச்சீடன் முதல்வனருள வாழ்ந்தனனே. (கoரு)

வேதாகமங்க ளுரையானும் விரிஞ்சன் முதலோருணர்வானும், ஏதாயினுஞ்சற் றுரைத்துணர்தற் கியலாவேம சபையிறையும், பேதாபேத மயக்கறுத்தென் பிணிப்பையகற்ற வருமருளும், சாதாரணமா முயிருலகுஞ் சதாகாலத்தும் வாழியவே. (கoசு)

ஆத்துமாநுபவசாரம்

முற்றிற்று.

பாயிரமுட்படத் திருவிருத்தம்-கக௦.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான் திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

உ - வது

## ஞானசோடசசூசகம்.



### தாழிசை.

ஞானசரியை சரியாதி
நவினிட்காமத் தறங்குருவாம்
நாதன்புறத்தொண் டவன்வடிவி
னலஞ்சேர்பணிக ளருச்சனையாம்
ஆனகுருமெய் பலதேவா
யருஞ்சொன் மறையாய்க் கருத்தருளாய்
அவனேசிவமா மிவைநான்கு
மந்தக்கிரியை சரியாதி
ஈனந்தவிரந் நிலையோகத்
திசைநான்குரைக்கி லுபநிடச்சொல்
எண்ணறெளித லநுபவித்த
லியம்புமதனு ளதன்பகுதி

வானமனைய பிரமவித்தவ்
வரனவ்வரியானவ்வரிட்டன்
வலிதாமொன்றிற் பதினாறு
வகுத்தார்முதனூல் வல்லோரே.

உ-வது. ஞானசோடசசூசகம்

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ககக.

திருச்சிற்றம்பலம்.

---

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

## ௩ - வது

## பதார்த்தத்திரயவிலக்கணம்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மலர்புரையுநயனமுளஞ்சீவனெனுமூன்றும்
மருளிலவா யசைவறநின்றிடுமோயினந்த
நலமமருநிலைதானேபதிநிலையாமவைதாம்
நசையொடுசேற்றசையிலதுபசுநிலையாம்விடயத்
தலகறவுற்றிடினதுவேபாசநிலையாகும்
ஆதலினாலாரியனுலிந்நிலைதேரறிஞர்
சலமுறவேயெப்பொழுதுமுதனிலைவிட்டயர்வாய்ச்
சற்றேனுமிடைகடையா நிலைகளில்வந்தழியார். (க)

மண்முதலாந்தத்துவங்களின்மயமாகுதலே
மாற்றரியபாசநிலையாமவற்றின்வேறாய்
எண்ணுமறிவாய்நிற்றல்பசுநிலையாமந்த
இயல்புணர்த்துமருளுடையான்றனையின்பவடிவா
நண்ணுமொருபொருளெனவேநன்குணர்ந்தம்மயமாய்
நணுகுவதேபதிநிலையாமெனவுணர்மாதவர்கள்

அண்ணனிலைகதியெனவோர்ந்ததனைமறந்துறங்கார்
அறிவினர்மற்றவற்றினவர்போலவுறங்கார். (உ)

ஞாதருஞானஞ்ஞேயமென்றுரைசெய்பேதம்
நவிலும்வழக்கறுநிலையேபரநிலையாமந்த
ஞாதருவாதிகடோன்றுநிலைசீவனிலையாம்
நணுகுமவற்றென்றுதல்சகநிலையாமெனவே
ஆதரவோடறிவுறுமெய்யடியரொருபொழுதும்
அரியபராநந்தநிலைவிட்டுலகத்தலையும்
பாதகர்போலாசிரியன்மொழிகடந்தேமற்றைப்
பாழ்நரகில்வீழ்ந்தழியார்பந்தமெனக்கண்டே. (௩)

அறிபொருளீதறிபடுமோர்பொருளீதென்றுணரா
அவநிலையேசகநிலையாமவைகளிரண்டினையும்
குறியினவ்வவ்விலக்கணங்களாலறிந்துவேறாக்
கொளுநிலையேயுயிர்நிலையாங்கூறியவப்பொருள்கள்
செறியுமொருபரசிவமாம்பொருளெனநன்குணர்தல்
சிவநிலையாமென்றறிவோர்சிவநிலைவிட்டேனை
உறுநிலைகடமைப்பொருளாமதித்தவற்றினுழலார்
உழல்பவர்மற்றையரொனநீயுற்றுணர்வாய்மன்னே.

உருவமொடுநாமமயமாமுலகந்தோன்று
உண்மையறிவாநந்தவத்துவிதநிலையைத்
தெரிவதறத்தெரியினதுசொரூபநிலையென்றும்
செகமதெனத்தெரியினதுசீவனிலையென்றும்

கரிசுறவவ்வுலகிடைவேறறவமூர்ந்தினதுவே
 கழறுசகநிலையென்றுங்களங்கமறவுணர்ந்தோர்
பெரியசொரூபாநந்தநிலையினைவிட்டகலார்
 பேசியமற்றிரண்டினையும்பெத்தமெனத்தவிர்ப்பார்.

சகமுயிர்தற்பரமெனுமுப்பொருளொருதன்மயமாய்ச்
 சார்ந்திடுமெத்துவிதநிலைபிரமநிலையாகும்
விகலமுறுமவைவெவ்வேருயமைதனுப்பண்
 விளங்கிடுசிதாப்சனிலையாமம்மூன்றும்
மிகவொருமித்தேயறியப்படுபொருளாத்தோன்றல்
 வியனுலகநிலையாமென்றுணர்பவர்சற்றேனும்
தகவறவேமுதனிலைவிட்டிருநிலைகள்சாரார்
 சார்வரொனிற்சார்வரொருதத்துவமுத்தியையே. (௬)

நனவுகனவொடுசுழுத்தியவத்தைகண்மூன்றனையும்
 நணுகலறப்பூரணசின்மாத்திரமாய்நிற்றல்
இனமறுநற்சிவநிலையாமவத்தைகளிற்மூன்றும்
 இன்பொடுதுன்பங்களைநன்கநுபவியாய்நிற்றல்
தனைநிகராஞ்சீவனிலையாமவத்தைமயமாய்ச்
 சார்தலதுசகநிலையாமெனவுணருந்தக்கார்
வினையகலுந்துரியமெனும்பதமதனைவிடுத்தே
 வேறுபதங்களையணுகவீணரினேமுயலார். (எ)

சத்தொடுசித்தாநந்தபூரணமாஞ்சிவமே
 தானெனநன்கறிதலொருதனிப்பிரமநிலையாம்

சித்ததுநந்தன்மைக்குச்சிறிதுண்டென்றுணர்தல்
சிவனிலையாமொன்றுந்தெரியாமன்முற்றும்
மித்தைவடிவாமுடனுமென்றுணர்தலறிஞர்
வியக்குமொருசகநிலையாமெனக்குருவாலையக்
கொத்தறவேயுணருமவர்பரநிலைவிட்டுலகர்
கூடுமயனிலைகளையுட்கொள்ளுவரோமறந்தும். (அ)

அறிவாகுந்தனில்வேறற்றமர்சுகமாநிலையே
அரியசிவாநந்தநிலையாகுமதருவம்
செறிவாகாவறிவெனவேதெரிகின்றநிலையே
சிவனிலையாமறிவிறேகமுதலாகும்
குறிதானென்றுணர்நிலையேசகநிலையாமெனவே
குருபரனாற்றெளிதருநற்புண்ணியர்கணல்ல
நெறியாகுஞ்சுகநிலைவிட்டேகுவரோமற்றை
நிலைகளிலன்னவை துன்பநிலையாமாதலினே. (கூ)

வையமதிலேயுள்ளபொருள்களெனதென்னும்
வாஞ்சையதுமாயைநிலைமருவுமனைத்தினையும்
ஐயமறவுடையூவனுனெனுமகந்தைதானே
ஆணவத்தினிலையிவைதாமற்றநிலைஞானம்
துய்யசிவஞானத்தாற்சோதிமயமான
சுகசொருபக்கடல்படிதன்முத்திநிலைமற்றை

னையுமிருநிலைகள்பெத்தநிலையெனவேகூறி
நாயடியேற்கருளுமொருநாதனருள்வாழி. (௧௦)

௫ - வது. பதார்த்தத்திரய்விலக்கணம்

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் . ௧௨௧.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க

# தத்துவஞானதீபிகை.

ச - வது.

## இதோபதேசம்.



அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உலகமுயிர்கள்பரமாயு மொன்றுந்தொடர்பின் றியு மென்றும், குலவுபெருமா னெவ்வருளாற் குறைகளக ற்றிக் கதியளிக்க, நிலவுகுரவ ஞயெனையு நேடியாளவி யைந்தருளும்; இலகவ்வருளே யெனதகநின் றிதோப தேச முரைத்திடுமால். (க)

உடலமவத்தை யபிமானி யொவ்வொன்றொருமூன் றுமவைதாம், இடமதாகு நினக்கென்று மியல்பாவே று யிருத்தலினால், சடமதாகு மவற்றினுக்குச் சான்று மறிவுன் னுருவெனவே, திடமதாயாந் தெரித்தநீ தெ ரிந்ததெரிவிற் றியக்கென்றே. (உ)

கண்டபொருளாஞ் சகலமுநேர் காணுவிருளாங் கே வலமும், விண்டுபோகு நடுநிலையே விசுத்தநிலையென் றந்நிலையில், பண்டையறிவா யுனையிருத்திப் பரமாநந்

தம் பெறும்வணம்யாம், விண்டுநீயங் நிலைதவிர்ந்து வி
னையுழலும் விதியென்னே. (௩)

பொருளுமிருளு மறியுமுனைப் பொன்றுமவைக
றியாவித், தெருள்சேர்போத மாமுன்னைத் தெளியவே
ண்டி னென்றனையும், மருளுற்றறியா தறிவாயே மன
னவேண்டு நீயெனயாம், அருளுற்றறைந்துங் கண்டி
சைந்தே யயருமிந்த வயர்வென்னே. (௪)

சுருதிமுடிவுஞ் சுரர்களுமச் சுரேசனயன்மா லுருத்
திரரும், கருதிமுறையிட்டலறியின்னுங் காண்டற்க...
ய பரசிவமே, மருவுமுடலாதிகணீக்கி மன்னுமவித்
தை யிருள்போக்கித், தெரிபுமறிவா நீயெனயாந் தெ
ரித்தபின்னுந் திகைப்பென்னே. (௫)

என்றுமெந்த விடங்களினு மிருக்குமெந்தப் பொரு
ள்களையும், தன்றியறியு மறிவேநீ தலங்குநின்னை யொ
ருபொழுதும், ஒன்றுமறியா தாதலினு லொப்பில்சிவ
நீ யாமெனயாம், நன்றுபுகன்று மந்நிலைநீ நண்ணுறுயி
ர்போ னணலென்னே. (௬)

எந்தநிலைகள் யார்சொலினு மெல்லாநீயே யறிவை
யவை, தொந்தமறநின் றுனையறியா தலங்குமுன்னை
யறிந்திடுமேல், உந்தன்னறிவை விடுத்தவற்றை யுற
லாமன்று முணர்பவனீ, எந்தம்மகனே யென்றுனக்கி
யா மியம்பவறிந்து மிடரென்னே. (௭)

வேதமொழிபோன் மேதினிதான் விளங்கவந்த கு
நாதன், போதவடிவே நீயென்னப் பொருந்தவுணா
த்தும் போதமுறுப், பேதநிலைகள் பலபிதற்றும் பித்தர்
மொழியாற் பிரமையடைந், தேதமுறுதனன்றன்றெ
ன் றறநீயுணர்ந்து மிடவொன்னே. (அ)

மாலுமயனு மறிவரிய மாதேவன்றன் மானிடனே,
போலவுருவாய் வந்தருளிப் பொருளுமுடலு முயிரு
மூன்றன், எலும்பொருள்க ளலவெனக்கொண் டியா
னேநீயென் றொருமொழியால், சாலுமுண்மைப் பொ
ருளளித்து மினுந்தாழ்வொழிக்காத் தாமென்னே.(கூ)

எங்குமிருந்தே யிலங்கியிடு மின்பவடிவா மொருசி
வமே, தங்கிநாமா யிருக்குமது சாருமுடலா திசணிக்
கிப், பொங்குமறிவே நீயாகிப் போலியுநிலையை யாந்
தெரித்தும், மங்கிமயலுற் றந்நியமா யினுநீமயங்கும்
வழக்கென்னே. (௧௦)

அறியுமறிவே நீயென்று மறிவையகலா வாநந்தச்,
செறிவாஞ்சிவமே நானென்றுஞ் செப்புநீநா னென்
றென்றும், குறியற்றிருந்த வொருகுறியிற் குறிப்பாற்
கூட்டி வைத்துமின்னும், பொறியில்பூதர் போல்வாளா
பொழுதுபோக்குன் புலமென்னே. (௧௧)

பொன்னைவிடுத்துப் பூடணங்கள் பூணநினைக்கும்
புலமிலர்போல், தன்னைவிடுத்துச் சாத்திரங்கள் சாற்

றுங்கலைக டமைத்தேடிக், கொன்னேயுழலுன் னியலெ
ழித்துக் கோதிலறிவே நீயென்று, சொன்னேமவ்வ
றறிந்துநீ சும்மாவிராத தொழிலென்ஞே. (கஉ

உருவநாம மாமெவையு முளவாய்த்தோன்றி ரமி
திடல்போல், தெரிதலியல்பே யானுலுந் தெரியுங்க
விட் டவைவேருத், தெரியாவதனு ளுமவையாத் தெ
வம்பொற்பூண் போலுமென, உரியமொழியால் யா
தெரித்து மொன்ருயுணரா வுணர்வென்ஞே. (கங

ஏகமான வறிவொன்றே யெல்லாமாகி யிருத்தலைகா
ம், பாகமான நினக்குணர்த்திப் பண்டைநிலையிற் பதி
வித்துச், சோகமோடு சுகமளிக்குந் தொடர்பந்தம்வீ
டெனுமனைத்தும், மோகமெனச்செப் பியுமினுநீ மோ
னமடையா முறையென்ஞே. (கச)

உடலைவெறுத்த மூண்டுறந்து முறக்கமறந்து முயர்
கலையான், மடமதொழித்த மோரிடத்தின் மருவலொ
ழித்தும் வாஞ்சையெனும், விடமதழித்து மறிவரிய
மெய்யாமறிவே யனைத்துமெனத், திடமதாயாந் தெரி
த்துமினுந் தெளிந்துசுகத்திற் செலாயென்ஞே. (கரு)

மூலமாக வெவைக்குமுள முன்னலுதித்துற் றெருடு
ங்கிடமாம், கோலமான வறிவேநீ குறிக்குமனைத்து ம
றிவெனவே, சீலமான மறைமொழியாற் றெளியநீயா

தெளித்தபினும், காலமாலை யெப்பொழுதுங் கலைக
பிதற்றுங் கருத்தென்னே. (௧௫)

மனமும்வாக்கு மருவரிய மறையின்முடிவில் வயங்
டுமோர், கனசிற்சொருபா நந்தமதைக் கண்ணால்யா
காட்டிடக்கண்டும், தினமுமசைவற் றிருந்ததைநீ
சராதுலகம் வேறெனக்கொண், டினுமுற்பவத்தை ய
டந்திடுவா னிச்சைகொளுநின் னிழிவென்னே. ()

எங்கெங்குனக்குப் பேதமெனு மிழிபாம்புந்தி தோ
றிடுமோ, அங்கங்கென்றுந் தன்பமதே யணுகதிண்
ண மெனவுணர்த்திப், பங்கமில்லாப் பதிநிலையாம் ப
ழித்துநினக்கந் நிலையினுநீ, மங்குற்றநிய புந்திகொடே
மயங்குவினது மதியென்னே. (௧௮)

எந்தப்பவத்தினுக்கு மவாவிணையில் வித்தென்றுல
குரைக்கும், அந்தச்சொலைநீ கேட்டறிந்து மவாவிற்சி
ந்தை யொழிக்காது, பந்தப்பிறவி யொழித்திடவோ
ரார்வங்கொளலும் பான்மைகொல்யாம், இந்தக்கண
நீ யதையொழியென் றியம்பவுணர்ந்தும் விடாயெ
ன்னே. (௧௯)

இம்மைமறுமை களிலெங்கு மிருக்கும்போக மனைத்
துமொரு, செம்மைமனத்தாற் றெளிந்தறியிற் செப்பு
மைந்தே யவற்றினைநீ, எம்மெய்யானு மநுபவித்தே யி

ருந்தும்பின்னு மவைவேண்டல், அம்மவழகன் றுன
கெனயா மறைந்துமகற்று துறலழகோ.

ஆசையகன்றே யறிஞரொலா மளவில்பெருமை
டைந்தமைநல், நேசமுறவே யறிந்திருந்து நெடி
பெருமை விரும்பியநீ, பாசமுறுமவ் வாசையுறல் ப
பாங்கொல்லோ நினக்கென்றும், மோசமறுமாறி
முணாத்து மோகமடைநின் முயல்வென்னே. (உ

தவத்தைச்செயலு மநேகவித தானஞ்செயலுஞ்
ற்றரிய, பவத்தையறுக்கும் வாளெனவே பகர்மந்தி
கள் செபித்திடலும், அவத்தைக்கதீத மாம்பொருளை
யணுகவகத்தி லெணலுமறச், சிவத்தையறிவின் யா
தெரித்துந் தேர்ந்தாங்கமையாச் செயலென்னே. ()

கருமமகன்றே யறிவுருவாய்க் களங்கமகன்ற வறி
ஞருரை, அருமையறிந்து மறிவினைநீ மதியாதந்தக் க
ருமமதே, தருமமெனநன்காசையதிற் சார்ந்துன் வா
ணளிநைக்கழித்தல், பெருமையன்றென் றுனக்கியா
மும் பேசவுணர்ந்தும் பித்தென்னே. (உரு)

எல்லாப்பொருளு மிருப்பதற்கும் யாவுஞ்சுத்த மா
க்குதற்கும், பல்லாயிரமா முருப்பெயரும் படைத்துந்
திதித்து மழிப்பதற்கும், சொல்லார்தலமுந் தீர்த்தமுந
ற் றுணைமூர்த்தியுமோ ரறிவி —த், தல்லாசமதா யா
ந்தெரித்து மொருவேறெனநீ னலென்னே. (உசா)

நம்மாலனைத்து மாமென்றே நானென்னகந்தை யி
னைப்பெருக்கி, வெம்மால்கோபங் கொண்டுழன்று வீ
ணேபிறப்பி லுறலொழித்துப், பெம்மான்செயலென்
றெலாமுணர்ந்து பேசாதுறயாம் பேசியவா, சும்மா
விருந்தே நீயென்றுஞ் சுகத்தையடையா தலைவதென்
னே. (உரு)

என்றுபவத்தில் வந்தனையோ வினையற்றெருளிருஞ்
சிவபெருமான், அன்றுமுதலா விருவினைக ளருத்தியுன
க்குப் பக்குவம்வந், தொன்றுகால நோக்கியிருந் துன
ாணவத்தை யொழித்தருளை, நன்றுபுரியுந் திறங்கரு
து நாதற்குருகா நலமென்னே. (உசா)

கரணமொன்று மிலாவிடத்திற் கருத்தற்றுறங்கு ஙி
னையெழுப்பிப், புரணவருளைக் கொடுத்தாண்ட போதா
நந்தப் புண்ணியன்றன், சரணகமலங் களைவாழ்த்தித்
தலையான்வணங்கி மனத்துன்னி, மரணபவங்க ளொ
ழிக்கமுய லாதுமயங்குன் மயக்கென்னே. (உஎ)

எண்ணற்கருநின் குற்றங்க ளியாவும்பொறுத்துன்
றனக்கருளால், நண்ணற்கரிய பரகதியை நல்குங்கரு
ணைக் கடல்வடிவாம், அண்ணல்கழற்கா ளினைந்துருகி
யுமையாதின்னு முலகருறும், வண்ணமுழல னன்கென
நீ மதித்தேமயங்கு மதியென்னே. (உஅ)

மாறுவேண்டா தனக்கருளான் வடிவுகொண்டோர்
மொழியதனைக், கூறியிருளை யொழித்தருளைக் கொடுத்

தகருணைக் குருபரனே, நாறுமலர்கொண் டருச்சனையெ
ந் நாளுமியற்றி யகமுருகும், காறும்வாய்விட் டலறு
துகளிப்போடுழனின் கருத்தென்றே. (உக)

தாயுந்தந்தை குருதேவாந் தானேவந்து தனையறிய,
வாயுமனமு மடக்கியொரு மௌனநிலையி லுனைவைத்
து, ஆயவின்ப மருண்ஞான நோக்கமளித்த வாரியனே,
ஆயுந்துதிகள் சொலியிறைஞ்சா தழியுமுன்ற னடை.
வென்றே. (ங0)

நனவுகனவு சுழுத்திகளி னண்ணிவிளங்குந் தோற்
றமெலாம், நினைவுமறைவு மாமவற்றை நீக்குஞ்சுத்தத்
திருந்தறியின், கனசிற்சொரூப மொன்றேயாய்க் கா
ணுமெனயாங் கழறலை, மனனஞ்செய்து தெளிந்த
மைந்தால் வாழ்வாய்சிவமாய் வாழ்வாயே. (ஙக)

சு - வது இதோபதேசம்

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஙஉ.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க

# தத்துவஞானதீபிகை.

## ரு - வது

## திருவருள்விளக்கம்.

### கடவுள்வணக்கம்

எழுசீர்க்கழிநெடில்ஆசிரியவிருத்தம்.

திருவளர்யானை மாமுகன்றனையுஞ் செங்கைவேற் சண்முகன்றனையும், அருளொடுபெயந்திவ் வகிலமுய்வகையே யளித்தருளம்பிகை தன்னை, ஒருதனதிடம்வைத் தடியவர்க்கருளு முயர்பராஞ்சோதியை யெளியேன், மருள்கெடவகத்தி னினைந்தறவாழ்த்தி வணங்குவன் காலமூன்றினுமே.

உலகதன்முதலாஞ் சச்சிதாநந்த வொருபரம் பொருளினையகலா, திலகிடுங்கரியாந் திருவருட்சத்தி யெனதறிவின்கணேநின்று, சிலபொருளெனக்குத் தெரித்ததிங்கதனைத் திருவருள்விளக்கமென்பெயரால், நலமுறவுரைத்தற் குறுதுணையாகு நவிலுமச்சிவபிரா னருளே. (க)

தகருணைக் குருபரனே, நாறுமலர்கொண் டருச்சனையெ ந் நாளுமியற்றி யகமுருகும், காறும்வாய்விட் டலறு துகளிப்போடுழனின் கருத்தென்னே. (உக)

தாயுந்தந்தை குருதேவாந் தானேவந்து தனையறிய, வாயுமனமு மடக்கியொரு மௌனநிலையி லுனைவைத் து, ஆயவின்ப மருண்ஞான நோக்கமளித்த வாரியனே, ஆயுந்துதிகள் சொலியிறைஞ்சா தழியுமுன்ற னடை வென்னே. (ங0)

நனவுகனவு சுழுத்திகளி னண்ணிவிளங்குந் தோற் றமெலாம், நினைவுமறைவு மாமவற்றை நீக்குஞ்சுத்தத் திருந்தறியின், கனசிற்சொரூப மொன்றேயாய்க் கா ணுமெனயாங் கழறலை, மனனஞ்செய்து தெளிந்த மைந்தால் வாழ்வாய்சிவமாய் வாழ்வாயே. (ஙக)

ச - வது இதோபதேசம்

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஙஉ.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க

# தத்துவஞானதீபிகை.

## ரு - வது

## திருவருள்விளக்கம்.

### கடவுள்வணக்கம்

எழுசீர்க்கழிநெடில்ஆசிரியவிருத்தம்.

திருவளர்யானை மாமுகன்றனையுஞ் செங்கைவேற் சண்முகன்றனையும், அருளொடுபெயர்ந்திவ் வகிலமுய்வகையே யளித்தருளம்பிகை தன்னை, ஒருதனதிடம்வைத் தடியவர்க்கருளு முயர்பரஞ்சோதியை யெளியேன், மருள்கெடவகத்தி னினைந்துறவாழ்த்தி வணங்குவன் காலமூன்றினுமே.

உலகதன்முதலாஞ் சச்சிதானந்த வொருபரம்பொருளினையகலா, திலகிடுங்கரியாந் திருவருட்சத்தி யெனதறிவின்கணேநின்று, சிலபொருளெனக்குத் தெரித்ததிங்கதனைத் திருவருள்விளக்கமென்பெயரால், நலமுறவுரைத்தற் குறுதுணையாகு நவிலுமச்சிவபிரா னருளே. (க)

தோன்றுமெப்பொருளு நிலையுருதொழியுந் தொலையுமப்பொருள்களுக் கென்றும், சான்றதாயொளிரும் பரசிவப்பொருளே சத்தியமாகுமா தலினுன், கான்ற சோறதனிற் கண்டநித்தியத்தைக் கைவிடுத்துற்றநித்தியத்தை; ஊன்றுநெஞ்சகத்தி னுறுதனன்கெனவே யுணர்த்திய தெனக்கருள்விளக்கே. (உ)

உறவென்னக்கிளரும் பந்தமதனைத்து முற்றநோய் நெருப்பெனக்கண்டு, துறவுபூண்டரிய ஞானிகடுணைத் தாணிழலுயரற வடைந்தவருக், குறவருணின்பாற் பெருகிடும்வணீ யமைந்தவர்க் குறுபணியியற்றிப், புறமகமன்பா யொழுகனன்கெனவே போதித்ததெனக்கருள் விளக்கே. (ங)

சிவமெனுமாத்தன் சேவர்கட்கருளாற் செப்பியநூற்பொரு ளனைத்தும், உவமையற்றெளிரு மறிவுகொண்டாய்வுற் றுணர்ந்திடுமிடத்தினி லுயிர்கள், பவமறுத்தினிய வுயர்பரசிவத்தின் பாலடைந்தொன்றிரண்டாகா, நவமுறுபதம்பெற் றுய்தரற்கெனவே நவின்றதாலெனக்கருள் விளக்கே. (ச)

என்றுமெவ்விடத்து மெப்பொருள்களினு மிலகுறவிருந்துயிர் களுக்கு, நன்றுறவருளி நவையறுத்தாளுநாதனே மெய்யருட்டெய்வம், என்றவன்றனையே யெங்குமெத்தேவா வியல்பொடுங் கண்டுறைப்பணியின், அ

ன்றருட்பதத்தை யடைவைநீயெனவே துலக்கியதெ னக்கருள் விளக்கே. (ரு)

அறிவுடனுசா ரங்களுமுடைய வாரியன்பாலடைந் தவனுல், பிறிவிலாப்பொருளைக் கேட்டநுபவமாப் பெ ற்றிடாதலகினுற் பொருளைச், செறிவுடனறிந்த மாத் திரத்திமுமாந் திருப்பவர்தம்மைவிட் டருளாம், குறியு டையவனைச் சேர்தனன்கெனவே கொடுத்ததெற் கறி வருள்விளக்கே. (சு)

வ்வுயிர்களுமா ணவத்துறுமியல்பா னியற்கையா வொன்றறி யாவென், றவ்வுயிர்களுக்குச் சுதந்தரத்தி னைநீ யகற்றியவ்வவர்கடம் வினையால், திவ்வியபரத்தி னருள்விளக்குதலாற் சிவபிரானொருவனுண் டென்ன க், கவ்வையற்றவன்ற னருளைநாடெனவே காட்டிய தெனக்கருள் விளக்கே. (எ)

யானெனதெனலால் விளக்கிடவிளங்கு மியல்பிறு லின்பொடு துன்பம், தானநுபவிக்குந் தகைமையால வத்தை சார்தலாற்பந்தம்வீ டுறலான், ஞானமார்சிவ ருளொனவறிந்தே நாடுமன்னவர்க்குள நவையும், ஈன மாயுளவென் றுன்னுவையெனவே யீந்ததெற்குணர்வ ருள் விளக்கே. (அ)

விடமதுசடமா யுறினுமன்னதுதான் மெய்யுறப்பொ ருந்திடி னறிவு, படமயக்குதலோ டாகுலம்விளைக்கும்

பான்மைபோலநாதியாம் பாசம், நடலையாயினுமுன்னன்மையையொழித்து நவையுறும்பவத்தினி லழுத்தும், திடமுடனதைநீத் தருளொடெனவே திகழ்த்தியதெனக்கருள் விளக்கே. (கு)

தத்துவமுப்பத் தாறுநிற்கயலாய்ச் சார்தலினவற்றினை யகற்றிச், சித்தருவாய்நின் றறிதலானீயே சித்தெனநினக்கறி விளக்கும், சத்தியமாகு நம்முடனொன்றிச் சார்ந்தநம்வியாபகப் பரையாய், நித்தியாநந்தச் சிவமடையெனவே நிகழ்த்தியதெனக்கருள் விளக்கே. ()

நினைவுருவாசத் தத்துவமனைத்து நிகழ்தலாற்சகலமே யென்றும், மனமிலாவிடத்திற் சூனியவிருளாய் வதிதலாற்கேவல மென்றும், வினய்மோடறிந்தந் நிலைகளையகற்றி விளங்கருணிலையுறச் சுத்தம், அனகநீயடையிற் சிவமுறுமெனவே யருளியதெனக்கருள் விளக்கே.

பாசமும்பசுவும் பதியுருவறிவாய்ப் பதிந்திடப்பார்த்திடிற் பதியே, நேசமுற்றொன்றாய் விளங்குமந்நிலையே நிசபதமளித்திடு மன்றி, நாசமற்றொளிரு மூன்றும்வெவ்வேறு நவையுறப்பார்த்திடிற் பந்தம், வாசமுற்றிடுநிற் கென்றுளந்தெளித்து வழங்கியதெனக்கருள் விளக்கே. (கஉ)

ஐந்தொழிலாகுங் கூத்தினையியற்று மரனருணடனசே வையினைச், சிந்தநின்றொழிலை யகற்றியெவ்விடத்

தஞ் சிறப்புறக்கண்டிணை யில்லாச், சந்தமார்சுகத்தை யடைவதேவீடாச் சாற்றுமாகமங்களின் முடிவை, மந் தமதகற்றி யுளத்தினிற்றந்து வளர்த்ததென் றனையருள் விளக்கே. (௧௩)

வெளியினினடத்துந் தூலவைந்தொழிலு மிளிர்பொ றியாதியுள் ளிடத்தில், அளியுடனடத்துஞ் சூக்கவைந் தொழிலு மகம்புறமகன்றநல் லறிவின், தெளிதரநடத் து மூலவைந்தொழிலுஞ் சிவபிரான்கூத்தெனக் கண் டு, களியடைந்திடுவை யெனமகிழ்பூத்துக் காட்டிய தெனக்கருள் விளக்கே. (௧௪)

யாதொருபொருளி னிடத்தினுமுயிர்க ளிடத்தினுஞ் செய்கையோ டறிவு, பேதுறத்தோன்று மவையெலா மருளின் பிறங்குறற்செயலென வறிந்து, தீதொடுநன் மை யவற்றினுடாது திருவருணிலையினி லமையின்; சா தமோடிறப்பு நினக்கறுமெனவே சாற்றியதெனக்கரு ள் விளக்கே. (௧௫)

தன்மைமுன்னிலையிற் படர்க்கையினின்றுஞ் சார்ந்த நின்றனக்கெவை விளக்கும், நன்மைசேரவைக ளெ லாமருள்விளக்கா நணுகிடுமன்றிவே றென்றால், இன் மையதெனவே யறிவையேலெங்கு மிலகிடுமனைத்தாக ல் லருளின், தன்மயமாகு மெனவருளியது தனிமை யேன்றனக்கருள் விளக்கே. (௧௬)

அருணிலைபதியா தலையுமேலுள்ள மருளுருவாயமூ ன் றனையும், தெருளொடுஞ்சிவமே யெனவறிந்தன்பா

ய்த் திரிசரணங்களினாலும், மருளறும்வகையாப் பத்தியேபுரிந்து மகிழ்வொடஞ்சக் கரந்தனை நீ, திரமொடு செபிக்கி னலைவறுமெனவே தெளித்ததென்றனக் கருள்விளக்கே. (கஎ)

மாயையாணவங்க ணீங்கிடற்கொன்று மருவுதற்போதமற் றிடலுக், காயதாமொன்று மருட்சிவப்பேற்றை யடைதலுக்கொன்றுமென் றருளால், தூயவாந்தூல சூக்ககாரணமாய்ச் சொற்றபஞ்சாக் கரங்களை நீ, நேயமாச்செபிக்கிற் கதிதருமெனவே நிகழ்த்தியதெனக்கருள் விளக்கே. (கஅ)

ஒருபொருளிடத்தி னன்மைதீமைகளை யுறுவையேல்விழைவொடு வெகுளி, மருவிடுமதனுன் வினைகள்வந்தேறு மற்றவற்றாற்பிறப் பிறப்பாம், அருளுருவாக வனைத்தையுநோக்கி னகன்றிடுமியாவுநிற் கெனவே, தெருளுருவாய்நின் றெனதகத்தென்றுந் தெளித்ததென்றனக்கருள் விளக்கே. (கக)

காணுதலனைத்து மொழிப்பதேசரியை கண்டதற்காண்பதே கிரியை, பூணுதலருளை யோகமெய்யறிவாம் பூரணசிவத்தினை யுணர்த்தல், மாணெழின்ஞான மாதலையறிந்து வளம்படவடைவையே யினக்குத், தாணுவென்றொளிரும் வீடுறுமெனவே சாற்றியதெனக்கருள் விளக்கே. (உ௦)

சாதனநான்கு முதித்தபின்றனக்குச் சற்குருவினைய டைந் தவனுல், வேதனவடிவாஞ் சுருதியின்முடிவை விசாரமேசெய்திடல் வேண்டும், ஓதிடுமந்த விசாரமு மிரண்டா யுறுமதிற்சாத்திர மொன்றும், மேதகுமாவா க் கியமதொன்றெனவே விளக்கியதெனக்கருள் விள க்கே. (உக)

சாத்திரவிசாரமதனினுண்மையதாந்தற்பரமுண்டெ னுஞானம், மாத்திரமுதிக்கு மருட்குருபானுல் வாக்கிய விசாரத்தாஞானம், காத்திரமாதி யனைத்தையுமகற் றிக் காட்டிடுமப்பொரு டானுச், சூத்திரமுகத்து மறி வையென்றருளாற் றுலக்கியதெனக்கருள் விளக்கே.()

ஆகமும்பொறியுங் கரணமுமுயிரு மவித்தையுமதனு டன் கலந்தே, ஏகமாயொளிருஞ் சிவனுமன்று லிவற் றினை யென்றுநின்றறியும், பாகமாருணர்வே நீயெனக் காட்டிப் பலகலைகளின்முடி விதுவே, ஆகுமென்றுண ர்த்தி யெனக்கருள்செய்த தருமையாம் பேரருள்விள க்கே. (உங)

கோசமைந்துறுமா கங்கண்மூன்றினுக்குங்கூறு மூ வவத்தைக டமக்கும், பாசமுற்றபிமா னங்கண்மூன்று ரும் பாசியாய்க் கழறுசிவனுக்கும், நாசமற்றனிய மா யிருந்தறியு நவைய்றுமறிவுநின் வடிவாம், நேசமுற்ற துவா யறிதியென்றன்பா னிகழ்த்திய தெனக்கருள்வி ளக்கே. (உச)

எதிரிடும்பொருள்க ணியதிசெய்திடுங்கா லிருளொதி ரிடுமஃதையுநீ, கதிருறவெறிக்கு மறிவினூற்சுட்டிக் க ண்டிடாதனையுன துணர்வால், சதுரொடுதானுக் காண் பையேலன்று தாக்கியவிருளழிந் திடுமென், றதிசயமு றுமா றகத்துணர்த்தியதே யடியனேன்றனக்கருள் வி ளக்கே. (உரு)

சருவமாந்தேகங் களுக்குமுத்தொழிற்குந் தகைமை சேர் தேவர்மூவருக்கும், அருவமாயங்கங் கிருந்துசா க்ஷியதா யறிந்திடுமரியபே ரறிவாம், சொருபமேயின க்குப் பூரணவடிவாய்த் தோன்றிடுந்தடையற விதனை ப், பருவமுற்றறிவை யெனத்தெளித்தகத்தே பதிந்த தென்றனக்கருள் விளக்கே. (உசு)

அறிவதேயெங்கு மாகிநின்றனைத்து மறிதலாலவ்வ றி வாயே, செறியுநீயந்தப் பிரமமாமென்று செப்புமா வாக்கியப் பொருளைப், பிறிவறவொன்றென் றறிந்தது வாகிப் பிறங்கல்வீ டெனவருளாலே, சிறியனையாளத் திருவுளங்கொண்டே திகழ்த்தியதெனக்கருள் விளக் கே. (உஎ)

காயமாதிகளை நீத்தறிவுருவாக் கண்டதே நீயெனும் பொருளாம், மாயமாருலகிற் கெங்குமாய்நிறைந்து ம ருவிடுஞ்சாக்ஷியா மறிவே, தூயதாமதுவென் றுரைத்தி டும்பொருளாந் துரிசிலிவ்வீரறிவுகளும், ஆயினொன்றாறி

வே யசிபொருளாமென் றருளியதெனக்கருள் விளக்கே. (உஅ)

தொம்பதப்பொருடான் விளங்கிடிற்சகந்தான் றேுன்றிடுமஃறிய மாயே, தம்பதப்பொருடான் விளங்கிடினிவாய் நணுகிடுமசிபதப் பொருடான், கம்பமற்றிலங்கி னறிவதாய்விளங்குங் கதியதாமிம்முறை மையினல், நம்புவையிதுநீ யுண்மையென்றருளா னவின்றதாலெனக்கருள் விளக்கே. (உகூ)

இலங்கிடும்விடய மற்றிடத்தொன்று மியம்புதற்போதமற் றிடத்தே, நலங்கொளவொன்றுஞ் சாக்ஷியற்றிடத்தே நயந்திடவொன்றுமாய்ப் பதங்கள், பலந்தரப்பொருள்கள் விளங்கியொன்ருகப் பயக்குமாவாக்கியப் பொருடான், துலங்கிடுமின்ப வீடென்னன்கு சொற்றதென்றனக்கருள் விளக்கே. (௩0)

என்றுமிவ்வுலகைச் சுட்டிநோக்குதலை யிகந்தறிவாந்தனை யறிதல், நன்றுறயாவு மறிந்துசாக்ஷியதாய் நணுகிடுமறிவினை யறிதல், துன்றுபேருலகை யநியமாயறிவ தொழிந்ததைத்தானென வறியும், பொன்றுருவறிவை யறிதன்முப்பதத்தின் பொருளென்றதெனக்கருள் விளக்கே. (௩௧)

நாமரூபங்கட் கநியமாத னவிலுநீயவைகளின் கரிதான், யாமிருபகுப்புஞ் சச்சிதாநந்த மாதலேசிவமெ

ன மறைகள், தாமிகத்தெளிவாச் சாற்றியவந்தத் தாற் பரியத்தினு னியும், நாமுமெய்ச்சிவமு மொன்றெனத் தெரிய நவின்றதாலெனக்கருள் விளக்கே. (௩௨)

தன்னிடத்தொன்று யநாதியாயிருக்குந் தனிநினை வெனுமொரு மாயை, முன்னரோயுதித்த ததனிடைக்கு ணங்கண் மூன்றுளவவற்றினுற்பரமும், பின்னமாருயி ருஞ் சகமுமாய்த்தோன்றும் பிறிவறவந்நினை வடக்கி ன், மன்னிடுஞ்சிவமாய் மூன்றுமென்றருளால் வழங்கி யதெனக்கருள் விளக்கே. (௩௩)

உருவநாமங்க ணினைவினையன்றி யொளிர்ந்திடாவந் நினை வதுவும், தெரிவுருவான வறிவினைவிட்டுத் தெரி வுறுதாதலாற் சகமும், ஒருநினைவதுவு முண்மைச்சிற் சுகமா யொளிர்தருமுண்மையைக் காட்டிப், பொருவி லாவீட்டை யடையுமாறகத்திற் பொறித்ததென்றன க்கருள் விளக்கே. (௩௪)

நினைவினிலுதித்த சகமுமெங்ஙனமந் நினைவினையன் றிவே றிலேயோ, தனதிடத்துதித்த நினைவுமங்ஙனமே தன்னின்வேறிலையென வறிந்து, கனவறிவாய்நின் றறி துயில்கொளினீ கனவதாஞ்சகம்பினை நினைவும், பினமி னின்மயமாய்க் கரையுமென்றருளிப் பிறங்கியதெனக் கருள் விளக்கே. (௩௫)

புறக்கரணங்க ளியக்கமேநனவாம் பொலிந்திடுமக க்கர ணங்கள், சிறப்புறவியங்கல் கனவதாமிரண்டுஞ்

சிதைந்தறியாமையோ டுயிர்தான், மறப்புடனியங்கல் சுழுத்தியாமிவற்றில் வயங்கறிவுருவமாய் நிற்றல், அற ப்புதுமையதாந் துரியமாமெனவே யருளியதெனக்க ருள் விளக்கே. (ருசு)

நனவினிற்சுழுத்தி யுற்றறிவாகி னணுகிடுந்துரியமற் றதனல், சொனநனவதுவுஞ் சுழுத்தியுமாயுந் தொலை வுருக்கனவுநின் றிடுமால், நினைவிறந்தொளிரு மதீத மாநிலையி னீங்கிடுமஃதுமவ் வறிவாய்ப், பினையுனக்கு யர்வீ டாமெனவருளாற் பேசியதெனக்கருள் விளக்கே

அறிவுமாத்திரையாய் நிற்றலேமுத்தி யஃதகன்றந்நி ய நினைவாய்ப், பிறிவுறல்பந்த மாதலானினைவைப் பே தமிலறிவினிற் கரைக்க, நெறியுறுஞ்சமாதி தனிலிருந் தென்று முறங்கிடாதுறங்குறு நிலையில், செறியினின் பாலின் புதித்திடுமென்றே செப்பியதெனக்கருள் விள க்கே. (ருஅ)

சிந்தையுமதனுட் டங்குவாதனையுஞ் சிதைவிலஞ்ஞா னமுமாய்தற், கேர்ந்தைஞானமுநல் வாதனையதுவு மில ங்குநற்றியானமு மொன்ருய்ப், பந்தமதறவே யென் றுநீபழகிற் பரமசிற்சுகநினக் கெளிதாய்ச், சந்ததமெ ய்துமென் றுள்ந்தெளித்துச் சார்ந்ததென்றனக்கருள் விளக்கே. (ருகூ)

அருளொடும்பொருந்தி யென்றுநீவாளா வமைதலே சுகமஃதொழிந்திப், பொருளுறநினைவாய் வருவையே

விந்தப் பொருண்மயமாய்விடா தெங்கும், தெருள்வடிவான சாக்ஷிமாத்திரமாய்ச் சேர்ந்துபின்பண்டையப் படியே, இருளறுஞ்சிவமா யிருத்தனிற்கழகென் றியம்பியதெனக்கருள் விளக்கே. (ச0)

சீவனதுயர்பா ழகன்றிடத்தொன்றுஞ் சிறந்தசிற்பரத்தின தொருபாழ், ஆவதுமகன்ற விடத்தினிலொன்று மரியதோர்சிவத்தின தரும்பாழ், தாவலையகன்ற விடத்தொன்றுமாகத் தகைபெறவிளங்குமுத் துரியம், ஆவலுற்றறிந்தொன் றுவதேவீடென் றருளியதெனக் கருள் விளக்கே. (சக)

முற்பதப்பொருண்மெய் யறிவருளாகு முன்னுதற் பதம்பரம்பரையாம், சிற்பதப்பொருளொன் றுஞ்சிவமாகு மென்னவேதாந்தசித் தாந்தம், நற்பதமுறவே சமரசமாக நவின்றநூற்றுணிவினை யுணர்த்திச், சொற்பதமூன்றின் பொருள்களொன்றெனவே துலக்கியதெனக்கருள் விளக்கே. (சஉ)

சிவத்துவமசியென் றுரைக்குமாகமமுஞ் சிறந்திடுந் தத்துவமசியென், றவத்துவமகல வுரைக்குமாமறையுமிந்திருவாக்கியப் பொருள்கள், தவத்தவர்பாலுற் றுறவிசாரிக்கிற் சாருமத்துவிதமாம் பொருளாய்ப், பவத்துழலாதிந் நிலையமைந்திடெனப் பகர்ந்ததென் றனக் கருள் விளக்கே. (சங)

தெரிவுருவான வருணிலையடைந்து திவ்வியப்பனாயு டனென்றி, அரியதோர்சிவமா யமைதலுஞ்சுத்த வறிவுபேரறிவதாய் நின்றே, உரியதோர்பிரம மாயுறுதலுநீயுளபடிமறையொடா கமத்தின், விரிபொருளுணர்ந்தா லொன்றதாமெனவே விளக்கியதெனக்கருள் விளக்கே.

மலமொழிந்தெங்குஞ் சிவமயமாக மன்னிநின்றமைதலு மயக்கச், சலமழிந்தெங்குந் தன்மயமாகத் தனையறிந்திடுதலுஞ் சான்றோர், நலமுறுஞ்சந்நி தானமுற்றவரா னயம்பெறவறிந்திடி னென்றே, அலதிரண்டாகா தெனவெனதைய மகற்றியதின்னருள் விளக்கே. ()

சகலமேனவாங் கேவலஞ்சுழுத்தி தருசுத்தநனவினிற் சுழுத்தி, அகலமாந்துரியந் துரியமேயதினின் றருளறிவாகிநின் றனைத்தும், புகலதாம்பரமே யெனவநுபவத்திற் போதவின்புறலதீ தமதென், றிகலிலாதுளைக்குஞ் சமரசப்பொருளை யீந்ததென்றனக்கருள் விளக்கே. (சகூ)

பந்தமதகன்று சிற்றறிவொழித்துப் பராபரமாகியே நிற்றல், சந்தமதுறுவே தாந்தசித்தாந்தச் சார்பிலுமுளைத்திட லறிந்து, சந்ததம்வாதஞ் செய்தலைவிடுத்தே சமரசநிலையடைந் துய்தல், மைந்தநிற்கின்பென் றுளத்தினிற்றுணிவை வழங்கியதெனக்கருள் விளக்கே. ()

எம்மதத்தவர்க ளியம்புசொற்களுக்கு மிலக்கியப் பொருளைநீ யறிந்து, சம்மதமுறநின் னிலைவிடுத்தவர்

பாற் றருக்கமிட்டழிதலை யொழித்து, நம்மதநினைப்பு மறப்புமற்றகண்ட நாயகன்பாலடைந் தின்பச், செம் மதமுறலே பொருளெனத்தெளித் துச் சேர்ந்ததென்ன கத்தருள் விளக்கே. (சஅ)

அகம்புறத்தொளிரும் விராகமுமுயிர்க ளனைத்தின்மீ தருளுமவ் வருளே, சகந்தனிலுருவாய் வரும்பரகுரவ ன் றன்னிடத்தொப்பிலா வன்பும், சுகந்தனதகண்ட வ டிவமாயொளிருஞ் சொரூபஞானமுமடைந் தெங்கும், தகுமுயிர்முத்த னுகிவாழெனவே சாற்றியதெனக்க ருள் விளக்கே. (சகூ)

உனக்குணனிருந்தே யுண்மைகளியாவு முணர்த்திய படியநு தினமும், எனக்குணீயிருந்தப் பொருள்களை யுணர்ந்தே யின்புறச்சமாதியுற் றெங்கும், தனக்குநேரி ல்லாச் சச்சிதாநந்த தற்பரசிவத்தொடுங் கலந்து, ம னக்கிலேசத்தை யொழித்துவாழெனவே வாழ்த்திய தெனையருட் பரையே. (ருo)

வாழ்த்து.

வாழிசிற்சபையி னடஞ்செயெம்பரமன் வாழிநல்ல ருளுமா தேவி, வாழிமெய்த்தொண்டு புரிசிவனடியார் வாழிசைவாகம மறைநூல், வாழியைந்தெழுத்தோ ட

க்கமாமணியும் வாழிமெய்ச்சாதன நீறு, வாழியெவ்வு
யிரு மென்றுமெவ்வுலகும் வாழியிந்நூலும் வாழிய
வே. (௱௯)

ரு - வது. திருவருள்விளக்கம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௨0௩.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான்றிருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

சூ - வது.

## பிரமோபதேசக்கட்டளை.

---

### கடவுள்வணக்கம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அருமறையாகமத்தினுளதனிப்பொருளே
கருணையினுலவனிதன்னில்
திருவுருவாய்வந்தருளிமலமயக்காற்
செகநாட்டஞ் செறிந்துவாடும்
தெரிவிலியேன்றனக்கருணாட்டங்கொடுத்தென்
றனைமுன்னர்த்தெரித்துப்பின்னர்
ஒருவடிவாந்தனையறிவித்தொன்றுக்கு
மருளிறையையுன்னிவாழ்வாம்.

ஸ்ரீபரமாநந்த உல்லாச வைபோகத்தைத் தந்தருளும் தத்துவஞானத்திற்கேதுவாகிய சிரவணாதிகளில் அதிகாரியாக்கும் நித்தியாநித்தியவஸ்துவிவேகம், இகமுத்தரார்த்த பலபோகவிராகம், சமாதிசட்கம், முமுக்ஷுத்துவம் என்கின்ற சாதனசதுஷ்டய சம்பத்தையுடைய

ஓர் பக்குவியானவன், மலச்சிறையில் கட்டுண்டவனா ய்ப் பவத் துன்பப்பட்டு வெகுகாலம் இக்கொடிதாகிய துன்பத்தைநீக்கி மோக்ஷவின்பத்தை அளித்து இரக்ஷி ப்பவரொங்குளரொன்று தேடும் அதிதேட்டரவால் பாலு க்குள் மறைந்து பூரணமாயிருந்த நெய் கடைதலினால் தடித்து வெளிப்பட்டுத்தோன்றியதுபோல, தன்னுண் மறைந்திருந்த சச்சிதாநந்த நித்தியபரிபூரண சிவசொ ரூபமே பாசவைராக்கியம், ஜீவகாருண்ணியம், ஈசுர பக்தி, பிரமஞானம் ஆகிய நான்குடனுங்கூடி விளங்கு ம் ஸ்ரீசற்குருசுவாமிகளாகத் திருவுருவங்கொண்டு, க ட்புலனுக்கு வெளிப்பட்டுத்தோன்ற, இப்படித்தோன்றி ய ஸ்ரீசற்குருசுவாமிகளது உபயசரணாரவிந்தங்களில் தண்டாகாரமாய்விழுந்து கோவென்றழுது முறையி ட்டவனைப்பார்த்தருளி அப்பாநினக்குற்ற ஆபத்துயா தென்று கேட்டருள.

சுவாமி ! பலாபேக்ஷையின்றி அடியேனை வலிதிற்ற டுத்தாட்கொள்ளவந்த கிருபாநிதியாகிய வென்னுடை ய ஞானாசாரியரே, தேவரீர் அன்றி மற்றியாவராலு நீ க்குதற்கரிய இப்பிறவித்துன்பமே எனக்குற்ற ஆபத் தென்று விண்ணப்பஞ்செய்து, தைரியவாக்கியங்க ளால்தோத்திரமும் ஆராமையுற்ற மனத்தினாலாதரவும் அடக்கமாகிய காயத்தால் அர்ச்சனை நமஸ்காரங்களும்

ஆப்தம், அங்கம், தானம், சற்பாவமாகிய பணிவிடைக் ளுஞ்செய்து நின்றவனது பக்குவதசையைச் சோதிக் க உண்மையாகத்தோன்றலால் திருவுளத்தில் கிருபை கூர்ந்து; வாராய் ஈமதுமாணுக்கனேயென் றழைத்துத் திருவடியைச்சூட்டி, சமீபத்திலிருக்கச்செய்து, விதிப் படி அவனதுடல்பொருளாவி மூன்றையுங்கைக்கொ ண்டு, தமதுதிருவருண்ஞானக்கண்தந்தருளி மலரகித பிரமமான நினக்கெப்பொழுதும் பிறவித்துன்பம் மு யற்கோடுபோன்று கிடையாதென்று தமது மலர்க் கரத்தால் சிடனதுசிரத்தைத்தொட்டுச் சத்தியஞ்செ ய்தருள்,

சுவாமி! மலமாவதுயாது? ரகிதமான பிரமமாவது யாது? நான்யாவன்? இவற்றை அடியேனுக்குத்தெரிய த் திருவுளம்பற்ற வேண்டுமென்ன?

மலமாவது அஞ்ஞானம், மாயை, கன்மம் எனத்திரி விதமாயிருக்கும்; சூரியாதிஅந்நிய பிரகாசங்களைவேண் டாது சகலத்தையுந் தோற்றுவித்துக்கொண்டு தானுஞ் சுயம்பிரகாசமாய்ச் சதாவிளங்குகின்றபடியால் அஞ் ஞானமலரகிதமாயும், சகலாதாரத்திற்கும் தன்னைத்த விர வேறொருவரில்லாமல் தானே அத்துவிதமாய் விள ங்குகின்றபடியால் மாயாமலரகிதமாயும், தேசகாலவ ஸ்து பரிச்சேதமின்றிப் பரிபூரணமாய் விளங்குகின்றப டியால் கன்மமலரகிதமாயும், விளங்குகின்றதே பிர

மம்; நீயோ? அறிவாய்விளங்குகின்ற சொரூபமே என த் திருவாய்மலர்ந்தருள,

சுவாமி! அடியேன் புத்திரனத்தாற்செய்யும் விண்ணப்பங்களுக்குச் சலியாமல் திருச்செவிசாத்தித் திருவுளங்கொண்டு பிரதியுத்தரங்கட்டளையிட்டருளவேண்டிய கடமை, தேவரீருக்கிருப்பதால் கிருபைசெய்யவேண்டியதென்று துதித்து, நான் அறிவாய்விளங்குந் தன்மையை முன்னர்த்தெரியத் திருவுளம்பற்ற வேண்டுமென்ன,

நின்னைக் கரதலாமலகம்போல உண்மையாகத்தெரிவிக்கின்றோம், நீயுந் தெரிந்துகொள்ளக் கடவாயென்று திருவாக்கருளி, இங்கேவிளங்காநின்ற சகலபிரபஞ்சங்களும் எத்தனைபதார்த்தங்களாக விருக்கின்றனவென்ன,

சுவாமி! விசாரித்துப்பார்க்குமிடத்துச் சப்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தமாகிய ஐந்துபதார்த்தங்களாக இருக்கின்றனவெனலும்,

ஆனால், இங்ஙனம் யாதினாலறிந்தாயென்ன,

சுவாமி! என்னாலேயே அறிந்தேனெனலும்,

நீயாரென்ன,

சுவாமி! அவயவசகிதமாகிய இத்தேகமேயானெனலும்,

இத்தேகங்கொண்டோ முன்சொன்ன ஐந்துபதார்த்தங்களை அறிந்தாயென்ன,

சுவாமி! இம்மெய், வாய், கண், மூக்குச்செவிகளால் அறிந்தேனெனலும்,

ஒருவனுக்குச் செவியிருக்கவுஞ் செவிட்டுத்தன்மையால் சத்தமறியாமையும் மெய்யிருக்கவும்திமிரால் ஸ்பரிசமறியாமையும் கண்ணிருக்கவும் படலத்தால் ரூபமறியாமையும் வாயிருக்கவும் நாவறட்சியால் ரசமறியாமையும் மூக்கிருக்கவும்அடைப்பால் கந்தமறியாமையும் வருவானேன் என்ன,

சுவாமி! தேவரீர்வாக்கிய பிரகாசத்தால் நோக்கும்போது இத்தேகம் அல்லாமலே ஐம்புலன்கள்வேறே உள்ளனபோலத்தோன்றுகின்றன; அவையாவையோ நன்முகத்தெரியத் திருவுளம்பற்றவேண்டுமெனலும்.

அவைதாம் சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்நுவை, ஆக்கிராணம் என்னும் ஞானபஞ்சேந்திரியங்களென்றுசொல்லப்படுவனவென்ன,

சுவாமி! அப்படியானல் இத்தேகம் யாதெனலும்,

விசாரித்துப்பார்க்குமிடத்தில் இஃது முன்சொன்ன ஐந்துபதார்த்தங்களோடும் சேர்க்கப்பட்டுத் தேகாதிபிரபஞ்சமென்று சொல்லப்படுமென்ன,

சுவாமி! முன்னர்த் தேவரீர் திருவாய்மலர்ந்தருளிய ஞானேந்திரியங்களின் சொருபத்தை நன்முகத்தெரியத் திருவுளம்பற்றவேண்டுமெனலும்,

'மெய், வாய், கண், மூக்கு, செவிகளல்லாமல் அவற்றினிடமாயிருந்து சத்தாதி பஞ்சவிஷயங்களை அறிவனவாயும், மனங் கலவாதபோது அவற்றைப் பகுத்தறியாமல் பொதுவாய் அறிவனவாயும், எவ்வறிவுகளுளவோ அவையே ஞானேந்திரியங்களென்ன,

சுவாமி! இந்திரியங்களென்பவை தேவரீர்கிருபையால் தெரியவந்தன. மனமென்று திருவாய்மலர்ந்தருளினீர் இந்திரியங்களன்றி மனமென்பதுண்டாயின் அதன்சொருபத்தை விவேகசூனியனாகிய அடியேனுக் கறியத் திருவுளம் பற்றவேண்டுமெனலும்,

தேகேந்திரியங்களை அபேக்ஷியாமல் லோகாலோகாந்தரங்களில் கமனாகமனம்பண்ணுவதாயும், மனோராச்சியமாகிய சூக்ஷுமவிஷயங்களை அறிவதாயும், ஜீவன் கலவாதபோது அவற்றைப் பகுத்தறியாமல் மறதியோடும் பொதுவாயறிவதாயும், யாதோரறிவுண்டு? அஃதேமனமென்ன.

சுவாமி! இம்மனத்தைக்கொண்டுபார்க்கும்போது இந்திரியங்கள் அபாவமா யிருக்கின்றனவெனலும்,

ஒருவனுக்கு மனமிருந்தும், முன்னர்ச்சொல்லிய மெய், வாய், கண், மூக்குச் செவிகளிருந்தும், சத்தாதி

விஷயங்களை அறியாமற்போகின்றபடியால் இவற்றையல்லாமலும் இந்திரியங்கள்வேறே உண்டென்பதற்குச் சந்தேகம் வேண்டுவதில்லையென்ன,

சுவாமி! மனமென்பதும் தயாசமுத்திரமாகிய தேவரீர் கிருபையால்தெரியவந்தது, ஆயினும், முன்னர்ச்சீவனென்று திருவாய்மலர்ந்தருளினீர் இம்மனமன்றிச் சீவனென்பானுண்டாயின் அவனது சொரூபத்தையும் பிரஞ்ஞாமந்தனாகிய அடியேனுக்குவிளங்கத் திருவுளம் பற்றவேண்டுமெனலும்,

தேகேந்திரிய மனங்களை அபேக்ஷியாமல் தூஷ்ட்ணீம் பூதாவஸ்தையையும், மூர்ச்சாவஸ்தையையும் அறிவதாயும், ஞானத்துமாவாகிய கூடஸ்தர்கலவாதபோது தன்னை அறியாமல் சூனியவிஷய்த்தை அறிவதாயும் யாதோரறிவுண்டு? அஃதேஜீவனென்ன,

சுவாமி! இச்சீவனைக்கொண்டு பார்க்கும்போது மனமானது அபாவமாயிருக்கின்றதெனலும்,

தூஷ்ட்ணீம்பூதாவஸ்தையாதிகளில் ஜீவனிருக்கவும், இந்திரியங்களும் பொதுப்பார்வையாயிருக்கவும், மனம் யாதொன்றுநினையாமலிருக்கின்றதென்னும் அநுபவமிருக்கின்றபடியாலும், விஷயபரிணாமமில்லாத சூக்ஷும அசைவோடு இருக்கின்றதை நுண்ணிதாய்ப் பார்க்கின்றபோதிருக்கின்றபடியாலும், மனமில்லையென்று நீசொல்லியது ஆராயாத அவிவேகமல்லதுவிவேக

ம் அன்றென்று திருவுளத்தில் சற்று முனிவுகொண்டதுபோலக் காட்டியருள,

மிகவும் நடுநடுங்கி சுவாமி! பூதேவி கோபிக்கில் இருக்கவேறிடம் இன்மைபோல, நற்றாயினும் அதிகபரிவாய் வந்தருளுந் தருமமூர்த்தியே தேவரீர் திருவுளத்தில் முனிவுகொள்ளின் அடியேன் உய்யும்வகை காண்கிலேனென்று மனம் அழலிற்பட்ட மெழுகெனவுருகிப் பலவாறு வந்தனைசெய்யாநிற்கத் திருவுளம் இரங்கி அஞ்சேலென்று அபயாஸ்தஞ் செய்தருள,

சுவாமி! ஜீவனென்பானைத் தேவரீரநுக்கிரகத்தால் அறிந்தனன், ஆயினும், ஆவரணம்நீங்காமல் அயருகின்ற அடியேனுக்குச் சீவனையன்றி ஞானாத்மா உண்டாகில் அதனது சொரூபத்தைத்தெரியத் திருவுளம்பற்றவேண்டுமெனலும்!

முன்னர்ச்சொல்லிய ஐந்துபதார்த்தங்களாகிய பிரபஞ்சங்களையும், தேகத்தையும், இந்திரியங்களையும், மனத்தையும், அறிகின்ற ஜீவனுக்கும் சாக்ஷிமாத்திரமாயும் விலக்ஷணமாயும் விளங்குகின்ற யாதோரறிவுண்டு? அஃதே ஞானாத்மா என்ன,

சுவாமி! அதை நோக்குமிடத்து ஒன்றுந் தெரியாமல் அந்தகாரமாயிருக்கின்றதெனலும்,

அவ்வந்தகாரமாகிய மூலாஞ்ஞானத்தை அறிந்து சொல்லுகின்றாயோ? அறியாமற் சொல்லுகின்றாயோ? என்ன?

சுவாமி! அறிந்தே சொல்லுகின்றேனெனலும்,

அங்ஙனமறிந்தநீயே, ஞானாத்மா என்ன,

சுவாமி! இப்படித் தேவரீர் அநுக்கிரகித்தது அநுமானமாய் இருக்கின்றதல்லது, தன்மைப்பிரத்தியக்ஷமாக விளங்கவில்லையே எனலும்,

ஆநந்தமடைந்து ஆனால் அவ்வந்தகாரத்தை அதோமுகமாக இருந் தறிகின்றாயோ! ஊர்த்தமுகமாக இருந் தறிகின்றாயோ என்ன?

சுவாமி! அதோமுகமாக இருந்து அறிகின்றேன் எனலும்.

அவ்வாறு அறியாமலே அப்பார்வையை ஊர்த்தமுகமாகத்திருப்பி நமதுதிருவருளினால் பார்க்கக்கடவாயென்று திருவுளத்திலும் நினைத்தருள,

சுவாமி! அப்படியே பார்க்குமிடத்தில் நான் சுயம்பிரகாசமாய் விளங்குகின்றேன் எனலும்,

ஆனால் அங்குண்டான சுவாநுபவத்தைச் சொல்லுவாயென்ன,

சீடன் தனது சுவாநுபவபிரஞ்ஞையோடும் ஆசிரிய ரது திருமுகத்தைநோக்கி சுவாமி தேசிகரத்தினமே அடியேனுடைய சொரூபத்தை அநாதிதொட்டு இன்று வரையும் தெரிந்துகொள்ளாமல், அசுத்தமாயும் துக்கத் துக்கு ஏதுவாயும் அநித்தமாயும் சடமாயுமுள்ள தே காதிகளாய்த் துன்பப்பட்டுச் சனனசாகரத்தில் மூழ் கிக் கரைகாணாமல் இடுக்கணுறுகின்ற என்னை இன்று மது திருவருளாகிய புணையால் சொரூபமாகிய கரை யிலேற்றி இரக்ஷித்த ஞானபானுவே எனதறிவிற்கு அ றிவாய் விளங்காநின்ற சிற்பராநந்தச்செல்வமே அரா, அரா அடியேன் என்னபாக்கியஞ்செய்தேனோ என்னை யான் கண்டவிடத்தில் கோடிசூரியபிரகாசத்தாலும் நீ ங்குதற்கு அரிய ஜீவத்வமூலாஞ்ஞானமாகிய அந்த காரமானது ககனாரவிந்தம்போலச் சொல்லளவிற்குமி ல்லாமல் ஒழிந்தபோதுளவாகிய சிற்சுகோதயவிலா சமாகிய பேராநந் தாதிசயாநுபவத்தைச்சொல்ல எ ன்றால் அது வாக்கிற்கும் மனத்திற்கும் அறிவிற்கும் எட்டாமலிருப்பதால்தானே தானாய் அநுபவித்தறிவ தே அல்லது சொல்லக்கூடுவதன்று. இங்ஙனம் அரு ளிய தேவரீர் கிருபாமான்மியத்தை யாதெனப் புகழ் வேன் என்று பேரன்போடு அநேகவிதமாகத் தோத்தி ரஞ்செய்து நமஸ்கரித்து சுவாமி! தேகேந்திரிய மனோ ஜீவனுக்கும் சாக்ஷியாய் அப்பாற்பட்டு விலக்ஷணமாய் விளங்குகின்ற அறிவாகியநான் அவைகளாய்ப் போன

மார்க்கத்தைத்தெரியத் திருவுளம் பற்றவேண்டுமென லும்,

இப்படிச் சதோதயமாய் விளங்குகின்ற நின்னிடத்தில் அநாதியாய் இராநின்ற மூலாஞ்ஞானசக்தியினல் ஆரோபிதமாகத்தோன்றும், ஓரசைவாகிய சங்கற்பசக்தியின் வசத்தினுல் ஜீவனுகியும், அப்படிச் சீவனுகிய நீயே பஞ்சேந்திரியங்களின் வசத்தினுல் மனமாகியும் அப்படி மனமாகிய நீயே தேகவசத்தினுல் பஞ்சேந்திரியங்களாகியும், அப்படிப் பஞ்சேந்திரியங்களாகிய நீ தேகாபிமானவசத்தினுல் தேகமாகியும், இத்தேககணங்களை யானென்னு மகங்காரமும், இதற்குப் போக்யசாதனங்களான புவனபோக பதார்த்தங்களை எனதென்னும்மமகாரமும் அடைந்து மிகவுங் கொடிதாகிய பவத்துன்பப்பட்டாய் இனிமேல் இந்திரியவிவகாரமாய்ப் பிரேரிக்கும் சாக்கிராவஸ்தைக்கும், மனேவிவகாரமாய்ப் பிரேரிக்குஞ் சொப்பனுவஸ்தைக்கும், ஜீவவிவகாரமாய்ப் பிரேரிக்கும், சுழுத்தியவஸ்தைக்கும், எப்போதும் விலக்ஷணமான சாக்ஷிமாத்திரமாய் விளங்குவாயேல் மூலபிரகிருதிமுதல் சகல பிரபஞ்சங்களும் தங்கத்தின்கண் மகுடாதியாபரணங்கள் தங்கமுமல்லாமலும் தங்கத்தைஅன்றி வேறுமல்லாமலும் விளங்குவனபோல, நின்னிடத்தில் தன்மயமாய் விளங்கிச் சாக்ஷிவாசனையும் கரைந்து சகஜாநந்தமாய் விளங்குமென்றருளிச்செய்ய,

சுவாமி! தேவரீர் கிருபையினால் எனதுசொரூபத்தை யானறியலாயினேன்; நானே அந்தப்பிரமமானதற்குச் சந்தேகமில்லாமல் இருக்கும்பொருட்டுச் செய்யுஞ்சங்கைகளுக்கு உத்தரங் கட்டளையிட் டருளவேண்டுமென்று நமஸ்காரஞ்செய்து, தேவரீர் முன்னர்த்திருவாக்கருளிய திரிமலங்களுள் அஞ்ஞான மெத்தனைவிதம்? மாயையெத்தனைவிதம்? கன்மமெத்தனைவிதம்? இவற்றைத் தெரியப்பகுத்துத் திருவுள்ம்பற்றவேண்டும் எனலும்,

விஷயாஞ்ஞானமென்றும், சொரூபாஞ்ஞானமென்றும், அஞ்ஞான மிரண்டுவிதமாயிருக்கும். சத்துவகுணமாயையென்றும், ரஜோகுணமாயையென்றும், தமோகுணமாயையென்றும், மாயைமூன்றுவிதமாயிருக்கும். ஆகாமியகன்மமென்றும், சஞ்சிதகன்மமென்றும், பிராரத்தகன்மமென்றும் கன்மம் மூன்றுவிதமா யிருக்குமென்ன,

சுவாமி, அவற்றின் தொழில்களைத்தெரியத் திருவுளம் பற்றவேண்டும் எனலும்,

சப்தாதிவிஷயங்களை மறைப்பது விஷயாஞ்ஞானத்தினதுதொழில், சொரூபத்தைமறைப்பது சொரூபாஞ்ஞானத்தினதுதொழில், அதிஷ்டானமாகிய சச்சிதாநந்தபிரமத்தைச் சமஷ்டி அபிமான அறிவென்கின்ற ரூபமாகவும், சர்வஞ்ஞனாகிய ஈஸ்வரனென்கின்ற நா

மமாகவும், ஆரோபிதமாகத் தோற்றுவிப்பது சத்துவ குணமாயையினது தொழில், வியஷ்டி அபிமான அறி வென்கின்ற ரூபமாகவும், கிஞ்சிஞ்ஞனுகிய ஜீவனெ ன்கின்ற நாமமாகவும், ஆரோபிதமாகத் தோற்று விப்பது ரஜோகுணமாயையினது தொழில், சப்தா திபஞ்சவிஷயங்களென்கின்ற ரூபமாகவும், அநேகவி தங்களாகிய ஜகத்தென்கின்ற நாமமாகவும், ஆரோபி தமாகத் தோற்றுவிப்பது தமோகுணமாயையினது தொழில்; புண்ணியபாவ இச்சாசங்கற்பமாதியாய் வ ந்துவந்து அநுபவிக்கப்படாமல் வாசனையாகக்கட்டுப் படுவது ஆகாமியகன்மத்தினதுதொழில், வாசனையாக க்கட்டுப்பட்டு மேல் அநேகம்பிறவிகளுக்குப் பீஜரூப மாகவர்த்தித்துப் பாகப்பட்டகன்மப்படிக்குத் தேகா திகளைக் கொடுப்பது சஞ்சிதகன்மத்தினது தொழில். ஜாதி, ஆயுள் சுகதுக்கபோகமாக வநுபவிக்கவருவது பிராரத்த கன்மத்தினதுதொழிலென்று அருளிச்செ ய்ய,

சுவாமி! இப்படித் தேவரீர் அநுக்கிரகித்த எண்வ கைமலங்களும் அவற்றின்தொழில்களும் பிரமமாகிய என்னிடத்தும் ரகிதமானவைகளை சுவாநுபவமாக வி ளங்சத் திருவுளம்பற்றவேண்டும் எனலும்,

ஆனுல், தெரியச்சொல்லுகின்ரும், வித்யாவிநயத் தோடும் சூக்ஷமமான ஏகாக்ரசித்தத்தையுடையவ

னுய்க் கேட்பாயாக. பிரமமாகிய தான் பிருதிவிமுதல் மூலபிரகிருதி பரியந்தமாகிய திருசியம்போன்று விஷயமாகாதபடியினாலும், பந்ததசையில் ஜீவனுக்கு முதல்ா அவஸ்தாதிரயங்களில் தோன்றும் ஸ்தூலம் சூக்ஷுமம் சூனியமானவிஷயங்களையும் தோற்றுவிக்கின்ற சொரூபமாக விளங்குகின்றபடியினாலும், விஷயாஞ்ஞானமும் அதனதுதொழிலுமில்லாமலும், அசத்துச்சடதுக்காதிகளைக்குறித்துச் சச்சிதாநந்த லக்ஷணுதிகளையுடைய திருக்கு சொரூபாநுபவத்திற்கும், அதீதமாய்விளங்குகின்றபடியினாலும், முத்திதசையில் அவ்வநுபவத்தையும் விளக்குகின்ற சொரூபமாக விளங்குகின்றபடியினாலும், சொரூபாஞ்ஞானமும் அதனதுதொழிலும் இல்லாமலும், குணதீத பிரமசொரூபமாகிய தன்னிடத்தில்ஈஸ்வரனுக்குரிய நாமரூபங்களும், ஜீவனுக்குரிய நாமரூபங்களும், ஜகத்திற்குரிய நாமரூபங்களும் ஆகிய ஆரோபிதமும், தன்னம்சமான அதிஷ்டானசச்சிதாநந்தத்தை அன்றி இல்லாமையாய் விளங்குகின்றபடியினால் சத்துவகுணமாயையும், அதனதுதொழிலும், ரஜோகுணமாயையும், அதனதுதொழிலு, தமோகுணமாயையும், அதனது தொழிலும் இல்லாமலும், சூக்ஷுமதேகசம்பந்தனுய் இச்சிக்கின்ற ஜீவனிலும் இச்சைகளிலும் இச்சிக்கப்படுபொருள்களிலும் உள்ளும்புறமும் தானேயாய் விளங்குகின்றபடியினாலும், விக்ஷேபரூபமானமா

யை பொய்யாயிருக்கின்றபடியினுலும், வாசனையாய்க் கட்டுப்பட மூலபிரகிருதியான இடம் இன்மையினுலும் ஆகாமியகன்மமும், அதனதுதொழிலும் இல்லாமலும், இப்படி ஆகாமியம் இல்லாமையாலும், காரணதேகமாகிய அஞ்ஞானம் ஞானத்தால் சூனியமாய்ப் போனதினுலும், மேல்தேகத்திற்குரிய ஜீவன் சிவமாய்ப்போனதினுலும், சஞ்சிதகன்மமும் அதனதுதொழிலும் இல்லாமலும் இப்படிச் சஞ்சிதமில்லாமையினுலும், கன்மபோகங்களுக்குரிய ஸ்தூலசரீரமே பிரமாநந்தபூரணத்தில் கரைந்துபோனதினுலும், சகலமும் தனது சிற்சத்திலீலாவிநோதமாய் முடிந்தபடியினுலும், பிராரத்தகன்மமும் அதனதுதொழிலும் இல்லாமலும், சுயம்பிரகாசமாயும் அத்துவிதமாயும் பரிபூரணமாயும் விளங்குகின்ற நினதிடத்தில் அநுபவமாகவிருப்பதை நீயே சுவாநுபவத்தில் பார்த்துச்சொல்லென்ன,

சுவாமி! தேவரீர் அநுக்கிரகித்தருளியபடியே மலாகிதமாய்ப் பிரமமென்பதும் நானென்பதும்வேறின்றி ஒன்ருய் விளங்குகின்றேனெனலும்,

இஃதே மறைமுடிவாகிய சாந்தோக்ய உபநிஷதத்திற்கூறும் "தத்வமசி" என்னும் மஹாவாக்யார்த்தமும் மகேசராநுபவமும் நமதநுபவமுமாம். இதில்சந்தேகமில்லை, ஆயினும், இப்படியாவுமறிந்த ஏர்ஞானவிருத்தி

யிருக்கின்றபடியால் அதையும் தன்மயமாக்கிக் கொண்டு விளங்குவதே நமது பரமார்த்த சித்தாந்தம்; ஆதலால், அப்படிச்செய்யக்கடவாயென்று மௌநாநந்தசொரூப்மாய் இருந்தருள்,

சீடனானவன் மிகவும் அதிசயமடைந்து, சுவாமி! நல்லபுத்தியென்று தானும் அப்படியே அந்நிலை சகஜாநுபவமாகப் பெற்றெழுந்து, பலதரம் வலம்வந்து திருவடிகளில் பன்முறைஅஷ்டாங்காதி நமஸ்காரங்களும் செய்தெழுந்து, நாத்தழும்பேறவாழ்த்தித்திருவுருக்காக்ஷியைக் கண்ணாரக்கண்டு களிக்குந்தோறும் கண்களிலாநந்தபாஷ்பம்பொழியவும், தனக்கருளிய பெருங்கருணையை நினைக்குந்தோறும் உரோமஞ்சிலிர்க்கவும் உடல்புளகாங்கிதமாகவும் பேரன்பினால் ஆலிங்கனஞ் செய்துகொள்ள விரிந்த அஸ்தங்கள் அஞ்சிச் சிரசின் மேல் அஞ்சலியாகக் குவியவும், ஆராமைமேலிட்டால் நாக்குழறவும் சித்தமுருகிப்பரவசப்பட்டமையால் சித்திரபிரதிமைபோன்று சந்நிதானத்தில்நின்ற மாணாக்கனைப்பார்த்தருளி, பரமபிதாவாகிய ஸ்ரீசற்குருஸ்வாமிகள் சந்தோஷமடைந்து செந்தாமரைமலர்போன்ற திருக்கரத்தால் திருநீற்றைத்தரித்துச் சுவசப்படுத்தி நாம் அநுக்கிரகித்த உபதேசவாக்யங்களை வாக்களவில் ஆக்காதுமனனஞ்செய்து சுவாநுபூதிக்குக் கொண்டுவ

ந்தமையால் நீயே சற்குருவாக்கிய பரிபாலனஞ்செய்யும் சற்சீடனென்று புன்முறுவல்செய்து கிருபாநோக்கத்தோடும் நம்போல நீயும் வாழ்வாய் என்று ஆசீர்வாதஞ் செய்தருளினபடியே ஜீவன்முத்திதசையில் சின்னாள்வாழ்ந்திருந்து பின்னர் விதேகமுத்தியை அடைந்தனன்.

கூ - வது பிரமோபதேசக்கட்டளை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவபெருமான்திருவருள்வாழ்க

# தத்துவஞானதீபிகை.

எ - வது.

## சிதம்பரரகசியசிந்தனை.



### கடவுள்வணக்கம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

எந்தவெந்தச் சமையத்தோ ரெங்ஙனெங்ஙன் வேண்டுற்றார், அந்தவந்த நெறியுள்ளோர்க் கங்ஙனங்ஙன் வெளிப்பட்டே, பந்தமகற்றி யவ்வவர்க்காம் பதத்தை யருளிச் சுகமளிக்கும், சந்தப்பொருளி யாதகனைச் சார்ந்தெஞ்சிந்த னையையுரைப்பாம்.

தமதுபகிர்முக பின்னுகார சடசத்திசொரூபியென்னும் மாயாசக்திகாரியமாகிய நாமரூபமென்னும் தில்லைப்பதியின்கண்ணே, சாக்கிராவஸ்தைக் கிடமாகிய ஸ்தூலதேகமென்னும் ஆலயத்துள், சொப்பனவஸ்தைக் கிடமாகிய சூக்ஷுமதேகமென்னுஞ் சபையில், சுழுத்தி அவஸ்தைக் கிடமாகிய காரணதேகமென்னும் அலங்கா

ரபீடத்தில், விஸ்வாதி அபிமானதிரயாதிகாரத்திற்கு இடமாகிய ஜீவனென்னும் முயலகன்மீது துரியாவஸ்தைக்கிடமாகிய மஹாகாரணமென்னும் சாக்ஷித்வமாகின்ற தமது அந்தர்முகாபின்னாகார சிற்சத்திசொரூபியென்னும் சிவகாமசுந்தரியார் பரப்பிரயோசனாபேக்ஷாகாரணார்த்த சம்பந்தஞானோதய திருஷ்டியால் அபேதானுபவமாகிய சகஜாநந்தநிலையைத் தரிசனஞ்செய்யும்படி அவாங்மானசகோசரமாகிய துரியாதீதாவஸ்தைக்கு இடமாகிய சுபாவசொரூபமென்னும் சச்சிதாநந்தமே ஒருதிருமேனியாகக் கொண்டருளி, ரஜோகுணம்சமாகிய தமருகம் சிருஷ்டிமூலமாய் ஓர்கரத்தும், சத்துவகுணம்சமாகிய அபயம் திதி ஏதுவாய் ஓர்கரத்தும், தமோகுணம்சமாகியமழு சங்காரகாரணமாய் ஓர்கரத்தும், பந்தபரிபாகாம்சமாகிய சலனம் திரோபாவாதாரமாய் ஊன்றிய ஓர் செங்கமலப்பொற்பாதத்தும், மோக்ஷாம்சமாகிய சுத்தமத்யகத நிராதார நிர்ச்சலனம், அநுக்கிரகார்த்தமாய் அரியாதிதேவர்களுக்கும் அறிவரிய நித்ய, நிருபாதிக, நிரதிசய, பரிபூரணாநந்த ரசாமிர்தாம் போருககுஞ்சிதத் திருவடியின்கண்ணும் வைத்தருளி, பஞ்சகிருத்தியபாரராய் இஃதொன்றே உண்மையான சிதம்பரரகசியமென்று குறிப்பா

ற்காட்டும் சைகையை ஒப்பற்ற திருக்கரத்தாற்செய்துகொண்டு பிரமாநந்தலீலாவிநோத உல்லாசத்தோடு எங்கும் சதாநந்த நிர்த்தனஞ்செய்தருளி விளங்காநின்ற தெய்வசிகாமணியாகிய எமது சொரூபாநந்த தாண்டவேசரது திருவருள் பல்லாண்டு பல்லாண்டு வாழ்க வாழ்க.

எ - வது சிதம்பரரகசியசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

சிவபெருமான் திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

## அ - வது

## உபயஞானமார்க்கசிந்தனை.

நித்தியாநித்தியவஸ்து விவேகாதிசாதன சதுஷ்டயத்தைப் பூரணமாகவுடைய தீவிரதரபக்குவர்கள், சற்குருஸ்வாமிகளது சந்நிதானத்தில் அத்வைத பிரமசொரூபத்தை விசாரித்தறியவேண்டுவது எங்ஙனமென்னின்,

இச்சகல ஜீவேஸ்வரஜகத்தாகிய நாமரூபங்கள், மனோராச்சிய பிரபஞ்சம்போல, சங்கற்பத்தை அன்றி வேறில்லையென அறியின், பிரபஞ்சம் சூக்ஷ்மரூபமான தன்மாத்ராம்சமானதினால், சூக்ஷ்மரூபமாகிய மனத்துடன் ஏகத்வங்கூடி மனமொன்றே மிகுந்திருக்கும்.

இம்மனமும் தூஷ்ட்ணீம்பூதாவஸ்தா சங்கற்பம்போல, அறிவைஅன்றி வேறில்லையென அறியின், மனம் சத்துவகுணமான ஞானம்சமானதினால், ஞானசொ

ரூபமாகிய அறிவுடன்ஏகத்வங்கூடி அறிவொன்றே மி
குந்திருக்கும்.

"ஏகமேவாத்விதீயம்பிரமம்"என்னும் சுருதிமஹாவா
க்கியார்த்தப்படி இங்ஙனம் அறிவுசொரூபமாகிய பிர
மம் ஒன்றே மிகும்போது பந்தமோக்ஷவிவகாரங்கள்
மித்தையாய்ச் சத்தியமானஅறிவே தானென்னும் சு
வாநுபவத்தைச் சமாதியின்கண்ணே பெற்றகாலத்து
ம் விவகாரதசையில் தன்னைஅன்றி வேருய் ஓர் பதா
ர்த்தந்தோன்றுமாயின், இருக்கும்பொருளே தோன்ற
வேண்டும், தோன்றும்பொருளே இருக்கவேண்டும். இ
ருந்துதோன்றும்பொருளே ரம்மியமாகவேண்டும். அ
ல்லது, இல்லாத மாயாபதார்த்தந்தோன்ருது. தோன்
ருத ஜடபதார்த்தமிராது. ரம்யமாகாத துக்கபதார்த்த
ம் இருந்துவிளங்காதென்று யுக்திபண்ணி விசாரிக்கும்
அளவில் நாமரூபமயமாகிய மாயாம்சம் மிகாமல் சச்
சிதாநந்தமயமாகிய தனது சொரூபாம்சமே மிகுந்து
பரமார்த்ததசைக்கு விரோதம் இல்லாமல் சகஜாநுப
வங் கூடும்.

இங்ஙனம் பக்குவமுதிர்ச்சி இன்றிய மந்ததரபக்கு
வர்கள், சற்குருஸ்வாமிகளது சந்நிதியில் விசாரித்தறி
வேண்டும் கிரமம் எங்ஙனமென்னின்,

இந்நாமரூபமயமாகிய சகலபிரபஞ்சங்களும் திருசி
யப்பொருளாய் இருக்கின்றமையால் இதையறியத் தி

ருக்குருபமான அறிவு ஒன்று உண்டாயிருக்கவேண்டும். அஃதுயாதென விசாரித்துநோக்குமளவில் இப்போது பிரத்தியக்ஷபிரமாணத்தினுல் சர்வாநுபவசித்தமாய் விளங்கும் இத்தூலசரீரமேயெனத் தோன்றவரும்.

அத்தூலசரீரத்தினது யதார்த்தசொருபத்தை நோக்குமளவில் தன்னையும், தனக்குமேலாகிய ஞானேந்திரியங்களையும், ஸ்தூலவிஷயங்களையும், அறியாமையினுல் ஜடமாயறியப்பட்டு, அறிந்தவறிவு ஸ்தூலசரீரத்தினிடமான ஞானேந்திரியங்களாகத் தோன்றவரும்.

அவ்விந்திரியங்களினது யதார்த்தசொருபத்தைநோக்குமளவில் தம்மையும், தமக்கு மேலாகியமனத்தையும் சூக்ஷுமவிஷயங்களையும், அறியாமையினுல் ஜடமாய் அறியப்பட்டு, அறிந்த அறிவு மனமேயெனத்தோன்றவரும்.

அம்மனத்தினது யதார்த்தசொருபத்தை நோக்குமளவில் தன்னையும், தனக்குமேலாகியஜீவனையும், அபானவவிஷயத்தையும், அறியாமையினுல் ஜடமாயறியப்பட்டு அறிந்தவறிவு ஜீவனேயெனத் தோன்றவரும்.

அச்சீவனதுயதார்த்த சொருபத்தை நோக்குமளவில்தன்னையும், தனக்குமேலாகிய ஈசனையும், சர்வஞ்ஞத்வாதிகுணங்களையும், அவித்யோபாதிகத்தா லறியாசா

மையினால் ஜடமாயறியப்பட்டு, அறிந்தஅறிவு ஈசனே யெனத்தோன்றவரும்.

அவ்வீசனது யதார்த்தசொரூபத்தை நோக்குமளவில் தன்னையும், தனக்குமேலாகிய பிரமத்தையும், மாயோபாதிகத்தால் அன்றி அறியாமையினால் ஜடமாயறியப்பட்டு, அறிந்த அறிவு பிரமமே யெனத்தோன்றவரும்.

இங்ஙனம்சேஷித்துத்தோன்றம் சச்சிதாநந்த பிரமசொரூப சுபாவமானசுத்தவறிவேதானென்னச் சுவாநுபவம்சித்தித்தகாலத்தும், அவ்வறிவாகியதிருக்கும், அதனாலறியப்படுவதாகிய திருசியமும், ஆக இரண்டுபதார்த்தங்களிருக்க அத்துவிதாநுபவம் எங்ஙனம் சித்திக்குமென்னின்?

முன்னர் ஞானேந்திரியங்களைநோக்கும்போது ஸ்தூலசரீரமும், மனத்தைநோக்கும்போது ஞானேந்திரியங்களும், ஜீவனைநோக்கும்போதுமனமும், ஈசனைநோக்கும்போது ஜீவனும், பிரமத்தைநோக்கும்போது ஈசனும், எங்ஙனம் ஜடமாய் அசத்தாயிருந்தனவோ அங்ஙனமே சர்வாதிஷ்டான சர்வாத்மக பரிபூரணாதிலக்ஷணங்களால் உள்ளபடி பிரமசொரூபத்தை நோக்கும்போது, சகல ஜீவேஸ்வர ஜகத்பதார்த்தங்களுக்கும், தனது சொரூபாம்சமான சச்சிதாநந்தமேசுபாவ

மாய், அவற்றின் மாயாம்சமான நாமரூபங்கள் அபாவமாய், சொர்ணமென்னும் பொருளுக்கு ஆபரணங்கள்சொன்மாத்திரமாயிருந்தனபோல, ஒன்ருய் விளங்கியிருக்கும்போது அத்துவிதாநுபவம் சித்திப்பதற்கு யாதொருதடையுமில்லை யென்று, இங்ஙனம் சுருதிசம்மதப்படி சகஜாநுபவம்பெற்றுய்யக்கடவர்கள். இதில் யாதொருசம்சயமுமில்லை, சத்தியம்.

அ-வது உபயஞானமார்க்கசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

கூ - வது.

## அத்யாரோபாபவாத சங்கிரகசிந்தனை.

அவாங்மானசகோசரமாகிய சுத்தசைதன்னிய ஒளி பாயிருப்பதுவே சிவம், இச்சிவத்தினது சொரூபமாகிய சாமான்யாம்சத்தில் உள்ளதிலில்லதான இன்மையி ருத்தல்போல, அநாதிநித்யமாயிராநின்ற அஞ்ஞானச க்தியினல், இச்சிவத்தினது சச்சிதாநந்தசொரூபமாகி விசேஷாம்சத்தில் கானலில் சலதோற்றம்போல நாதிகற்பிதமாய்த்தோன்றிய ஊர்த்தமுகஞானச்சா பாகிய பிரகாசவிருத்தி சாமான்யசம்பந்தத்தால், அ விற்குச் சாமான்யச்சுட்டறிவுண்டாதல் ஈஸ்வரத்வ இவ்வீஸ்வரத்வமே அறிவினது சாமான்யம்.

இவ்வீசுரனுக்கே அதோமுகஞானச்சார்பாகிய பிரகா விருத்தி சாமான்யசம்பந்தத்தால் விசேஷசூன்யச் சுட்டறிவுண்டாதல் ஜீவத்வம், இச்சீவத்வமே அறிவி னது விசேஷம், இவ்வறிவினதுவிசேஷமே ஜீவத்வசா ர்யம்.

இச்சீவனுக்கே சலனச்சார்பாகிய பிரகாசவிருத்தி விசேஷசம்பந்தத்தால், சாமான்யவிஷயச் சுட்டறிவுண்டாதல் அந்தக்கரணத்வம், இவ்வந்தக்கரணத்வமே ஜீவத்வவிசேஷம், இச்சீவத்வவிசேஷமே அந்தக்கரணத்வசாமான்யம்.

இவ்வந்தக்கரணத்திற்கே இடச்சார்பாகிய சலனவிருத்தி சாமான்யசம்பந்தத்தால் விசேஷஸ்தூல விஷயச்சுட்டறிவுண்டாதல் இந்திரியத்வம், இவ்விந்திரியத்வமே அந்தக்கரணத்வவிசேஷம், இவ்வந்தக்கரணத்வவிசேஷமே இந்திரியத்வசாமான்யம்.

இவ்விந்திரியத்திற்கே அகச்சார்பாகிய சலனவிருத்தி விசேஷசம்பந்தத்தால் தேகமே தானென்னும்சாமான்ய மோகச்சுட்டறிவுண்டாதல் தநுத்வம், இத்தநுத்வமே இந்திரியத்வவிசேஷம், இவ்விந்திரியத்வவிசேஷமே தநுத்வசாமான்யம்.

இத்தநுவிற்கே இதச்சார்பாகிய மூடவிருத்திசம்பந்தத்தால், விஷயபோகங்களே தன்னதென்னும் விசேஷமோகபோகச்சுட்டறிவுண்டாதல் போகத்வம்; இப்போகத்வமே தநுத்வவிசேஷம், இத்தேகபோகமா யிருத்தலே ஜகம்,

இங்ஙனம் அத்தியாரோபப்படுவதே பந்தம்.

இப்பந்தமுடையோன் சிவபுண்ணிய மேலீட்டினுல் மலபரிபாகம் வந்தகாலத்தில் சற்குருவைத்தேடி யடைந்து அவரது கிருபையால் அநுக்கிரகஞ் செய்தருளப்பெற்ற திருவருண் ஞானக்கண்ணினுல், இதச்சார்பாகிய மூடவிருத்தி நீக்கத்தால் விசேஷ மோகபோகச்சுட்டறிவாகிய போகத்வநீக்கமும், அகச்சார்பாகிய சலனவிருத்தி விசேஷநீக்கத்தால் சாமான்ய மோகச்சுட்டறிவாகிய தநுத்வநீக்கமும், இடச்சார்பாகிய சலனவிருத்தி சாமான்யநீக்கத்தால் விசேஷஸ்தூலவிஷயச் சுட்டறிவாகிய இந்திரியத்வநீக்கமும், சலனச்சார்பாகிய பிரகாசவிருத்தி விசேஷநீக்கத்தால் சாமான்ய விஷயச் சுட்டறிவாகிய அந்தக்கரணத்வநீக்கமும், அதோமுக ஞானச்சார்பாகிய பிரகாசவிருத்தி சாமான்யநீக்கத்தால் விசேஷசூன்யச் சுட்டறிவாகிய ஜீவத்வநீக்கமும், ஊர்த்தமுக ஞானச்சார்பாகிய பிரகாசவிருத்தி சாமான்யநீக்கத்தால் சாமான்யச்சுட்டறிவாகிய ஈசுரத்வநீக்கமும்கண்டு விளங்காநின்ற சிவஞானப்பிரகாசத்தினுல் அஞ்ஞானுந்தகாரத்தைவிழுங்கிச் சேஷித்த சச்சிதாநந்தாத்வைத சொரூபாநுபவமாயிருத்தலே சிவம்.

இங்ஙனம் அபவாதப்படுவதே முத்தி.

ஆதலால், இம்முத்திநிலையைச் சுவாநுபவத்தில் சகஜப்படுத்திக்கொண்டு சும்மா இருப்பவர்களே கிர்தகிர்

த்தியர்களாகிய ஜீவன்முத்தர்கள்; இவ்வுலகத்தில் அவர்களையே சாக்ஷாத்பரம சிவமென்று சகல சுருதிகளுங் கூறுகின்றன. இதில் யாதொரு சம்சயமு மில்லை, சத்தியம்.

இஃது விகங்கஞானமார்க்கமென் றுணரத்தக்கது.

கூ - வது

அத்தியாரோபாபவாதசங்கிரகசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

———

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

கΩ - வது

## தத்துவோற்பத்தி லயக்கிரமசங்கிரக

## சிந்தனை.



சத்தியம், ஞானம், அநந்தம், ஆநந்தம் என்னும் இலக்ஷணத்தையுடைய பிரமத்தின்கண் வாசகஞ்செய்யவொண்ணாத பின்னாசத்திதோன்றும், அதினின்று மாயைதோன்றும், அதன் ஊர்த்தமாயையிற் பரதத்துவந் தோன்றும், அதனில் வியோமந்தோன்றும்; முன்மாயையின் அதோமாயையில் புருஷன்தோன்றும், அதனில் பிரகிருதிதோன்றும், அதினின்று மான்தோன்றும்; அதனிலகங்காரந் தோன்றும், அவ்வகங்காரம் திரிகுணம்சமானதால் சத்துவகுணம்சத்தில் மனமும், ஞானேந்திரியங்களுந்தோன்றும், ரஜோகுணம்சத்தில் கன்மேந்திரியங்கள்தோன்றும், தமோகுணம்சத்தில் சூக்ஷும பூதங்களாகிய சத்தாதி பஞ்சதன்மாத்திரைகள் தோன்றும். அந்தச்சத்தாதி பஞ்சதன்மாத்திரைகளைப் பஞ்

சீகரித்ததனுல் ஸ்தூலபஞ்சபூதங்கள் தோன்றும். அவ ற்றில் பூதாம்சமாகிய ஸ்தூலதேகங்கள்தோன்றும்.

இங்ஙனந் தத்துவங்களின் உற்பத்திக்கிரமமாவதே உபக்கிரமமென்னப்படும். இதுவேபந்தம்.

இனி லயக்கிரமம் எங்ஙனமென்னின்,

ஸ்தூலதேகமுதல் பின்னுசத்தி ஈருகச்சொல்லப்ப ட்ட முப்பது தத்துவங்களும், தேகாவஸ்தை அபிமானி களும், ஞானுசாரியர் அநுக்கிரஹித்தருளியபடி சமாதி யின்கண்ணே தரிசனப்படின் நீங்கிப்போய், இவையா வுமாய் விளங்கும் மேற்சொல்லிய பிரமசொரூபந்தா னுகச் சேஷித்து விளங்காநிற்கும்.

இங்ஙனந் தத்துவங்களின் லயக்கிரமமாவதே உபச ங்காரமென்னப்படும், இதுவேமுக்தி.

இங்ஙனம் முத்தியைக்கொடுக்கும் இந்த லயக்கிரம விவரம் அநுபவப்படுவ தெங்ஙனமென்னின்,

ஸ்தூலபூதங்கள் - ரு, சூக்ஷுமபூதங்கள் - ரு, கன் மேந்திரியங்கள் - ரு, ஞானேந்திரியங்கள் - ரு, ஆகிய உ௦ - ம் ஜீவனுக்கு ஸ்தூலதேகம், சகலகரணங்களுட னுங்கூடிச் சர்வஸ்தூல விஷயங்களைச்சுட்டி யறியும் விவகாரமாகிய ஜாக்கிராவஸ்தை, விஸ்வாபிமானி, இவ ற்றையுள்ளபடி அறிந்து நீங்கினுல், பசுப்பும்காக்ஷியும் போய் அதன்வாசனைதோன்றும்.

மனம் புத்தி அகங்காரம் - ஆகிய ௩ - ம் ஜீவனுக்குச் சூக்ஷுமதேகம், சர்வாந்தக்கரணங்களுடன் கூடி வாசனையோடும் சர்வ சூக்ஷும விஷயங்களைச்சுட்டியறியும் விவகாரமாகிய சொப்பனவஸ்தை, தைசதாபிமானி, இவற்றை யுள்ளபடியறிந்து நீங்கினல் அவ்வாசனைபோய் முதற்பாழ்தோன்றும்.

பிரகிருதி ஒன்றுமே ஜீவனுக்குக் காரணதேகம், சர்வவிஷய வாசனையுமிறந்தவிடத்தில் இருந்த முதற்பாழுடன்கூடி, விஷயாபாவத்தைச்சுட்டியறியும் விவகாரமாகிய சுழுத்தியவஸ்தை, பிராஞ்ஞாபிமானி, இவற்றை யுள்ளபடியறிந்து நீங்கினல், அம்முதற்பாழ்போய்ச் சீவதுரியந்தோன்றும்.

புருஷன் ஒன்றுமே பரனுக்கு ஸ்தூலதேசம், ஜீவனது காரியோபாதிகளை நியதிகளைந்து, சேஷித்துநின்ற அறிவு சொரூபமாகிய தன்னையறிந்து, சர்வசாக்ஷியத்திற்குஞ் சாக்ஷியாகிய வறிவாயிருந்தறியும் விவகாரமாகிய ஜாக்கிராவஸ்தை, விராட்டபிமானி, இவற்றையுள்ளபடி யறிந்துநீங்கினல் சர்வஞ்ஞத்வாதி உபாதிபோய் அதன்வாசனைதோன்றும்.

காலபரம் ஒன்றுமே பரனுக்குச் சூக்ஷுமதேகம், சர்வசாக்ஷியத்திற்கும் சாக்ஷியாக இருக்கும் வாசனையோடும் அச்சாக்ஷிமாத்திரமான வறிவையறியும் விவகாரமாகியசொப்பனவஸ்தை, இரண்யகர்ப்பாபிமானி,

இவற்றை உள்ளபடியறிந்துநீங்கினுல் அவ்வாசனைபோய் இரண்டாம்பாழ் தோன்றும்.

வியோமம் ஒன்றுமே பரனுக்குக் காரணதேகம், சர்வசாக்ஷியமுஞ் சாக்ஷியாகிய அவ்வாசனையும் இறந்தவிடத்தில் இருந்த இரண்டாம்பாழுடன்கூடி, சாக்ஷியபாவத்தையறியும் விவகாரமாகிய சுழுத்தியவஸ்தை, அவ்யாகிருதாபிமானி, இவற்றை உள்ளபடியறிந்து நீங்கினுல் அவ்விரண்டாம் பாழ்போய்ப் பரதுரியந்தோன்றும்.

பரம் ஒன்றுமே சிவத்திற்கு ஸ்தூலதேகம், பரனது காரணோபாதிகளைநியதிகளைந்து, சேஷித்துநின்ற பிரம சொரூபமாகிய தன்னையறிந்து, சர்வமுந் தன்மயமாய் விளங்கும் அறிவு சொரூபமாய் அமையும் விவகாரமாகிய ஜாக்கிராவஸ்தை, சிற்சொலிதாபிமானி, இவற்றை உள்ளபடியறிந்து நீங்கினுல் உலகம்போய் அதன்வாசனைதோன்றும்.

மாயை ஒன்றுமே சிவத்திற்குச் சூக்ஷுமதேகம், சர்வமுந் தன்மயமாய் விளங்குகின்றதென்னும் வாசனையோடும் அவ்வறிவுமாத்திரமான சொரூபமாய் அமையும் விவகாரமாகிய சொப்பனுவஸ்தை, பிரசாபத்தியாபிமானி, இவற்றை உள்ளபடியறிந்து நீங்கினுல் அவ்வாசனைபோய் மூன்ரும்பாழ்தோன்றும்.

பின்னுசக்தி ஒன்றுமே சிவத்திற்குக்காரணதேகம், சர்வமுந்தன்மயமாய் விளங்குகிறதென்னும் அவ்வாசனையும் இறந்தவிடத்திலிருந்த மூன்றும்பாழுடன் கூடி, சொரூபாநுபவாபர்வத்தை யறியும் விவகாரமாகிய சுழுத்தியவஸ்தை, பொற்புவிசாந்தாபிமானி, இவற்றை யுள்ளபடியறிந்து நீங்கினால் அம்மூன்றும்பாழ்போய்ச் சிவத்தினது சாக்ஷிவாசனையாகிய உபாதிகளை நியதிகளைந்து சேஷித்துநின்ற, "ஏகமேவாத்விதியம்பிரமம்" என்னும் சுருதிவாக்கியார்த்தப்பொருளாகிய சிவதுரியமென்னும் குருபதந்தானாய் விளங்கித்தோன்றும்.

ஆதலால், இஃதேசும்மா இருக்கு மௌனநிலையென்றும், அத்துவிதமாயிருக்குஞ் சகஜநிலையென்றும், இந்நிலையைப்பெற்றவர்களே முத்தர்களென்றும், வேதாகமங்களின் சித்தாந்தத்தை யுணர்ந்த சிவஞானிகளும் சொல்லியிருக்கின்றனர். இதில் யாதொருசம்சயமுமில்லை, சத்தியம்.

இஃது பிபீலிகாஞானமார்க்கமென் றுணரத்தக்கது.

க0 – வது

தத்துவோற்பத்திலயக்கிரமசங்கிரகசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

கக - வது.

## தத்துவசங்கிரகசிந்தனை.

ஸ்தூலதத்துவம் - சு, சூக்ஷுமதத்துவம் - கசு, காரணதத்துவம் - ச, மஹாகாரண தத்துவம் - க, ஆதத்துவம் - உஎ. இவற்றில், ஸ்தூலதத்துவம் - சு, ஆவன: சருமம், உதிரம், மாமிசம், நரம்பு, அஸ்தி, மச்சை என்பனவாம். சூக்ஷுமதத்துவம் - கசு, ஆவன: கன்மேந்திரியமாகிய வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபஸ்தம் ஆ டு - ம். ஞானேந்திரியமாகிய சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்ஙுவை, ஆக்கிராணம் ஆ டு - ம். அந்தக்கரணமாகிய, உள்ளம், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆ டு - ம். பிராணவாயு க - ம், ஆம். காரணதத்துவம் - ச, ஆவன: அவித்தை, ஜீவன், மாயை, ஈசுரன் என்பனவாம். மஹாகாரணதத்துவமாவது பிரமம் - க - ஆம்.

இவற்றுள் கன்மேந்திரியங்களின் விவகாரங்களாவன: வசனம், தானம், கமனம், விசர்க்கம், ஆநந்தம் ஆகிய இவற்றைச் செய்தலாம்.

ஞானேந்திரியங்களின் விவகாரங்களாவன: சத்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் ஆகிய இவற்றையறிதலாம்.

அந்தக்கரணங்களின் விவகாரங்களாவன, பிரகாசம், நினைவு, நிச்சயம், சிந்தனை, அபிமானம் ஆகிய இவற்றைப் பண்ணுதலாம்.

பிராணவாயுவின் விவகாரமாவது: சரீரத்தைத்தாங்குவதாயும் அசனது விவகாரத்திற்கு ஆதாரமாயும் அதற்குக்காவலாயும் இருத்தலாம்.

அவித்தையின் விவகாரமாவது: ஜீவனுக்குக் காரண சரீரமாயிருந்து அவனது இச்சையாலுண்டாகும் சகலபதார்த்தங்களுக் கிடமாயும் அவனது யதார்த்த சொரூபத்தைக் காட்டாது மறைத்தற்குச் சூன்யவிருளாயும் இருத்தலாம்.

ஜீவவிவகாரமாவது: கன்மாநுசாரமாய் ஈசுரனூட்டுவிக்கின்றபடி சுதந்தரஈனனுயாடிக்கொண்டு அவித்தையின் சம்பந்தத்தால் சிற்றறிவுடையனாய் இருத்தலாம்.

மாயையின் விவகாரமாவது: ஈசுரனுக்குக் காரணசரீரமாயிருந்துகொண்டு அவனது காருண்ணியத்தால்

செய்யும் சகல மோக்ஷாநந்தவிவகாரங்களுக்கு இடமாயும் அவனது யதார்த்தசொருபத்தை யறிதற்கு விளக்கமாயும் இருத்தலாம்.

ஈசுரவிவகாரமாவது: ஸர்வஜீவத்யாகாரணத்தினல் சுதந்தரமாகச் சிருஷ்டி திதி சங்காரம் திரோபவம் அநுக்கிரகம் ஆகிய பஞ்சகிருத்தியங்களை நடத்திக்கொண்டும் மாயாசம்பந்தத்தால் பேரறிவுடையனாய் இருத்தலாம்.

பிரம விவகாரமாவது; சகலத்திற்குந் தாரகமாயிருந்துகொண்டு சாக்ஷிமாத்திரமான சச்சிதாநந்த சொருபியாய்ச் சும்மாஇருத்தலாம்.

கோசதத்துவம் - சு - ம், ஜீவனுக்கு சாக்கிராவஸ்தைக்கு இடமான ஸ்தூலசரீரமாயிருக்கும்.

கன்மேந்திரியம் - ரு, ஞானேந்திரியம் - ரு, அந்தக்கரணம் - ரு, பிராணவாயு - க, ஆகதத்துவம் - கரு-ம் ஜீவனுக்குச் சொப்பனவஸ்தைக்கிடமான சூக்ஷ்மசரீரமாய் இருக்கும்.

அவித்தை தத்துவம் - க - ம், ஜீவனுக்குச் சுழுத்தியவஸ்தைக்கு இடமான காரணசரீரமாய் இருக்கும்.

இங்ஙனம் ஜீவாநுபவத்திற்கு ஆசரயமான இம்மூன்று சரீரங்களையும் தானென அபிமானித்துக்கொண்டு த

னது யதார்த்தசொரூபத்தை மறைத்த அஞ்ஞானத்தி னுல், ஜனனமரணமாகிய சாகரத்தில் முழுகித் துன்ப ப்படுகின்ற ஜீவனுக்குக் கன்மோபாசனைகளால், கிரம மாகச்சித்தசுத்தியும் சித்த ஏகாக்கிரமும்ஆகிய மேலா னபக்குவம் வந்தகாலத்தில் தற்காருண்ணியத்தினுல் ஈ சுரனேஞானுசாரியனு யெழுந்தருளிவந்து, அநுக்கிரகி த்தருளிய மஹாவாக்கியோபதேசத்தினுல் உதயமாகிய சுஞ்ஞானவிளக்கத்தால், அஞ்ஞானுந்தகாரத்தைப்போ க்கித்தனது யதார்த்தசொரூபமாகிய சச்சிதாநந்தாத் மாவாகத் தன்னைத் தெரிவித்தபடியே உள்ளபடி தெரி ந்தபின்னர் அவ்விளக்கவியாப்தமான அகண்டாகாரவி ஞ்ஞானவிளக்கத்தால் உள்ளும்புறமும் தோன்றுகின்ற சகல ஜகத்திற்கும் சாக்ஷிமாத்திரமா யிருப்பதே ஈசு ராநுபவமாகிய துரியமாம்.

இங்ஙனம் இவ்வகண்டாகார விஞ்ஞான பிரகாசவி யாபகத்தால், தனது சச்சிதாநந்தமான சொரூபாம்ச த்தில் நாமரூபமான மாயாம்சந்தோன்றுமல் அத்து வைத பிரமசொரூபமாய் அமைந்திருப்பதே பிரமாநுப வமாகிய துரியாதீதமாம்.

இந்நிலை சகஜமாய்விடுவதே யாதோரவஸ்தைக்கும் உட்படாமல் வாக்கு மனுதீதமாகிய சுத்தபிரமமென் பதிலும் சகல வேதாகமசுருதிகளும் நியாயவாதிகளு

டைய சையுக்திகளும், ஜீவன் முத்தர்களுடைய வநுபவங்களும் பிரமாணசித்தம் என்பதிலும் யாதொரு சம்சயமுமில்லை, சத்தியம்.

கக - வது.

தத்துவசங்கிரகசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

## கஉ - வது

## ஆத்மசொரூபநிர்ணயசிந்தனை.



அநேக ஜனனங்களிற்செய்த சிவபுண்ணியத்தின் பயனாகிய பக்குவத்தையுடைய ஓர் முமுக்ஷுவானவன் ஞானாசாரியனை அடைந்து திருவருள்பெறுமாறு வழிபட்டு அவரது சந்நிதானத்தில் விசாரிக்கும் முறைமை

சுவாமி! தான் என்பதுயாது என்ன?

ஆசாரியர் திருவருணோக்கஞ்செய்து, இங்ஙனம் சகலத்தையுமறியாநின்ற அறிவு சொரூபமாகிய ஆத்மசைதன்னியமே தானெனத் திருவாய்மலர்ந்தருள,

சுவாமி! சகலமாவது யாதென்ன?

சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் ஆகியபஞ்சவிஷயாதிகளென்னும் பிரபஞ்சமே சகலமென்றருள,

சுவாமி! இப்பிரபஞ்சமாகிய பஞ்சவிஷயங்களைத் தானாகிய இத்தேகமேயறிகின்றதென்ன?

சுழுத்திகாலத்தில் இத்தேகமிருந்தும் ஒன்றையுமறி யாதபடியினுல், சுத்தஜடமாகிய இத்தேகம் அறிவன் று என்றருள,

சுவாமி! இத்தேகத்தினிடமா யிருந்து சத்தாதிபஞ்ச விஷயங்களையும், தேகத்தையும், சுரோத்திரம், துவக் கு, சக்ஷு, சிங்குவை, ஆக்கிராணம் ஆகிய ஞானேந்தி ரியங்களே அறிகின்றனவென்ன?

மனமில்லாத விடத்தில் ஒன்றையுமறியாமையினுலு ம், ஓரிந்திரியத்தின் விஷயத்தை ஓரிந்திரியமறியாமை யினுலும், தன்தன் விஷயங்களிலுமொரு விஷயத்தை அறியும்போது மற்ருெருவிஷயத்தை அறியாமையினு லும், தம்மைத்தாமறியாமையினுலும், இடங்களைப்பற றி அறிகின்றமையினுலும், ஐந்தாயிருக்கின்றமையினு லும், மனத்திற்கு விஷயங்களாய்ப் போகின்றமையி னுலும், ஞனேந்திரியங்களு மறிவன்று என்றருள.

சுவாமி! உள்ளும்புறமும் தோன்றுநின்ற சகலபஞ் ச விஷயங்களையும், தேகத்தையும், இந்திரியங்களையும் மனமே அறிகின்றதென்ன?

ஜீவனில்லாதவிடத்தில் ஒன்றையும் அறியாமையினு லும், தன்னுல் நினைக்கப்பட்டவைகளைத் தானேமறந் தறியாமையினுலும், நினைக்கக்கூடாத விஷயமெனவ றிந்து நினையாதிருக்க அறியாமையினுலும், தன்னைத்

தானறியாமையினாலும், சங்கற்பவிகற்மாய் இருக்கின்றமையினாலும், ஜீவனுக்கு விஷயமாய்ப் போகின்றமையினாலும், மனமுமறிவன்று என்றருள,

சுவாமி! சகல விஷயங்களையும், சகலவிஷயாபாவத்தையும், தேகத்தையும் இந்திரியங்களையும், மனத்தையும் ஜீவனே அறிகின்றதென்ன,

ஆத்மசைதன்னிய மில்லாதவிடத்தில் ஒன்றையுமறியாமையினாலும், விஷயாபாவமாகிய சூன்யமே தன்னைமறைப்பதற்குக் காரணமென் றறியாமையினாலும் அவ்விஷயாபாவத்தை யறிந்த தன்னைத்தானறியாமையினாலும், சுட்டறிவாயிருக்கின்றமையினாலும், ஆத்மசைதன்னியத்திற்கு விஷயமாய்ப் போகின்றமையினாலும் ஜீவனுமறிவன்று என்றருள,

சுவாமி! இவைகளெல்லாம் ஆத்மசைதன்னியமன்றாயின் வேறே ஆத்மசைதன்னியந்தான் யாதென்ன,

முன்னர்ச்சொல்லிய தேகத்தின்கண் இந்திரியங்களினிடமாயிருந்து ஸ்தூலபஞ்சவிஷயங்களையும், மனத்தினிடமாயிருந்து சூக்ஷ்மபஞ்சவிஷயங்களையும், ஜீவனிடமாயிருந்து இவ்விரண்டினபாவத்தையும், தேகத்தையும் இந்திரியங்களையும், மனத்தையும், ஜீவனையும்

அறிகின்றமையினாலும், இங்ஙனம் அறிந்தவறிவே தானெனத் தன்னைத்தன்னால் தானே யறிகின்றமையினாலும், அறிவே தனக்குச்சொரூபமா யிருக்கின்றமையினாலும், தானென்றிற்கும் விஷயமாகாமையினாலும், இவற்றிற்கெல்லாம் எப்பொழுதும் சாக்ஷிமாத்திரமா யிருந்து விளங்கும்தானே ஆத்மசைதன்னியமென்றருள,

சுவாமி! இங்ஙனம் விளங்கும் ஆத்மசைதன்னியமாகிய தன்னைத் தன்னால் தானே அறிகின்றது எங்ஙனமென்ன,

சுத்தவறிவுசொரூபமாகிய தன்னை, சுட்டுப்பார்வையற்ற தன்னால் சகல கேவலங்களில் சாராததானே இரண்டறவொன்று யறியாதறிதலாகிய சும்மாஇருத்தலே யென்றருள,

சுவாமி! தேவரீர் அநுக்கிரகஞ்செய்தருளியபடியே அடியேனுக்குச் சுவாநுபவமாயிற்று என்று அன்போடு துதித்து வணங்கி எழுந்துநின்றவனை நோக்கி, இதுவே சுருதிக்கும் யுக்திக்கும் அநுபவத்திற்கும் ஒத்த துணிவான உண்மைப்பொருளாகும், ஆதலால், தேகபதனபரியந்தம் இச்சுவாநுபூதியினின்று நீங்காது சகஜப்படுத்திக்கொள்ளின் பின்னர்ச் சர்வமுந் தன்மய

மாய்விளங்கும் பிரமசொரூபமாகிய அத்துவிதாநுபவஞ் சித்திக்கும், அப்பொழுது பேராநந்தவடிவாகிய முத்தி லபிக்குமென்று அருளியபடி வாழ்ந்தனன்.

கஉ - வது

ஆத்மசொரூபநிர்ணயசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

## கரு - வது.

## ஆத்மாநாத்மவிசாரசிந்தனை.

சர்வபிராணிகளுக்கும் இதவிருத்தியென்றும் அகவிருத்தியென்றும் இரண்டுவித விருத்தியுண்டென்பது சகலவேதாந்த சாஸ்திராநுபவ பிரசித்தம்.

இங்ஙனம்சொல்லிய இரண்டுவிருத்திகளின் அருத்தம் யாதென்னின்?

எதிரிட்ட வஸ்துவில்தோன்றுவதே இதவிருத்தியென்றும், தானனவஸ்துவில்தோன்றுவதே அகவிருத்தியென்றும் அர்த்தபிரசித்தம்.

அன்றியும் எவ்விடத்திலாயினும் இதவிருத்திக்கு விஷயமானது யாதோ? அதுவே அநாத்மாவென்றும், அகவிருத்திக்கு விஷயமானது யாதோ? அதுவே ஆத்மாவென்றும், நிர்ணயிப்படுவது பிரசித்தம்.

தேகத்திற்கு எதிரிட்டவஸ்துவில் தோன்றுவதே இதவிருத்தியென்றும், இந்த இதவிருத்திக்கு விஷயமான

பிரபஞ்சமே அநாத்மாவென்றும், தேகமென்னும் தானு னவஸ்துவில் தோன்றுவதே அகவிருத்தியென்றும், இந்த அகவிருத்திக்கு விஷயமான இத்தேகமே ஆத்மா வென்றும் காணப்படுகின்றன வென்னின்;

அதுகூடாது, ஏனென்னின், நான் மனிதனென்றபொழுது தேகமும், நான்வசனித்தேனென்றபொழுது கன் மேந்திரியங்களும், நான்பலவானுனேன் என்றபோது பிராணவாயுக்களும், நான்கேட்டேனென்றபோது ஞா னேந்திரியங்களும், நான்நினைத்தேனென்றபோது அந் தக்கரணங்களும், அவிசாரகாலத்தில் அத்தியாசவொ ருமையினுல் அகவிருத்திக்கு விஷயமாய்த்தோன்றிய போதினும், என்னுடையதேகம் என்னுடைய வாக்காதி கள் என்னுடைய பிராணுதிகள் என்னுடைய சுரோத் திராதிகள் என்னுடைய மனுதிகள் என்று சொல்லப்ப ட்ட சகலமும், விசாரகாலத்தில் அத்தியாச நீக்கத்தா ல், இதவிருத்திக்கு விஷயமாய்த் தோன்றுவதுவே வ நுபவபிரசித்தம்.

இப்பொழுதுநான் என்று விவகரிக்கும் அகங்காரம் இவ்வகவிருத்திக்கு விஷயமாய்க் காணப்படுகின்றதே யென்னின்?

அதவுங்கூடாது. ஏனெனின், பரிணமிக்கின்ற பால் முதலான வஸ்துக்களைப்போல, அகம்சுகிதுக்கியென்ற

இவைமுதலான பலவித ஆகாரவிருத்தியாகப் பரிணமி க்கின்றமையால் இவ்வகங்காரமும், இதவிருத்திக்கே வி ஷயமாகின்றது. பிரத்தியேகாத்மா ஒன்றே அகவிரு த்திக்கு விஷயமாகும் அல்லது மற்றியாதொன்றும் வி ஷயமாகா தென்பதே ஹரிஹரி பிரமேந்திராதியர்களுக் கும் அநுபவமென்பதற்குச் சுருதிபிரமாணமே பிரசித் தம்.

சித்துருபமாகிய ஆத்மா அகவிருத்திக்கு விஷய மானல் சடத்துவம் வருவதாய்க் காணப்படுகின்றதே யென்னின்?

ஆதித்தனைப்போல அவ்வகவிருத்தியில் தனது பூர ணபிரகாசத்தைப் பிரவேசிப்பித்து அதனல் தோன்ற ப்படும் விஷயமாயிருப்பினும், அஞ்ஞின்மலவிருத்திக்கும் சுவயபிரகாச சைதன்னிய ஸ்வரூபமான ஆத்மாசா க்ஷியாக விளங்குமென்பதே அநுபவபிரசித்தம்.

இங்ஙனம் ஆத்மா சுவயபிரகாச சைதன்னியஸ்வ ரூபமாக விளங்குமானல் இவ்வகவிருத்தியினல் பிர யோசனம் யாதென்னின்?

விவகாரதசையில் விவகரிக்கப்பட்ட அஞ்ஞான நிவ ர்த்தகமே பிரயோசனமென்பது பிரசித்தம்.

சுத்த படிகம்போலச் சடமான இவ்விருத்திக்கு ஏக காலத்தில் கோடி சூரியருதயமாய் வரினும் சிறிதேனு

ம் நீக்குதற்கரிய அஞ்ஞானாந்தகாரத்தினது நிவர்த்தகத்தில் இவ்வளவுசாமார்த்திய மேதென்னின்?

சுவயம்பிரகாச சைதன்னியசொரூபமான ஆத்மாவினது பிரகாசம் சௌச்சமாகப் பதிந்திருக்கின்ற மகத்துவத்தினாலே இவ்வளவு சாமார்த்தியமுண்டென்பதில் யாதோராச்சரியமும் இல்லையென்பதே பிரசித்தம்.

அச் சிற்சாயைக்கேனும் இவ்வகவிருத்தியின் விஷயத்துவம் லப்தமாகச் சாதிக்கலாகாதோவென்னின்? ஆகாது. ஏனெனின், அதிஷ்டானமான ஆத்மாவையும் உபாதிஸ்தானமான விருத்தியையும் தவிரத் தனக்கென ஒருருவத்தையுஞ் சாதிப்பதற்கு யாவராலும் அசக்கியமாகையினால் அச்சிற்சாயைக்கும் லப்தமாகாதென்பதே வேதாந்தவித்துக்களால் சாதிக்கப்பட்ட சித்தாந்த பிரசித்தம்.

அதிஷ்டானமான ஆத்மசம்பந்த மாத்திரத்தைக் கொண்டே அச்சிற்சாயைக்கு அகவிருத்தியின் விஷயத்துவம் சாதிக்கலாகாதோவென்னின்? அதனால் அச்சிற்சாயைக்குமாத்திரம் சாதிப்பதில் யாதொரு விசேஷணமுமில்லை, அவ்வாத்ம சம்பந்தபரம்பரையினால் சகலமான அநாத்மவஸ்துகளுக்கும் சாதிக்கலா மென்பதே பிரசித்தம்.

அங்ஙனம் சாதித்தலால் வரும் விவாதம் யாதென்னின்? ஆத்மாநாத்ம விபாகஞானத்திற்குச் சூனியத்

துவமும், சற்குருசுவாமிகளால் உபதேசிக்கப்பட்ட உபதேசவாக்கியத்திற்கு விரோதத்துவமும் ஜீவர்களுக்குப் பந்தமோக்ஷங்களைப் பிரதிபாதியாநின்ற சுருதிக்கு அப்பிரமாணத்துவமும் ஆகிய இவ்விவாதங்கள் வருமென்பதே பிரசித்தம்.

"அகமேவசர்வம்" என்று ஆத்மவித்துக்களால் வசனிக்கும் விவகாரம் யாதென்னின், "சிவோகம்" என்னும் அநுபவாவேசத்தால் கூறும் அநுபூதி விவகாரவசனமேதவிர உண்மையன்றென்பதே பிரசித்தம்.

இதற்கு உண்மையாவதுதான் யாதென்னின்? பூரணபாவத்தால் "பிர்ம்மைவசர்வம்" என்றும், சிற்பாவத்தால் "பிர்ம்மைவாஹம்" என்றும் வரும், விவகாரத்திற்கு ஆசரயமாகும் சலக்ஷண விலக்ஷண பாவங்களையுண்டய வஸ்து நிர்ணயமே உண்மையாவதில் சர்வாநுபவ பிரசித்தம்.

முன்னர்ச்சொல்லிய அஞ்ஞான நிவர்த்தகமானமோக்ஷபிரயோசனந்தான் யாருக்கென்னின்? ஞானபிரதிபந்தகமான சம்சாரபந்தமுடைய ஆத்மாபாசனென்னும் சிற்சாயைக்கென்பதே சர்வாநுபவ பிரசித்தம்.

விவகாரதசைக்கு இங்ஙனமாயின் பரமார்த்ததசைக்கு எங்ஙனமென்னின், பரிபூரண சிதாத்மாவின்கண் யாதோரஞ்ஞானத்தினலாகிய பிராந்திஞானமும், அத

னது காரியமான சம்சாரபந்தமும், இருந்தாலன்றோ அதனது நிவர்த்தகஞ் செய்யும் விசாரஞானத்தினாலாகிய உண்மை ஞானமும் அதனதுகாரியமான மோக்ஷமுங்கொண்டு பிரயோசன பிரசங்கத்திற்கு அவகாசமாகும், அங்ஙனங் காலத்திரயத்திலுமில்லை, ஆகையால், யாதொரு பிரஸ்துதிக்கும் அவசாசாபாவமென்பதே பிரசித்தம்.

சச்சிதாநந்த அகண்ட ஸ்வரூபமான பரமாத்மாவில் இங்ஙனம் விவகாரபரமார்த்தங்கள் என்னும் இரண்டுவித பிரசங்கங்களுக்கு அவகாசமேதென்னின்? வஸ்துவினிடத்தில் சாமானியம் விசேஷம் என்னும் இரண்டு அம்சங்களின் இருப்பினால் அப்பிரசங்கம்வர அவகாசமுண்டென்பதே பிரசித்தம்.

முன்னர்ச்சொல்லிய சாக்ஷி சித்ருபமான ஆத்மா ஒருவனே ஞாதாவாகக் காணப்படுகின்றமையால் அகங்காரமும் அகம் ஞாதாவென்று விவகரிப்பானேன் என்னின்? ஆத்மாவினது சம்பந்தத்தினால் அங்ஙனம் விவகரிப்பதாய்த் தோன்றுமென்பதே பிரசித்தம்.

ஆத்மா அகங்கர்த்தாவென்று இது முதலாகிய அகங்காரத்தினது விவகாரத்தை யடைவதாய்க்காணப்படுகின்றமையால், அவ்வாத்மாவிற்கு நிர்விகாரத்துவத்தைச் சாதிக்குஞ் சுருதிக்கு, அப்பிரமாணத்துவம் வருமேயென்னின்? இங்ஙனம் ஆத்மதர்மம் அகங்காரத்தினிட

த்திலும், அகங்கார்தர்மம் ஆத்மாவினிடத்திலும், உண்டாக்குகின்ற தாதாத்மிய அத்யாசத்தை விபாகஞானத்தினுல் பிறித்துப்பார்க்கும்போது கர்த்தத்துவாதி விகாரம் அகங்காரத்திற்கேயென்றும், ஞாதத்துவநிர்விகாரம் ஆத்மாவிற்கேயென்றும், அநுபவமாகும்போது சுருதிக்குப் பிரமாணத்துவம் வருவதில் யாதொரு பிரதிபந்தமுமில்லை என்பதே பிரசித்தம்.

ஆத்மாகங்காரங்கள் இரண்டிற்கும் அகம்பதமொன்றே விவகரிப்பதாலுல் அர்த்தபேதாநுபவமாவது எங்ஙனமென்னின்? கோவெனும் அநுபூதிக்குக்கோத்துவமென்றே அர்த்தமாவதுபோல அகம்எனு மநுபூதிக்கு, ஆத்மாவென்றே அர்த்தமாகும். அதன்றியும் கோத்துவங்கோவோடு சம்பந்தப்பட்டமையால் பின்னமானதாய்க் காணப்படுவதுபோல, ஆத்மா அகங்காரத்தோடு சம்பந்தப்பட்டமையால் பின்னமானதாய்க் காணப்படினும் கோவெனும் பதத்திற்கு மேலெழுந்தவாருகக் கோவென அர்த்தந்தோன்றிடினும் பரமார்த்தத்தில் கோத்துவமே அர்த்தமாவதுபோல, அகமெனும் பதத்திற்கு மேலெழுந்தவாருக அகங்காரமென அர்த்தந்தோன்றிடினும் பரமார்த்தத்தில் ஆத்மாவே அர்த்தமாவது யுக்தியுக்த பிரசித்தம்.

அகமெனும் சப்தார்த்தம் ஆத்மாவே யென்பதில் அநுபவமேதென்னின்? அகங்காராதியுபாதிநீங்கிய சர்வா

பாவ சுழுத்திகாலத்து அநுபவத்தைக்கண்டு அகஞ்சுழுப்தனென்று விவகரிப்பதால் ஆத்மாவே அகம் சப்தார்த்தமென்பது அத்தியந்தயோக்கியமான அநுபவமாவதில் சர்வாநுபவ பிரசித்தம்.

ஜாக்கிரகாலத்தில் இவ்வநுபூதிபிரசித்தம், அகங்காரத்தினிடத்தில் காணப்படுகின்றதேயென்னின்? தாகசத்தியானது தக்தாயபிண்டத்தில் காணினும் அத்தாகசத்தி அக்கினிக்கேயென்று அநுபவத்தில் அநுபூதியால் காண்பதுபோல, அகமெனும் அநுபூதி அகங்காரத்தில் காணினும் அவ்வகமெனும் அநுபூதி ஆத்துமாவிற்கேயென்பது சகல ஆத்ம வித்துக்களுக்கும் அநுபவ பிரசித்திம்.

இங்ஙனம் சுருதி யுக்தி அநுபவபூர்வகமாக அகம்பதத்திற்கு அர்த்தம் ஆத்மாவேயென்று சாதித்ததற்குப் பிரயோசனம் யாதென்னின்?

சின்மாத்திரசொரூபமாய் விளங்கும் பிரத்யேகாத்மாவையே அகம்பதார்த்தமாகத் தெரிந்த சர்வஞ்ஞுதியர்களும் சுருதியில்பிரதிபாதியாநின்ற "அகம்பிரமாஸ்மி" என்னும் மஹாவாக்கியார்த்தத்தில் தாற்பரியர்களாய் நாமேபிரமமென்றடைந்த சுவாநுபவப்படி லக்ஷணவிருத்தி சோதனையினால், அகம் சச்சிதாநந்தாகண்டைக ஸ்வரூபமானபிரமமென்று சும்மாவிருத்தலாகிய

சகஜாநுபவமென்னும் ஒப்புயர்வற்ற கைவல்ய சித்தியே, பிரயோசனமென்பது சகலசுருதி ஸ்மிருதீதிகாச புராணகமாபி யுக்தியாசாரியாநுபவ சித்தாந்த பிரசித்தம். ஆதலால், இது சற்குருமுகமாய் விசாரித் தறியத்தக்கது.

கரு - வது

ஆத்மாநாத்ம விசாரசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

கச - வது

## பிரமஞானசிந்தனை.

---

வேதத்தில் கன்மகாண்டத்தில் கூறியபடி நிஷ்காமிய கன்மஞ்செய்ததனல் தமோகுணம்சமான ஸ்தூலத்துவம் நீங்கிச் சூக்ஷுமரூபமான சித்தசுத்தியும், பக்திகாண்டத்தில் கூறியபடி சகுணபிரமோ பாசனைசெய்ததனல் ரஜோகுணம்சமானசலனத்துவமும்நீங்கி, நிர்ச்சலன ரூபமான சித்த ஏகாக்ரமும்பெற்று, ஞானகாண்டத்தில் கூறியபடி நிர்க்குணபிரமஞான சித்தியின்பொருட்டுச் சத்துவகுணம்சமான பிரகாசத்துவம்வேண்டிய ஓர்பக்குவியானவன் சற்குருசுவாமிகளை விதிப்படியடைந்து அவரது திருவுளப்பாங்கின்படி வழிபட்டு அருள்சுரந்தகாலநோக்கி, சுவாமி! இத்தேகமல்லாது வேறேநான் ஆர்? என்னையுள்ளபடியறிவித்து இப்பிறவித்துன்பத்தினின்று நீக்கி நித்தியவின்பத்தை யருளிமோக்ஷசொரூபமாய் விளங்கும்படி கடாக்ஷித்தருளல்வேண்டுமென்று ஆராமையோடு விண்ணப்பஞ்செய்து

வணங்கிநின்றவனைச் சற்குருஸ்வாமிகளும் பக்குவனெனத் தெரிந்து திருவுளமகிழ்ந்து பிர்மாநந்ததேஜசோடும் பிரகாசியமான பரிபூரணசந்திராననத்து அருளமுத கிரணங்களைப் பொழியாநின்ற கடாக்ஷவீக்ஷண்யம்செய்து, வாராய் புதல்வனே ! நமதாதீனத்திற்குரிய ஞானசந்தானம் நீயேயாதலால் பெறுவாயென்றருள் வழங்கி ஜடமாயிருக்கின்ற அத்தேகம் நீ அல்லை என்று அநுக்கிரகஞ்செய்தருள,

சுவாமி! இப்பொழுதிருக்கும் அநுபவத்தினுல் நோக்குமிடத்தில் சகலத்தையும் அறியாநின்றஞானேந்திரியங்களே நானென்று தோன்றுகின்றது என்பவனைநோக்கி, ஐந்தாயிருக்கின்றபடியால் அந்த ஞானேந்திரியங்களும் நீ அல்லை என்று அநுக்கிரகஞ்செய்தருள,

சுவாமி! அறிவாயும் ஒன்ருயுமிருக்கின்ற அந்தக்கரணமே நானென்று தோன்றுகின்றது என்பவனைநோக்கி, சலனமாயிருக்கின்றமையால் அவ்வந்தக்கரணமும் நீஅல்லை என்று அநுக்கிரகஞ்செய்தருள.

சுவாமி! அறிவாயும் ஒன்ருயும் நிர்ச்சலனமாயு மிருக்கின்ற ஜீவனேநானென்று தோன்றுகின்றது என்பவனைநோக்கி, அன்னிய பிரகாசாஸ்ரயனு யிருக்கின்றபடியால் அச்சீவனும் நீஅல்லை என்று அநுக்கிரகஞ் செய்தருள,

சுவாமி! அறிவாயும் ஒன்ருயும் நிர்ச்சலனமாயும் சுயம்பிரகாசமாயும் இருக்கின்ற ஈசனேநானென்று தோன்றுகின்றது என்பவனை நோக்கி, உபாதிகளுயிருக்கின்றபடியால் அவ்வீசனும் நீஅல்லை என்று அநுக்கிரகஞ் செய்தருள,

சுவாமி! அறிவாயும் ஒன்ருயும் நிர்ச்சலனமாயும் சுயம்பிரகாசமாயும் நிருபாதிகமாயு மிருக்கின்ற பிர்ம சொரூபமே நானென்று தோன்றுகின்றது என்பவனை நோக்கி; சந்தோஷசித்தராய் இங்ஙனம் நமதுவாக்கியோபதேசப்படியே, அறிவாதி பஞ்சலக்ஷணங்களையுடைய பிரமமே நீயென்று சுருதியும் பிரஞ்ஞானம், பிரமம் "தத்துவமசி" என்னும் மஹாவாக்கியங்களால் பிரதிபாதிக்கின்றது. அங்ஙனமே "அகம்பிர்மாஸ்மி" என்று உனக்கு அநுபவமாயின் இஃதே சுருதி குரு சுவாநுபவங்களுக்கும் ஒத்த உண்மைப்பொருளாம். ஆயினும், முன்னர்நான் என்றும் நான் அன்றென்றும் கூறிய தேகாதிகள் இப்பொழுது எங்ஙனமாயிருக்கின்றன என்றுவினவ?

சுவாமி! அறிவான என்னிடத்தில் ஜடமாகிய பூதபௌதிகமாகிய தேகங்களும் ஒன்ருன என்னிடத்தில் பலவான இந்திரியங்களும் நிர்ச்சலனமான என்னிடத்தில் சலனமான அந்தக்கரணமும் சுவயம்பிரகாசமான என்னிடத்தில் அந்நியபிரகாசா ஸ்ரயனுன ஜீ

வனும், நிருபாதிகமான என்னிடத்தில் உபாதிகனுன ஈசனும் ககனுரவிந்தம்போலச் சொன்மாத்திரமாக, அ ச்சொற்களுக்குப் பொருண்மாத்திரமாகிய நானே உ ன்ருய் விளங்கிக்கொண்டிருக்கின்றேன் என்பவனே நோக்கி, இந்நிலேயே சகலதுன்பங்களும் நீங்கிப் பிர்மா நந்தமடையத்தக்க வேதாந்த சித்தாந்த மோனநிலேயா ம். இந்நிலேயில் பிராரத்தநாசபரியந்தம் சுஞ்ஞானவிரு த்தியோடு ஜீவன்முத்தனுயிருந்து, பின்னர் விதேகமுத் தியை யடையக்கடவையென்று ஆசீர்வாதஞ்செய்தரு ள, அங்ஙனமே வாழ்ந்தனன்.

கசு - வது

பிரமஞானசிந்தனே

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

கரு - வது

## பிரமஞானுதிசதுஷ்டயசிந்தனை.

---

அநேககோடி ஜன்மாந்தர சுகிர்தங்களால் எல்லாநன்மைகளையும் பெறுதற்குச் சாதனரூபமான மநுஷசரீரத்தைப்பெற்ற ஓர் விவேகியான பக்குவன் சிவபெருமானது திருவருளினால் காலதேசாதிகளைப்பார்த்து அதிசயித்துச் சிந்திக்குஞ் சிந்தனை.

இப்பொழுது சுரோத்திராதி ஞானேந்திரியங்களுக்குச் சத்தாதி பஞ்சவிஷயங்களாகத் தோன்றுகின்ற பிரத்தியக்ஷபதார்த்தங்களும், இங்ஙனந்தோன்றுது மனத்திற்கு வாசனுவிஷயங்களாகத்தோன்றுநின்ற அப்பிரத்தியக்ஷ பதார்த்தங்களும் ஆகிய இகபரலோக பிரபஞ்சங்களனைத்தும் காரியரூபமாதலால், காலாந்தரத்தில் நாசமடையத்தக்கனவென்றும், பிரத்தியக்ஷபிரமாணத்தினாலும் ஆகம பிரமாணத்தினாலுங் கண்டு, தோன்றிய காரியவஸ்துக்களனைத்தும் அநித்தியமாகலின், இவற்றைத்தோற்றுவிக்குங் காரணரூபமான ஓர்

நித்தியவஸ்து உளதா யிருக்கவேண்டுமென்றும், அநுமானபிரமாணத்தினால்கண்டு, இங்ஙனம் விவேகித்துப் பார்ப்பதாகிய நித்தியாநித்தியவஸ்து விவேகமும், இங்ஙனம் விவேகித்துப் பார்க்கும்போதுண்டாகும் இகபரலோக விஷயங்கள் யாவும் முன்னரநித்தியமென்றறிந்த காரணத்தால், அவற்றின்மீது கிஞ்சித்தேனும் இச்சையுதியாததாகிய இகமுத்தரார்த்த பலபோகவிராகமும், இங்ஙனம் அநித்திய பிரபஞ்சங்களின்மீது விராகமுளதேனும், அவற்றைவிடுகின்ற பரியந்தமும் வாசனாப்பழக்கத்தால் அவற்றைக் காணுமிடத்தும்பற்றிச் சிந்திக்கச்செல்லுங்கால் அம்மனத்தை யடக்கலாகிய சமமும், இங்ஙனம் உள்ளேயடக்கினும் வெளியே அவற்றைக்காணுமிடத்து அநுபவப்பழக்கத்தால் விஷயீகரிக்கச் செல்லுங்கால் அவ்விந்திரியங்களை அடக்கலாகிய தமமும், இங்ஙனம் இவ்வநித்தியவஸ்துவை விடுத்தும் மேற்சொல்லப்போகின்ற பிரகாரம் நித்தியவஸ்துவை அடுத்தும் வருகின்ற அப்பியாசகாலத்தில் கன்மமே தேகபோகங்கள் வருவதற்குக் காரணமென்றறிந்து ஆச்சிரமத்துக்கு உசிதமான நிஷ்காமியகன்மந் தவிர மற்றையகன்மங்களைச் சர்வாத்மனாய் விட்டுவிடுவதாகிய உபரதியும், இங்ஙனம் இப்போது செய்யவேண்டிய கன்மங்களைவிடினும் முற்செய்த கன்மங்களுக்கிடாகச் சுகதுக்கரூபமான பிராரத்தகன்மமானது இச்சரீரமுள்ளளவாயில் விடாமல் அநுபவரூபமாய் வருத

லேச் சமமாய்ச்சகித்தலாகிய திதிக்ஷையும், இங்ஙனமு
ற்சொல்லிய அநித்தியவஸ்துவை விடுவிப்பதற்கும் நித்
தியவஸ்துவை அடைவிப்பதற்கும் காரணரூபங்களாகி
ய குரு வேதாந்த சாஸ்திரங்களில் உள்ளும் புறமும் ச
மமான பக்திவைத்தலாகிய சிரத்தையும், இங்ஙனம் இ
ச்சுருதி குருவாக்கியார்த்தங்களைச் சதாகாலமும் சித்த
த்தில் திடங்கொள்வதாகிய சமாதானமும் ஆகிய சமா
தி சட்கசம்பத்தும், முன்னர் ஓர் நித்தியவஸ்து உள
தாயிருக்க வேண்டுமென்று சந்தேகமற நிச்சயமாயறி
ந்த காரணத்தால் அவ்வஸ்துவையே அடையவேண்டு
மென்று இயல்பாகியும் அதிதுரிதமாகியும் அமையாது
இச்சிப்பதாகிய முமுக்ஷுத்வமும் ஆகிய இச்சாதன
சதுஷ்டயங்களை உடையவனுய் முற்றத்துறந்து, சற்கு
ருவைத்தேடி அடைந்து, அவரதுவழித்தாய்ச் சச்சிதா
நந்த பிரமசொரூபத்தில், ஆதிசங்கற்ப மாத்திரத்தால்
தோன்றுநின்ற சகலநாமரூப பிரபஞ்சங்களும் மித்தை
யான திருசியமென்று நம்மால் அறியப்பட்டபடியினு
ல், சத்தியமாக விளங்குந்திருக்சுரூபமான அறிவுநாமே
யன்றி வேறொருவருமில்லை, உளரோனும் அவர்களையும் இ
ன்னொன்று நாமேயறியவேண்டி இருப்பதால் சுத்த
பிரஞ்ஞான சொரூபமான நாமே பிரமமென்கின்ற பி
ரபலசுருதி மகாவாக்யார்த்தப்படி திடமானபிரமஞான
மும், நம்மையன்றி அந்நியமாயிராநின்ற சகலநாமரூப
பிரபஞ்சங்களும், நித்திரா மூர்ச்சை மரணம் துஷ்ட

ணிம்பூதம் சமாதியாதி அவஸ்தைகளில் சூனியமாய்ப் போகின்றபடியாலும், மற்றகாலத்திலும் விசாரித்துப் பார்க்கில் யதார்த்தமாய் இல்லாமல் போகின்றபடியாலும், எப்போதும் இல்லனவாய் அவற்றில் யாதொரு வாஞ்சையு மியல்பாகப் பிறவாதபரவைராக்கியமும், இங்ஙனம் ஞானவைராக்கியங்களை யுபதேசித்து ரக்ஷித்தலில் முக்கியகாரணரான சற்குருஸ்வாமிகளை அதிஷ்டித்துக்கொண் டிராநின்ற சர்வேஸ்வரரிடத்தில் வைக்கும் சத்தியபக்தியும், இவற்றை அநுஷ்டிக்குங்கால் பிராரத்தத்தால் வரும் லௌகிகவிவகாரங்களிற் செல்லினும் சர்வபிராணிகளுக்கும் சுருதியுக்தமான இதத்தையே அவரவர் பக்குவத்திற்கு ஏற்பச்செய்யும் பூததயையும் ஆகிய விஞ்ஞானங்களையும் பெற்றுக்கொண்டு, அவற்றை நாளுக்குநாள் அபிவிருத்தியாக்கும்முயற்சியைச் செய்து, அம்முயற்சிப்பேறாகிய புருஷார்த்தநான்கனுள் மேலாய்விளங்கும் பரமமோக்ஷசொரூபமான பிரமத்தைச் சகஜாநுபவமாகப்பெற்று வாளாவிருப்பதே வேதாந்தத்தின் சித்தாந்தமென்று உணர்ந்தனன். இவ்வுணர்வே இதற்குப்பலமாகும்.

கரு – வது

பிரமஞானநிசதுஷ்டயசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

கசு - வது

## பிரமஞாநாதிதுவந்துவசிந்தனை.

ஸ்ரீசச்சிதாநந்த நித்யபரிபூரண பரப்பிரமமோஹமெ ன அஞ்ஞான சந்தேகவிபரீதமற அத்வைதாநுபவசா க்ஷாத்கார பிரமஞானம் ஒருபுருஷனுக்குச் சித்தியாயி னபோதும், ஆதியில் ஜகத் ஜன்மாதிகாரண தடஸ்தல க்ஷண சொரூபியாக சுருதிவாக்கிய சிரவணத்துவாரா பரோக்ஷமாயும், மத்தியில் அத்தூலாதி யதத்வியா வி த்திலக்ஷண சொரூபியாக சயுக்திமனனத்துவாரா அப ரோக்ஷமாயும், அந்தத்தில் சச்சிதாநந்தாதி சொரூபல க்ஷண சொரூபியாக மஹாயோக நிதித்தியாசனத்து வாரா அப்பிரதிபந்தா பரோக்ஷமாயும் தீக்ஷாபூர்வக மாகத் தன்னை யநுக்கிரகித்து ஆட்கொண்டருளிய ஸ்ரீ சற்குரு சரணாரவிந்தங்களில் மாறாத நிஷ்கபடாகார மான ஈஸ்வரபக்தியையும் சகலதுக்கா னர்த்தங்களுக் கும் காரணமாகிய அவித்தையாதி தேகத்திரயாம்சங்க ளையுடைய மாயையேயென்றுணர்ந்து, அதைத்திரஸ்க

ரிக்கும்படியான பாசவைராக்கிய முற்றபோதும், அஃ தில்லாது துன்பமடையும் சர்வஜீவர்களிடத்திலும் ப லாபேக்ஷா நிரசனுகாரமாகிய ஜீவகாருண்யத்தையும் சம்பந்தமாக வைத்திருத்தலினுல் பிரகாசியமான சித்த விருத்தியை யுடையவனுயிருப்பதே ஜீவன்முத்தர்களு க்குச் சம்மதமாகும்.

ஆதலால், பிரமஞானம் ஈஸ்வரபக்தி ஜீவகாருண்ணி யம் பாசவைராக்கியம் ஆகிய இந்தநான்கையும் பெற் றுக்கொள்ள முயலும் அதிகாரிகளும் மேற்சொல்லிய வாறே பிரமஞானமும் ஈஸ்வரபக்தியும் ஒரு துவந்துவ மாகவும் ஜீவகாருண்ணியமும் பாசவைராக்கியமும் ஒ ருதுவந்துவமாகவும் கூட்டியப்பியாசிக்கத் தக்கவை யாம்.

இங்ஙனமன்றித் தனித்தனியே அப்பியாசஞ்செய்து வரப்பெற்றுக்கொண்ட போதினும், முற்றம் நிலையாம ல்போலியாய்ப் போய்விடும். போம்பொழுது அஞ்ஞா னமும் ஆசையும் நீங்காமையால் ஜீவத்துவமும் ஜன னமும் முறையேவிர்த்தியாகும். அப்போது பந்தமே பிராப்தியாய்விடும்; ஆதலால், இதைச் சற்குருமுகமாக ச்செவ்வையாகக்கேட்டு யூகித்துணரவேண்டுவது.

கசூ-வது பிரமஞானுதிதுவந்துவசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

கள - வது

## மஹாவாக்கியார்த்தசிந்தனை.

உலகத்தில் அந்தகன்கையில் அகப்படும் உயிரும், நாய்நரி கழுகாதிகளுக்கிரையாகுமுடலும், விவேகமில்லாத பாமரர்நெஞ்சில் பொருட்படும் பொருளும் ஆகிய இம்மூன்றையும் சற்குரு சுவாமிகளுக்கு யானெனதென்னுது தத்தமாய்க் கொடுத்துவிடுவதாகியசர்வசங்கபரித்யாகமென்னும் அறமும், இவ்வறத்துக்குப் பலமாகப்பெற்ற பிரத்யேகாத்மகூடஸ்த சைதன்னியமான நித்தியப்பொருளென்னும் பொருளும், இப்பொருளின் வியாபகத்துவத்தால் உதித்தசர்வசாக்ஷியாகிய பூரணாநந்தமென்னும் இன்பமும், இவ்வின்பாதீதமான அகண்டைகரசத்தால் சாக்ஷிவாசனையாதிகளுங் கரைந்து விடுவதாகிய இன்பவீடென்னும் வீடும் ஆகிய இந்நான்கையுஞ் சுருதியிற் பிரதிபாதியாநின்ற புருஷார்த்தமெனக் கொண்டு உய்யும்வண்ணம் திருவருள்வடிவாகிய சற்குரு ஸ்வாமிகளாதியரிடத்தில் வைத்த

பக்தியென்னு முயிரால், பரோக்ஷஞானமென்னும் அங்கத்தோடு வைராக்கியமென்னும் இடத்தில்வசிக்கும் அதிகாரிகளாலே விசாரிக்கத்தக்கது மஹாவாக்கியார்த்தமே.

அஃதாவது அசாத்மாவென்னும் சட்கோசதத்தவமாகிய ஸ்தூலதேகத்துக்கும், பாகிய விவகாரமாகிய ஜாக்கிராவஸ்தைக்கும், அன்னமயமாகிய கோசத்துக்கும், இருபது தத்துவமாகிய சூக்ஷுமசரீரத்துக்கும், அந்தர் விவகாரமாகிய சொப்பனுவஸ்தைக்கும், பிராணமய மனோமய விஞ்ஞானமயமாகிய கோசங்கட்கும், ஒரு தத்துவமாகிய காரணதேகத்துக்கும், பாகியாந்தர சூன்யவிவகாரமாகிய சுழுத்தியவஸ்தைக்கும், ஆநந்தமயமாகிய கோசத்துக்கும், இவைகளில் கிரமமாக அபிமானித்தலும், விவகரித்தலும், மயமாதலுமுடைய விசுவதைசத பிராஞ்ஞனாகிய ஜீவனுக்கும், கிரமமாக விலக்ஷணமாயும், சாக்ஷியாயும்; வெதிரிக்தமாயும், அதிஷ்டானமாயும், விளங்காநின்ற ஆத்மசைதன்னியமென்னும் நீ, முற்சொல்லிய தேகாதிவியஷ்டிகள் கூடிய சமஷ்டி தேகங்களுக்கும், அவஸ்தைகளுக்கும், கோசங்களுக்கும் முறையே கிருபாசக்தி பூர்வகமாக அபிமானித்தும், சிற்சக்தி பூர்வகமாகப் பஞ்சகிர்த்தியங்களை விவகரித்தும், ஜெகசக்தி பூர்வகமாக மயமாயு மாகாத வைஸ்வாநரன் சூத்ராத்மா அந்தர்யாமி ஆகிய ஈஸ்வரனுக்கும், முற்சொல்லிய விலக்ஷணாதிகள் நான்குடனும்

சுருதியிற்கூறிய பிறலக்ஷணங்களையுமுடைய பிரமசை
தன்னியமென்னும் அது, உபாதிரகிதத்தாலும் லக்ஷண
சகிதத்தாலும் அல்லது சாக்ஷித்துவரகிதத்தாலும், த
ன்மயமான சாக்ஷிவசகிதத்தாலும் ஆகிய விட்டும்வி
டாத லக்ஷணையைக்கொண்டு ஆனாய் என்னும் அர்த்தங்
களால், கூடஸ்த பிரமஐக்ய சொரூபத்தைப் பிரதிபா
தியாநின்ற முப்பதங்களோடும் விளங்கும் ஒருமொழி
யாகிய "தத்வமசி" மஹாவாக்கியார்த்தப்பொருளாகும்.

இம்மஹா வாக்கியார்த்தப்பொருளை ஸ்ரீசற்குருசு
வாமிகளா லுபதேசஞ் செய்யப்பெற்றுக்கொண்டு ம
னனஞ்செய்துணர்ந்து சமாதியில் சாக்ஷாத்கார மாகு
ம்படி செய்துகொள்ள வேண்டுவது.

கஎ - வது

மஹாவாக்கியார்த்தசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான் திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

## கஅ - வது

## சட்பதார்த்தசாமான்ய

## விசேஷார்த்தசங்கிரகசிந்தனை,



சிவம், அருள், ஜீவன், அஞ்ஞானம், மாயை, கன்மம் ஆகிய இந்த ஆறு பொருள்களின் சாமான்ய விசேஷ லக்ஷணங்களும், இவை விவகாரப்படுந்தன்மையும், இவற்றில் நீங்கவேண்டுபவைகளை நீக்கும் பிரகாரமும், அடையவேண்டுபவைகளை யடையும் பிரகாரமும், இதிற் சொல்லப்படுவனவாம்; எங்ஙனமென்னின்?

சிவத்தினது சாமான்யம் சொரூபம்.

சிவத்தினது பரமார்த்தத்தில் பரமார்த்தவிசேஷம் அகமென்னுஞ் சொரூபம்.

சிவத்தினது பரமார்த்தத்தில் விவகாரவிசேஷம் சச்சிதாநந்தமென்னுஞ் சொருபம்.

சிவத்தினது விவகாரத்தில் பரமார்த்தவிசேஷம் சர்வஞ்ஞத்துவசொரூபம்.

சிவத்தினது விவகாரத்தில் விவகாரவிசேஷம் கிஞ்சிஞ்ஞத்துவ சொரூபம்.

சக்தியினது சாமான்யம் ஞானம்;

சக்தியினது பகிரங்கத்தில் பகிரங்கவிசேஷம் சற்குருஞானம்.

சக்தியினது பகிரங்கத்தில் அந்தரங்கவிசேஷம் சிவஞானம்.

சக்தியினது அந்தரங்கத்தில் பகிரங்கவிசேஷம் சாக்ஷி விருத்திஞானம்.

சக்தியினது அந்தரங்கத்தில் அந்தரங்க விசேஷம் அகண்டாகாரவிருத்தி ஞானம்.

ஜீவனது சாமான்யம் சிதாபாசத்துவம்.

ஜீவனது யதார்த்தவிசேஷம் வீய்ந்தசிதாபாசத்துவம்.

ஜீவனது கற்பிதவிசேஷம் வீயாத சிதாபாசத்துவம்.

இருட்சத்தியினது சாமான்யம் ஆவரணம்.

இருட்சத்தியினது யதார்த்தவிசேஷம் சொரூபாவரணம்.

இருட்சத்தியினது கற்பிதவிசேஷம் விஷயாவரணம்,

மாயாசக்தியினது சாமான்யம் விருத்தி,

மாயாசக்தியினது கற்பிதத்தில்கற்பிதவிசேஷம்தோன்று நாமரூபவிருத்தி.

மாயாசக்தியினது கற்பிதத்தில் யதார்த்த விசேஷம் தோன்றுத நாமரூபவிருத்தி.

மாயாசக்தியினது கற்பிதயதார்த்தத்தில் கற்பிதவிசேஷம் இதவிருத்தி.

மாயாசக்தியினது கற்பிதயதார்த்தத்தில் யதார்த்த விசேஷம் அகவிருத்தி.

கன்மசக்தியினது சாமான்யம் போகம்.

கன்மசக்தியினது யதார்த்தவிசேஷம் சிவபோகம்.

கன்மசக்தியினது கற்பிதவிசேஷம் விஷயபோகம்.

அனாதியே சிவத்திற்கும் மாயைக்கும் இடையில் ஆரோபகாரணமாகிய இருட்சக்தியின் வசத்தனுன ஜீவனுனவன் அவ்விருட்சக்தியினது யதார்த்தவிசேஷபாகமாகிய சொரூபாவரணத்தினுல் மறைபடுவதாகிய சிவத்தினது பாமார்த்தத்தில் விவகார விசேஷபாகமாகிய சச்சிதாநந்த சொரூபமானதுமறைபட்டு, அவ்விருட்சக்தியினது கற்பிதவிசேஷ பாகமாகிய விஷயாவரணத்தினுல் மறைபடுவதாகிய மாயாசக்தியினது கற்பிதத்தில் கற்பிதவிசேஷபாகமாகியதோன்று நாமரூப

விருத்தியானது தோன்றலால், அவ்விருட்சத்தியினது யதார்த்தவிசேஷ பாகமாகிய சொரூபாவரணத்தினுல் மறையாத சிவத்தினது பரமார்த்தத்தில் பரமார்த்த விசேஷ பாகமாகிய அகஞ்சொரூபத்ஸத விடாதவனு யிருந்தும் விட்டவன்போலும், அவ்விருட்சத்தியினது கற்பித விசேஷபாகமாகிய விஷயாவரணத்தினுல் மறையாத மாயாசக்தியினது கற்பிதத்தில் யதார்த்தவிசேஷ பாகமாகிய தோன்ருத நாமரூபவிருத்தியையடையாதவனுயிருந்தும் அடைந்தவன்போலுமாய், மாயாசக்தியினது கற்பிதயதார்த்தத்தில் யதார்த்தவிசேஷபாகமாகிய நானென்னும் அகவிருத்தியின் சம்பந்தத்தினுலும் மாயாசக்தியினது கற்பிதயதார்த்தத்தில் கற்பிதவிசேஷபாகமாகிய அது இது என்னும் இதவிருத்தியின் சம்பந்தத்தினுலும், தேகாதிகளை யானென்றும் போகாதிகளை எனதென்றும் அகங்காரமமகாரங்களாகிய பந்தமுற்று, கன்மசக்தியினது கற்பிதவிசேஷபாகமாகிய விஷயபோகத்தையடைந்து, சிவத்தினது விவகாரத்தில் விவகார்விசேஷ பாகமாகிய கிஞ்சிஞ்ஞத்துவ சொரூபமாகும் ஜீவனது கற்பிதவிசேஷபாகமாகிய வியாதசிதாபாசத்துவத்தை யுடையவனுய் உழல்பவனுக்கு, சிவபுண்ணியத்தின்பயனுகிய இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் ஆகிய மேலானபக்குவம் வந்தகாலத்தில், திருவருட்சக்திமான் பந்தத்துக்

கும் மோக்ஷத்துக்கும் இடையில் யதார்த்தகாரணமாகிப தனது தெருட்சத்தியினது பேரருளின் மேலீட்டால் உபகரித்தருளவேண்டி, இருட்சத்தியினது சாமான்ய விசேஷபாகங்களின் லக்ஷணங்களையும், அவ்விருட்சத்தியினது யதார்த்த விசேஷபாகத்தினுல் மறைந்தும் மறையாமலும் இராநின்ற சிவத்தினது சாமான்ய பரமார்த்தத்தில் பரமார்த்த விசேஷ விவகார விசேஷபாகங்களின் லக்ஷணங்களையும், அவ்விருட்சத்தியின் கற்பித விசேஷ பாகத்தினுல் மறைந்தும் மறையாமலும் இராநின்ற மாயாசக்தியினது சாமான்ய கற்பிதத்தில் கற்பிதவிசேஷ யதார்த்த விசேஷ பாகங்களின் லக்ஷணங்களையும், ஜீவன் சம்பந்தப்படும் மாயாசக்தியினது கற்பித யதார்த்தத்தில் கற்பித விசேஷயதார்த்த விசேஷபாகங்களின் லக்ஷணங்களையும், சிவத்தினது விவகாரத்தில் பரமார்த்தவிசேஷ விவகார விசேஷபாகங்களின் சொரூபமா யிராநின்ற ஜீவனது சாமான்ய யதார்த்த விசேஷகற்பித விசேஷபாகங்களின் லக்ஷணங்களையும், அச்சீவன் பந்தமோக்ஷ முற்ற காலங்களில் அடையும் கன்மசக்தியினது சாமான்ய யதார்த்த விசேஷ கற்பித விசேஷபாகங்களின் லக்ஷணங்களையும், தெருட்சக்தியினது சாமான்ய பகிரங்கத்தில் பகிரங்கவிசேஷ அந்தரங்க விசேஷ பாகங்களின் லக்ஷணங்களையும், அந்தரங்கத்தில் பகிர

ங்க விசேஷ அந்தரங்க விசேஷபாகங்களின் லக்ஷண ங்களேயும், பந்தமோக்ஷங்களின் லக்ஷணங்களேயும், முன்னர்ச் சுருதியின் சிரவணவழித்தாய்த் தெரிவிக்கத் தெருட்சத்தியினது பகிரங்கத்தில் பகிரங்க விசேஷ பாகமாகிய சற்குருஞானம் விளக்கமாயும், பின்னர் யுக்தியின் மனனவழித்தாய்த் தெரிவிக்கத் தெருட்சக்தியினது பகிரங்கத்தில் அந்தரங்க விசேஷ பாகமாகிய சிவஞானம் விளக்கமாயும், பிரகாசித்தருளலும், முன்னர்த் தெருட்சக்தியினது அந்தரங்கத்தில் பகிரங்க விசேஷபாகத்தினுல் இருட்சக்தியினது யதார்த்த விசேஷபாகமானது நீங்கி, தெருட்சக்தியினது அந்தரங்கத்தில் அந்தரங்க விசேஷபாகத்தினுல் சிவத்தினது பரமார்த்தத்தில் விவகார விசேஷாம்சமாய் விளங்கும்படியான மாயாசக்தியினது கற்பிதத்தில் கற்பித விசேஷபாகமாகிய தோன்று நாமரூபங்கள் இருட்சக்தியினது கற்பிதவிசேஷபாகமானது நீங்கிப் பேதமாய்த் தோன்றுமல் சிவத்தினது பரமார்த்தத்தில் விவகார விசேஷபாகமாகிய மறைந்த சச்சிதாநந்த சொரூபம் விளங்கித்தோன்றலால், பின்னர்ச் சிவத்தினது பரமார்த்தத்தில் பரமார்த்த விசேஷபாகமாகிய மறையாத அகஞ்சொரூபமே எப்போதும் தானுயிருந்தவனுகவும், மாயாசக்தியினது கற்பிதத்தில் யதார்த்தவிசேஷபாகமாகிய தோன்றுதவிருத்தியே எப்பொழுதுந் தானுயிராதவனுகவுமாய், தெருட்சக்தியினது அந்த

ரங்கத்தில் பகிரங்கவிசேஷ பாகமாகிய சாக்ஷிவிருத்தி ஞானப் பிரகாசத்தினாலும், அந்தரங்கத்தில் அந்தரங்க விசேஷபாகமாகிய அகண்டாகாரவிருத்தி ஞானப்பிரகாசத்தினாலும், கூடஸ்த பிரம சொரூபத்தையறிந்து அகங்கார மமகாரங்களை விட்டதாகிய மோக்ஷமுற்று கன்ம சத்தியினதுயதார்த்த விசேஷ பாகமாகிய சிவபோகத்தை யடைந்து, சிவத்தினது விவகாரத்தில் பரமார்த்த விசேஷபாகமாகிய சர்வஞ்ஞத்துவ சொரூபமாகும் ஜீவனதுயதார்த்த விசேஷ பாகமாகிய வீய்ந்த சிதாபாசத்துவமுடையவனாய் அமைந்து விளங்குமவனை கன்மசக்தியினது சாமான்யத்தில் சுவாநுபவத்தின் நிதித்தியாசனவழித்தாய்ப்பிரதிபந்தமற வாக்கு மனாதீதமாகிய சிவத்தினதுசாமான்ய சொரூபமாய்ச் செய்தருள ஞானதீக்ஷைசெய்து, நாமரூபத்துக் கிடமாகிய ஜாக்கிராவஸ்தைக்கும், சச்சிதாநந்தத்துக் கிடமாகிய துரியாதீதாவஸ்தைக்கும், நடுநின்ற அஞ்ஞானத்துக் கிடமாகிய சுழுத்தியவஸ்தையாற்றூங்கி, மாயைக்கிடமாகிய சொப்பனாவஸ்தையில் அதோமுகவிருத்தி கண்ணாய் விவகரிக்கும் ஜீவனுக்குத் தெருட்சத்தியினது சாமான்ய திருவருண் ஞானமாகிய ஊர்த்தமுக ஞானக்கண்ணையறியத் திருப்பி, ஞானத்துக்கிடமாகிய சகல கேவலமற்ற சுத்தாவஸ்தையில் விழிப்பித்தருளியும், சொரூபத்துக்கிடமாகிய துரியாவஸ்தையில் மூடவிருத்தியென்னும்

இராகுவானது மறையாது மறைந்திருந்த மறைவை நீக்கிச் சொப்பிரகாசமாய்ப் பிரகாசிக்கும் ஞானபாஸ்கரனானவன் சதோதயமாய் விளங்குவதையும், விருத்திமயமாய் நாமரூபத்தை நினைந்தும்நினைவற்ற சொரூபத்தை மறந்தும் துன்பப்படும் ஜீவனுக்குப் பந்தத்தன்மைவரும் வழியையும், ஞானமயமாய்ச் சச்சிதானந்தத்தை யறிந்தும் அறிவற்ற உலகத்தை யறியாமலும், இன்பமடையும் ஜீவனுக்கு மோக்ஷமடையும்வழியையும் காண்பித்தருளியும், பந்தவழியைக் கைக்கொள்ளாமலும், மோக்ஷவழியைக் கைவிடாமலும், சதாநுசந்தானம் பண்ணிக்கொண்டு வரும்படியாய் மத்யகத ஞானோபதேசத்தினால், ஆட்கொண்டருளியபடியே பக்குவர்கள்ஆட்படுவார்களாயின், கந்தரநுபூதி. “செம்மான்மகளைத் திருடுந்திருடன், பெம்மான்முருகன்பிறவானிறவான், சும்மாவிருசொல்லறவென்றலுமற், றம்மாபொருளொன்றுமறிந்திலனே” என்னுஞ்சகஜாநுபூதிபெற்று முத்தர்களாய் வாழ்வார்கள். இதில் யாதொரு சம்சயமுமில்லை, சத்தியம்.

கஅ - வது

சுட்பதார்த்தசாமான்ய

விசேஷார்த்தசங்கிரகசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

கசு - வது.

## மாயாஞ்ஞானநிரசனசிந்தனை.

---

இவ்விடத்தில் தோன்றுநின்ற சகலநாமரூப பிரபஞ்சாகாரமாய் விளங்கும் நினைப்பை, பாகியேந்திரியங்களில் போகவொட்டாமல் தடுத்து, அந்தர்முகப்படுத்தி ஞானசாரியர் திருவருட்கண்ணால் காண்பித்தருளிய நிலையினின்று, பாவனுவசத்தில் லயிக்கவொட்டாது நிரோதிக்கும்போது அந்நினைவானது தனது காரணமாகிய மாயையிலேதானடங்கும்.

அதற்குமேல் அப்பிரபஞ்ச மூடலாய்க் காட்டாநின்ற மறைப்புத்தோன்றலாகும்; அதையுஞ் சுழுத்தி வசத்தில்லயிக்க வொட்டாமல் நிரோதிக்கும்போது அம்மறைப்பானது தனது காரணமாகிய ஆணவத்திலேதானடங்கும்.

அப்பொழுது காரியநாமரூப ரகிதமாகிய காரணநாம ரூபமாயையென்னுஞ் சூன்யம் அறிவிற்குப்புறம்பே அதிசூக்கும வெறுவெளியாய்த் தோன்றும்.

அவ்வெறும்பாழாகிய சுத்தவெளியே உண்மைப்பொருளென அதைத் தானாகச்சுட்டி நோக்குதலாகிய ஊன்றுதலைச் செய்விக்குங்காரிய விஷயாந்தகாரரகிதமாகிய காரணசொரூபாந்தகார ஆணவமென்னுஞ் சூன்யம், அறிவிற்குள்ளே அதிசூக்கும விருளாய் அநுமிதிக்கத்தோன்றும்.

இங்ஙனந்தோன்றாநின்ற இம்மாயையையும், ஆணவத்தையும் ஞானாசாரியர் அருளிய ஞானக்கண்ணால் நோக்கி, வெளியாகிய எதிரும் சுட்டுதலைச் செய்வித்தலின் வசமாகிய தானுங்கழலாது, துவிதமாய் நிற்றலின், உண்மைநிலை அன்றெனப் பூராயமாயுணர்ந்து, ஸ்தூல சூக்ஷுமகாரணமாகிய மூவகையினும் சிருஷ்டி திதி சங்காரம் திரோபவம் அநுக்கிரகமாகிய பஞ்சகிருத்தியங்களையே நாடகத்தொழிலாகக்கொண்டு நடத்துஞ் சச்சிதாநந்த லக்ஷணமாகிய அகண்டசிதாகாசத் திருவருட்டரிசனமென்னும் சிவச்செயலை நாடித் தற்செயலறுஞ் சிவபக்தியானும், அப்பஞ்சகிருத்திய நாடகதாரியாகும் லக்ஷியமாகிய சிவப்பிரகாசத்தில் அத்துவிதமாய் அழுந்த லென்னும் சிவ்போதமாய்அமைந்து தற்போதமறுஞ் சிவஞானத்தினாலும், முறையே நிரோதிக்கும்

போது வாக்குமனதீதமாகிய பகலிரவற்ற பரமகைவல்யம் சகஜாநுபவமாமென்பது வேதாகமங்களுக்கும், அவ்வேதாகமங்களின் சித்தாந்தப்பொருளை உணர்ந்த மெய்ஞ்ஞானிகளுக்கும் சம்மதம்.

இதற்கவர்கள் வசனம், வைராக்கியசதகம். "மறைத்தலுநினைத்தலுஞ்செயு மாணவ மாயைநின் றவைதம்மைத், துறத்தலேயிராப் பகலகல்வீடெனச் சொல்வரத்துறவெய்தக், குறித்திடிற்பர பத்திஞானத்தினுற் கூடுமற்றவைநெஞ்சே, நிறத்தபத்திஞ் செயலறினுமறிவின்ற மற்றென்றுமே" என்றிருத்தலுங் காண்க.

௧௬ — வது

மாயாஞ்ஞானநிரசனசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

## ௨௦ - வது

## மத்தியகதஞானசிந்தனை.

---

ஸ்ரீசச்சிதாநந்த சிவசொரூபமான ஞானதேசிகன்திருவருள்நோக்கத்தால் சகல கேவலநீங்கிச் சுத்தநிலையினின்று, பிரஞ்ஞானம் பிரமசொரூபமாகிய தன்னையும் தலைவனையும் அறிந்து,ஏகமாகிய மெய்க்கதியடையவிரும்பிய பக்குவியானவன், இன்றியமையாச் சகல விவகாரங்களையும் சுருக்கமாய்ச்செய்து முடித்து, ஓரேகாந்தஸ்தானத்தில் நிருபாதிகமாகிய சுகாசனத்திலிருந்து, திருவருளிறையைத் திரிகரணசுத்தி பூர்வகமாகத் தியானஞ்செய்து, பின்னர் அவர் அநுக்கிரகித்தருளியபடியே தேகேந்திரியங்களை நியதிசெய்து, பஞ்சேந்திரியங்களைக்கண்டு, அவற்றினின்றஅந்தக்கரணத்தைமீட்டு அதன்வாசனைகளாகிய சங்கற்பத்தையொழித்து, அதற்குமேல் சூன்யத்தில் ஜீவனது சுட்டுப்பார்வையாகிய

அதோமுகவிருத்தியைத்திருப்பிச் சுட்டற்ற ஊர்த்தமுகஞான விருத்தியாகிய திருவருண் ஞானநாட்டமாய் நிற்கவே, எதிரிட்டுச் சகமாய்க்காட்டுவதாகிய மாயையும், எதிரிடாதறிவாய்க் காட்டாததாகிய அஞ்ஞானமும் ஒழிந்து, உள்ளே சொரூபாம்சமாகிய சாமான்யஞான விருத்தியாயிருக்கின்றமையால் மறப்பாகிய கேவலமும், வெளியில் ஜகத்துவிசேஷமாய்த் தோன்றுதிருக்கின்றமையால்நினைப்பாகியசகலமுமிலவாயும், அங்ஙனமே மாயாம்சமாகிய விசேஷ மனோவிருத்தியாயிராமையால் பகலற்ற சுழுத்தியும், ஜகத்து சாமான்யமாய்த்தோன்றுமையின்மையால் இரவற்ற நனவும்உளவாயும், இங்ஙனம் விளங்காநின்ற சகல கேவலமற்ற சுத்தநிலையாகிய நனவிற் சுழுத்திவந்து கிடைக்கும்.

இந்நிலையிற் சாமான்யமாகப் பிரகாசிக்கும் சின்மாத்திர கூடஸ்தராகிய தானும், விசேஷமாகப் பிரகாசிக்குந் தனது சச்சிதாநந்த பிரமசொரூபமாகிய தலைவனும், ஏகமாகப் பிரகாசித்துத்தோன்றுவதை அத்திருவருண் ஞானக்கண்ணால் தன்னில் சர்வமுந்தானாய் இருந்து விளங்கி ரமிக்குஞ் சகஜாநுபவமாய்க்கண்டு, அத்வைதமாகிய உண்மை மோக்ஷத்தையடைந்து, சுருதியின்முடிவில்விளங்கும் "தத்துவமசி" மஹாவாக்கியார்

த்தமாகிய சுத்தாத்வைத சித்தாந்தமௌன நிலையில் ச
னனமரணமற்றுச் சும்மாவிருந்து வாழ்வானென்பதே
சித்தி.

௨௦ - வது

மத்தியகதஞானசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான் திருவருள் வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

உக - வது.

## அத்வைதசிந்தனை.



தேகேந்திரிய பிராணகரணவித்தைகளுக்கும் உள்ளாய் விளங்குஞ் சீவனாகிய அணுவுக்கும் அணுவாய்ச் சதோதிதாநந்தமாய் விளங்காநின்ற தனது யதார்த்த சொரூபமாகிய கூடஸ்தரும், பௌதிக பஞ்சபூத தன்மாத்திராபிமானிகளுக்கும் வெளியாய்விளங்கு மாயையாகிய மகத்துக்கு மகத்தாய்ச் சச்சிதாநந்த பரிபூரணமாய் விளங்காநின்ற சர்வாதிஷ்டான சொரூபமாகிய பிரமமும், காரியகாரணோபாதிகளைவிட்டும் சச்சிதாநந்தாதிலக்ஷணங்களை விடாமலும் அல்லது சாக்ஷித்துவங்களைவிட்டும் தன்மயமாக விளங்கும் சாக்ஷியங்களைவிடாமலும், ஸ்ரீசச்சிதாநந்த சிவசொரூபத்தின் சகளவடிவமாக விளங்காநின்ற சற்குருசுவாமிகளால்போதிக்கப்பட்ட ஒருமொழியென்னும் சாமவேத முடிவாகிய சாந்தோக்ய உபநிஷதத்தில் கூறும் "தத்துவமசி" மஹாவாக்கியார்த்த விசாரஞானத்தால் "ஏகமேவாத்து

விதியம்" எனத்தெளிவுற்றுச் சமாதியில் சாக்ஷாத்காரம் பொருந்திச் சகஜமாய் விளங்குந் தத்துவஞானியே ஜீவன்முத்தனென்றும், பிராரத்தகன்மோபாதிநஷ்டத்தில் விதேகமுத்தனென்றும் உணரத்தக்கவன்; ஆதலால், சற்குரு சந்நிதானத்தில் மகாவாக்கிய விசாரஞானத்தைப்பெற்ற விவேகியானவன் சகலகன்மோபாசனைகளையும் விட்டுவிட்டுச் சதாகாலமுஞ் சமாதியிலிருந்து சாக்ஷாத்காரம்பொருந்துவதாகிய சகஜாநுபவம் பெறத்தக்கதவத்தினை ஆதரவோடுஞ் செய்துகொண்டு வருவதேமேலோர்களுக்குச் சம்மதமாகிய செய்காரியமாகும்.

இங்ஙனம் இம்மஹாவாக்கியார்த்த விசாரஞானத்தைப்பெற்றும், இந்நிலை அப்பிரதிபந்தாபரோக்ஷ ஞானமாவதாகிய சுவாநுபவம்வரப் பயிலாதுகன்மோபாசனைகளிலும் லௌகிக வியாபாரங்களிலும் புத்தியைச் செலுத்தி உழலுவதே தவிர்காரிய மாகும்.

இங்ஙனஞ் செய்காரியத்தைச் செய்தும், தவிர்காரியத்தைத் தவிர்ந்தும் இருப்பதே, சுருதிக்கும் மேலோர்களுக்குஞ் சம்மதமென்று உணரத்தக்கது.

உக - வது அத்வைதசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

———

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

## உஉ - வது.

## சகஜாநுபவசிந்தனை.



"சும்மாவிருக்கச் சுகஞ்சுகமென்று சுருதியெல்லாம்" நிரந்தரஞ்சொல்லியபடியே சற்குரு சுவாமிகளால் தத்துவநிலையைப் போதிக்கப்பெற்ற மாணுக்கனுகிய ஓர் விவேகியானவன் முன்னர்ச் சகல விவகாரங்களையும் விட்டுத் தனியே ஓரேகாந்த ஸ்தானத்தில் சுகாசனத்தைப் பொருந்திச் சற்குரு தியானஞ்செய்து, பின்னர்த் தேகேந்திரியங்களை நியதிகளாந்துமனத்தைக் கண்டு, ரஜோகுணமாகிய கோரவிருத்தியின் வழித்தாய்ச்சென்று, நனவாகிய இந்திரியங்களினின்று விஷயங்களை அறிவதாகிய நினைப்பையுங்கெடுத்து, தமோகுணமாகிய மூடவிருத்தியின் வழித்தாய்ச்சென்று, சுழுத்தியாகிய அவித்தையினின்று அறிவை அறியாததாகிய மறப்பையுங்கெடுத்து, சத்துவகுணமாகிய சாந்தவிருத்தியின் வழித்தாய்ச்சென்று, நனவிற் சுழுத்தியாகிய துரியத்தினின்று கூடஸ்தவறிவாகிய, தன்னை அவ்

வறிவின் விளக்கமாகிய தன்னால் அறிபொருளை அறியாத பிரமவறிவாகிய தானாகவே அறியாமலறிவதாகிய சும்மாவிருந்தே சுகம்பெறச் சதாகாலமும் அநுசந்தானம் பண்ணிக்கொண்டு வரும்பொழுது, அவ்வுண்மைச் சிதாநந்தாயிக் கியாநுபவமாகிய துரியாதீதநிலைலப்தமாய் இந்திரிய விவகாரமாகிய ஜாக்கிராவஸ்தையும், அதற்கிடமாகிய ஸ்தூலதேகமும், அதனை அபிமானியாநின்ற விஸ்வனுமில்லையாய், மனோவிவகாரமாகிய சொப்பனவஸ்தையும், அதற்கிடமாகிய சூட்சுமதேகமும் அதனை அபிமானியாநின்றதைசதனும் இல்லையாய், சீவவிவகாரமாகிய சுழுத்தியவஸ்தையும், அதற்கிடமாகிய காரணதேகமும் அதனை அபிமானியாநின்ற பிராஞ்ஞனுமில்லையாய் முடியும்.

இங்ஙனம் இவ்வியஷ்டிகளில்லையாய் முடியவே.

இவற்றைச் சிருஷ்டித்தும் திதித்தும் சங்கரித்தும் விவகரிக்கும் விவகாரங்களாகிய சமஷ்டி ஜாக்கிரசொப்பன சுழுத்தி அவஸ்தைகளும், இவற்றிற் கிடமாகிய விராட்டு இரண்யகர்ப்பம் அவ்யாகிர்தமென்னும் சமஷ்டி ஸ்தூல சூக்ஷுமகாரணதேகங்களும், இவற்றையபிமாநியாநின்ற வைஸ்வாநரன் சூத்திராத்மா அந்தர்யாமியென்னும் பிரம விஷ்ணு ருத்திரர்களாகிய சமஷ்டியபிமாநிகளு மில்லையாய் முடியும்.

இங்ஙனம் ஆரோபமாகிய இச்சீவேஸ்வர ஜகங்கள் முடியினும், விவகாரதசையில் அவைசாமான்யமாய்த் தோன்றவரும். அங்ஙனந் தோன்றும்போது அவற்றிற்குச் சாக்ஷிமாத்திரமாகவே யிருந்து பார்த்துவரின் அவ்வாரோபிதமாகிய சாமான்ய நாமரூபங்களும் அதிஷ்டானமாகிய சச்சிதாநந்த சிவசொரூபமாய் விளங்கி, அத்வைதாநுபவமாகிய சகஜநிலையிற் சுசம்பெற்றுப் பின்னர் உண்மைமோக்ஷத்தை யடைந்து வாழ்வன். இதில் யாதொரு சம்சயமுமில்லை சத்தியம்.

உஉ - வது

சகஜாநுபவசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்,

---

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

உரு - வது.

## பதார்த்தபஞ்சகநிரூபகசிந்தனை.

இவ்வுலகத்தின் கண்ணே ஆத்மாக்களுக்குள் இருக்கின்ற சிவ்பெருமானது திரோதகருணம்ச விசேஷத்தால், ஒருவன் முன்னர்ப்பாவத்திற்கஞ்சிப்பசுபுண்ணியங்களைக் கர்மகாண்டவிதிப்படி செய்து, அதற்குறும்போக பலன்களை அநுபவித்து வெறுத்து, பின்னர்ப்பதிபுண்ணியங்களைத் திரிகரணசுத்திபூர்வமாகப் பத்திகாண்டவிதிப்படி செய்து, அதற்குறும் சித்த சுத்தியாகிய பிரத்தியக்ஷ பலனைப் பெற்றகாலத்தில் நித்தியாநித்தியவஸ்து விவேகம் இகமுத்தாரார்த்த பலபோக விராகம் சமாதிசட்கம் முமூக்ஷுத்வம் ஆகிய சாதனசதுஷ்டய சம்பத்துண்டாய் முற்றத்துறந்து, ஆசாரியத் தேட்டமுதித்து அநுபவமில்லாமல் வாக்குமாத்திர ஞானத்தால் ஞானாசாரிய வேடம் பூண்ட ஞானாசாரமில்லாத அஞசாரியனைக் கைவிட்டு, பாசவைராக்கியம் ஜீவகாருண்யம் ஈஸ்வரபக்தி பிரமஞானம் ஆகிய நான்குமே ஒருருவாயமைந்து விளங்காநின்ற ஞான

சாரியனைத் தேடியடைந்து, அவரது திருவருள்சுரக்
ம்படி ஆப்தம் அங்கம் தானம் சத்பாவம் ஆகிய கு
சேவையைச் செய்து, அவரது சோதனைக் கெல்லா
தனது தீவிரதரபக்குவத்தையே வெளிப்படக் காட்
நின்று, அவரது திருவடிகளில் வணங்கி ஞானகாண்
விதிப்படி சுவாமி! உண்டாய்த்தோன்றி யழிவதான
இவ்வுலககாரண கர்த்தராவார் யார்? அவரது இலக்
ணம்யாது?

நான்யார்? எனதுஇலக்கணம்யாது?

என்னையும் தலைவனையும் தெரியவொட்டாமல் மறை
த்து மயக்கித்துன்புறுத்திப் பந்திப்பது என்னை? அதன
து இலக்கணம் யாது?

பந்தத்தினின்றும் விடுவித்து முத்தியைக்கொடுப்ப
து யாது? அதனது இலக்கணம் என்னை?

முத்தியென்பதுயாது? அதனது இலக்கணம் என்
னை? இவைகளைக் கிரமமாக அநுக்கிரகித்தருளி அடி
யேனையாட்கொள்ளல் வேண்டுமென் றிரந்து நிற்க,
ஆசாரியர் அச்சீடனுக்கு தனது திருவருட் பிரசாதத்
தைத் தந்தருளி விசாரமுகத்தால் அநுக்கிரகஞ் செய்
யுமாறு.

பரமகாருண்ய சக்திமானாகிய சர்வசம்ஹாரகர்த்தா
வாய் விளங்காநின்ற ஸ்ரீ சிவபெருமானே உலககார

ணகர்த்தராவர், சச்சிதாநந்த சொரூபரா யிருத்தலே அவரது இலக்கணமாம்.

அஃது சொரூபமென்றும் ரூபமென்றும் இரண்டு பகுப்பா யிருக்கும்.

அவற்றுள் சொரூபமாவது சர்வத்திற்குந் தாரகமாயும் சாக்ஷிமாத்திரமாயும் விளங்காநின்ற நிஷ்களசொரூபமாகிய அத்வைத பிரமசொரூபமா யிருத்தலாம்.

ரூபமாவது தனது திருவருட்சத்தியால் ஆத்மாக்களைக் கிரமமாக பந்தத்தினின்றும் நீக்கி முத்திசொரூபமாகிய தன்னேடேகமாக்கு நிமித்தம் பஞ்சகிர்த்தியங்களை நடாத்தி ஆத்மாக்கள் வேண்டும் சகளரூபமாகத் தனது இச்சாஞானக்கிரியா வடிவாயமைந்த தேவதாரூபமா யிருத்தலாம்.

அகமெனஇருந்து விளங்கும் ஆத்மாவே நீயாம்.

அறிவு சொரூபமாயிருத்தலே நினதுஇலக்கணமாம்

அஃது எதார்த்த சொரூபமென்றும் போலி ரூபமென்றும் இரண்டுபகுப்பா யிருக்கும்.

அவற்றுள் எதார்த்தசொரூபமாவது சகல ஜீவோபாதிகளுடன் சம்பந்தப்பட்டும் சம்பந்தப்படாமலே நிர்விகாரமான சாக்ஷிமாத்திரமாயும் சுத்தஅறிவு சொரூபமாயு மிருத்தலாம்.

போலி ரூபமாவது சகலவுபாதிகளுடன் சம்பந்தப் பட்டு அபிமானத்தோ டொன்றிய சிற்றறிவு ரூபமாயி ருத்தலாம்.

உனதறிவைப் பந்திப்பது மலமாம்.

அஃது ஆணவமென்றும் மாயையென்றும் கன்மமெ ன்றும் மூன்ருயிருக்கும்.

அவற்றுள் இருளாயிருத்தலே ஆணவமலத்தினது இலக்கணமாம்

ஒளியாயிருத்தலே மாயாமலத்தினது இலக்கண மாம்.

கிரியையாயிருத்தலே கன்மமலத்தினது இலக்கண மாம்.

அம்மூன்றும் காரணகாரியம் என்று இருபகுப்பா யிருக்கும்.

அக்காரணங்கள் ஏகமாயும் அநாதியாயும் இருக்கும். காரியங்கள் அநேகமாயும் தோன்றியழிவதாயு மிரு க்கும்.

ஆணவமானது ஆத்மாவோடு அநாதியே அபின்ன மாய்க்கலந்து காரணரூபமாய் நின்றும் ஆத்மாவினது உணர்வைச் சொரூபாஞ்ஞான ரூபமாயும் விஷயாஞ் ஞானரூபமாயுந் தோன்றி மறைக்குங் காரிய ரூபமாய் விளங்கியும் பரிபாகம் வந்தகாலத்தில் சிவஞானத்தா

ல் சூன்யமாய்க் கழிந்தழியும். மாயையானது ஆத்மா வோடு அநாதியே பின்னமாய்க் கலந்து ஈஸ்வரசத்தி யநுசரணையாய்க் காரணரூபமாய் நின்றும் ஆத்மாவுக்கு தநுகரண புவனபோக ரூபமாயும் சுருதிகுரு சுவாநுபவ ரூபமாயும் தோன்றி ஆத்மாவினது உணர்வை விளக்குங்காரிய ரூப்மாய் விளங்கியும் சத்தி நிபாதம் பதிந்தகாலத்தில் தன்னால் மித்தையாய்க் கழிந்தழியும்.

கன்மமானது ஆத்மாவோடு அநாதியே பின்னுபின்னமாய்க் கலந்து ஈஸ்வரசத்தி யநுசரணையாய்க் காரணரூபமாய் நின்றும் ஆத்மாவுக்கு ஆர்ச்சித்த கன்ம ரூபமாயும் அநுபவகன்மரூபமாயும் தோன்றி ஆத்மாவை பிரவிர்த்தி நிவிர்த்திரூபமாக சேஷ்டிப்பித்துங் காரிய ரூபமாய் விளங்கியும் இருவினை யொப்புவந்த காலத்தில் அகர்த்துவத்தால் நிர்ச்சலன மாய்க்கழிந்தழியும்.

முத்தியைக்கொடுப்பதுவே தத்துவஞானமாம்.

பதி பசு பாசம் ஆகிய திரிபதார்த்தங்களின் இலக்கணத்தை யுள்ளபடி விளக்கிவைப்பதுவே அதனது இலக்கணமாம்.

அஃது பரஞானமென்றும் அபரஞானமென்றும் இரண்டுபகுப்பா யிருக்கும்.

அவற்றுள் பரஞானமாவது ஆத்மாவுக்குப் பாசவிலக்கணத்தை ஈதீதெனத் தெரிவித்தும் அதை நியதிசெ

ய்வித்தும் அதற்குமேல் பசுவிலக்கணமும் பதியிலக்கணமும் உள்ளபடி யநுபவமா யறிவித்து ஆத்மாவும் சிவமும் மகாவாக்யார்த்தப்படி ஏகமுமாகாமல் இரண்டுமாகாமல் பரமாத்வைத சொரூபாநுபவமா யமையும்படி சமாதிமுகமாய் நின்றுணர்த்தும் அநுபவஞானவடிவாய்ப் பிரகாசிக்கு மியல்போ டிருத்தலாம்.

அபரஞானமாவது அவ்வுண்மைக ளனைத்தும் தெளிய ஆத்மாவுக்கு ஐயந்திரிபற சுருதிமுகமாய் நின்றுணர்த்தும் நிச்சயஞானவடிவாய்ப் பிரகாசிக்கு மியல்போடிருத்தலாம்,

விடுபட்டதுவே முத்தியாம்.

ஆநந்தமாயிருத்தலே அதனது இலக்கணமாம்.

அஃது சாலோகம் சாமீபம் சாரூபம் சாயுச்சியம் எனநான்கு பகுப்பா யிருக்கும்.

அவற்றுள் சாலோகமுத்தியாவது மோக்ஷகர்த்தாவினது உலகத்தை யடைந்து ஆநந்தமா யிருத்தலாம்.

சாமீபமுத்தியாவது அக்கர்த்தாவினது சமீபத்தையடைந்து ஆநந்தமா யிருத்தலாம்.

சாரூபமுத்தியாவது அக்கர்த்தாவினது திருவுருவத்தையடைந்து ஆநந்தமா யிருத்தலாம்.

சாயுச்சிய முத்தியாவது சாக்ஷாத் அக்கர்த்தாவா யே சகஜாநந்தசொரூபமா யிருத்தலாம்.

அச்சாயுச்சிய முத்தியானது ஜீவன் முத்தியென்று ம் விதேகமுத்தி யென்றும் இரண்டு பகுப்பாயிருக்கும்.

அவற்றுள் சீவன்முத்தியாவது ஆத்மாவானவன் பா சத்தொடக் கில்லாமல் தேகத்தோ டிருந்து மோகத் தொடக்கில்லாமல் போகங்களை யநுபவிக்கும்பிரார த்தமுள்ளமட்டும் அநுபவித்தும் சிவாநந்தாநுபூதி மா ருமலிருத்தலாம்.

விதேகமுத்தியாவது பிராரத்தகன்மமொழிந்த வுட னே யாதொருதேகமு மில்லாமல் மீளாதசிவாநந்தாநு பவாதீதமா யிருத்தலாம்.

சாலோகாதி நான்கு முத்திகளையும் அடைவதற்கு சரியை கிரியை யோகம் ஞானம் ஆகிய நான்கு பாத ங்களும் கிரமமாகச் சாதனங்களாக இருக்கும்.

ஆனதால் பவபந்தத்திற்குப் பயந்து மோக்ஷமடை ய விரும்பும் பக்குவர்கள், சுருதிசம்மதப்படி சற்குரு முகமாய்ச் சரியையாதி நான்கு பாதங்களினது இலக்க ணங்களை அஞ்ஞானம் சந்தேகம் விபரீதமறக் கேள்வி யுற்றுச் சிந்தித்துத் தெளிந்து அநுசந்தானம் பண்ணிச் சாலோகாதி நான்கு முத்திகளையும் பெற்றுய்யக் கட வர்கள் என்று அநுக்கிரகஞ் செய்தருளிய ஞானாசாரிய

ரைச் சற்சீடனானவன் விதிப்படி வலம்வந்து அஷ்டா ங்காதி நமஸ்காரங்கள் செய்து எழுந்து அஞ்சலியஸ் தனாய் நின்று பேரன்போ டுள்ளுருகிப் புறத்தே ஒழு குவதுபோலும் கண்களிற் பெருகும் ஆநந்தபாஷ்பத் தோடும் தோத்திரித்து, பின்னர் அவரது அநுஞ்ஞை பெற்றுக்கொண்டு சிரவணஞ் செய்தபடி மன்னித்து நிதித்தியாசனத்தில் சமாதிமுகமாகச் சொரூப சாக்ஷா த்கார மடைந்து சகஜாநுபவத்தில் ஜீவன்முத்தி வி தேகமுத்தி யநுபவங்களையடைந்து வாழ்ந்தனன்.

உரு - வது

பதார்த்தபஞ்சகநிரூபகசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான் திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

உச - வது

## பந்தபஞ்சகநிவர்த்தகசிந்தனை.

ஸ்ரீ சச்சிதாநந்த சிவசொரூபமாகிய பசுபதியே பசுக்களினது பாசநிவர்த்தியார்த்தமாய்க் குருலிங்க சங்கம வடிவங்களில் அதிஷ்டித்துக்கொண்டு விளங்குமென்பதைப் புண்ணியபரிபாகத்தினால் சுருதியின்வழித்தாயறிந்து மனோவாக்குக்காயங்களால் சத்தியபத்தியைச்செய்தும், அதனால் கன்மசமத்துவத்தையும், அதனால் சத்திநிபாதத்தையும் அதனால் சித்தசுத்தியையும், அதனால் சாதனசதுஷ்டயத்தையு மடைந்து தேகாதிபந்த பஞ்சக நிவர்த்தியாகிய நிர்க்குண சாயுச்சியமுத்தியைப் பிரபலசுருதி வாக்யப்படி சற்குருமுகமாய்ச் சுவாநுபவத்தில் பெறத்தக்க மாணாக்கர்கள், தேகத்தை மறந்தும் மனத்தையடக்கியும் அஞ்ஞானத்தைக் கெடுத்தும் சத்தியபுத்தியையொழித்தும் பேதாநுபவஞானத்தைக் கனைத்துஞ் சும்மாவிருக்கும் நிலையை விரும்பினமையால்; சற்குருசுவாமிகளை விதிப்படியடைந்து அவரால் அநுக்கிரகம் பெறுமாறு, சுவாமி! பந்தத்துக்

குத்தேகமே காரணமென்றுரைத்தலால், முன்னரித்தே கத்தைமறக்க அநுக்கிரகித்தருளல் வேண்டுமென்னின்,

அத்தேகம் நித்திராகாலத்தில் யாதொரு முயற்சியி ன்றியே மறக்கவில்லையோ என;

சுவாமி! கன்மத்தால் இத்தேகத்தை மறந்ததாயினும் பாகியத்தில் வைத்துவிட்டு மறந்ததாயிருக்கின்றமை யால், மறுபடியும் நித்திராவஸ்தையை நீங்கியகாலத் தில் இத்தேகந் தானுயிருக்குந் தன்மையோடு வருகின் றது. ஆதலால், இங்ஙனம்வைத்துவிட்டு மறக்காது ஞானத்தாற் களைத்துக்கொண்டு மறப்பதாகிய உபாய த்தை யநுக்கிரகித்தருளல் வேண்டுமென்னின்,

ஸ்தூலபஞ்சபூத பௌதிகமான ஸ்தூலசரீரத்தைத் தனித்தனி சூக்ஷ்ம பஞ்சபூதமான சப்த ஸ்பரிச ரூப ரச கந்தத் தன்மாத்திரைகளாகக் காணப்பெறின் மற ந்துவிடும் என,

சுவாமி! இங்ஙிலை சுவாநுபவமாய்வந்த அடியேங்க ளுக்கு இத்தன்மாத்திரைகள் சூக்ஷ்மரூபமாகிய மன த்தில் அபேதமாயிருத்தலானும், பந்தத்துக்கு மனமே காரணமென் றுரைத்தலானும், இம்மனமடங்க அநுக்கி ரகித்தருளல் வேண்டுமென்னின்,

அம்மனம் சுழுத்திகாலத்தில் யாதொரு முயற்சியி ன்றியே அடங்கவில்லையோ என,

சுவாமி! கன்மத்தால் இம்மனம் அடங்கிய தாயினும் அந்தர்முகத்தில் வாசனைகளைவைத்துக்கொண்டு அடங்கியதா யிருக்கின்றமையால், மறுபடியும் சுழுத்தியவஸ்தையை நீங்கியகாலத்தில் அம்மனம் பிரவிர்த்தியாய் இருக்குந் தன்மையோடு வருகின்றது. ஆதலால், இம்மனம்வைத்துக்கொண்டு அடங்காது ஞானத்தால் நாசஞ்செய்துகொண்டு அடங்குவதாகிய உபாயத்தை அநுக்கிரகித்தருளல் வேண்டுமென்னின்,

உலக, தேக, சாத்திர, அசுர வாசனாரூபங்களாகிய கோரமூட விருத்திகளைச் சுபவாசனா ரூபமாகிய சாந்த விருத்தியாயிருக்கப்பெறின் அடங்கிவிடும் என,

சுவாமி! இந்நிலை சுவாநுபவமாய்வந்த அடியேங்களுக்கு இச்சத்துவவிருத்தி அஞ்ஞானத்தினுல் காரணரூபமான பகுதியில் அபேதமா யிருத்தலானும், பந்தத்துக்கு அஞ்ஞானமே காரணமென் றுரைத்தலானும், இவ்வஞ்ஞானங்கெட அநுக்கிரகித்தருளல்வேண்டுமென்னின்,

அவ்வஞ்ஞானஞ் சொப்பனகாலத்தில் யாதொரு முயற்சியின்றியே கெடவில்லையோ என,

சுவாமி! கன்மத்தால் இவ்வாரோபாஞ்ஞானம் கெட்டதாயினும், அதிஷ்டானஞ்ஞானம் கெடாதிருக்கின்றமையால், மறுபடியுஞ் சொப்பனவஸ்தையை நீங்கிய காலத்தில் இவ்வதிஷ்டானஞ்ஞானமா யிருக்குந் தன்

மையோடு வருகின்றது. ஆகலால், இங்ஙனமிருக்கக் கெடாது ஞானத்தால் அபாவப்படுத்திக்கொண்டு கெடுவதாகிய உபாயத்தை அநுக்கிரகித்தருளல் வேண்டுமென்னின்?

ஆரோபாஞ்ஞானத்தை எதிரிட்டறியாநின்ற ஜீவவறிவைத் தானென்றுணராது, அதிஷ்டானஞ் ஞானத்தை அபாவமென்று சுட்டியறியாது, தன்னையறியுஞ் சுத்தவறிவே தானாக உணரப்பெறின் கெடும் என,

சுவாமி! இந்நிலை சுவாநுபவமாய்வந்த அடியேங்களுக்கு இவ்வதிஷ்டான ஞானமும் மஹாகாரணரூபமான மாயையில் அபேதமாயிருத்தலானும், பந்தத்திக்கு மாயையேகாரணமென் றுணர்த்தலானும், இம்மாயாம்சமான ஜகத்சத்தியபுத்தி ஒழிய அநுக்கிரகித்தருளல் வேண்டுமென்னின்,

அச்சத்தியபுத்தி ஜாக்கிரகாலத்தில் யாதொருமுயற்சியின்றியே ஒழியவில்லையோ என,

சுவாமி! கன்மத்தால் இச்சொப்பன ஜகத்சத்தியபுத்தி ஒழிந்ததாயினும், ஜாக்கிர ஜகத் சத்திய புத்தி ஒழியாதிருக்கின்றமையால், மறுபடியும் ஜாக்கிராவஸ்தையை நீங்கியகாலத்தில் இச்சத்தியபுத்தியா யிருக்குந் தன்மையோடு வருகின்றது. ஆகலால், இங்ஙனமிருக்கவொழியாது ஞானத்தால் கெடுத்துக்கொண்டு ஒழிவதாகிய உபாயத்தை அநுக்கிரகித்தருளல்வேண்டு மென்னின்?

ஆத்மஞானத்தோடு மாத்திரமாயிராமல் சர்வசாக்ஷியாகிய பிரமஞானத்தோடும் இருந்தறியப் பெறின் ஒழியும் என,

சுவாமி! இங்ஙிலை சுவாநுபவமாய்வந்த அடியேங்களுக்கு இச்சர்வசாக்ஷிஞானமும் சிற்சத்தியி லபேதமாயிருத்தலானும், சிற்சத்தியே ஜீவன் முத்திக்குக்காரணமென் றுரைத்தலானும், இச்சிற்சத்தியினது பேதாநுபவ ஞானங்களைய அநுக்கிரகித்தருளல் வேண்டுமென்னின்,

அச்சிற்சத்தியினது பேதாநுபவஞானம் தூஷ்டணீம்பூதகாலத்தில் யாதொரு முயற்சியின்றியே களையவில்லையோ என,

சுவாமி! கன்மத்தால் இச்சிற்சத்தியினது பேதாநுபவஞானங் களைந்ததாயினும், சாக்ஷிஞானங் களையாதிருக்கின்றமையால், மறுபடியுந் தூஷ்டணீம்பூதாவஸ்தையை நீங்கிய காலத்தில் இச்சாக்ஷி ஞானமாயிருக்குந் தன்மையோடுவருகின்றது. ஆதலால், இங்ஙனமிருக்கக் களையாது ஞானத்தால் அபேதப்படுத்திக்கொண்டு களைவதாகிய உபாயத்தை அநுக்கிரகித் தருளல்வேண்டுமென்னின்,

சாக்ஷி ஞானத்துக்குச் சாக்ஷியமாயிராநின்ற நாமரூபங்களைச் சச்சிதாநந்தாகண்டைகசொரூபமாயமைக்கப்பெறின், விசேஷபாகங் களைந்து பிராரத்தசேஷமு

ள்ளமட்டும் சகஜத்தில் அச்சாக்ஷி ஞானத்தினது சாமான்யபாகமாகிய சிற்சத்தியினது அபேதாநுபவஞானத்தோடும், ஜீவன் முத்திதசையிற் சின்னுளிருந்து பின்னர் விதேகமுத்தி தசையில் அநுபவாதீதமாகிய தன்னிலே பூரணமாய்க்கரையும் என, இவ்வாறு சங்கைகளுக்கெல்லாம் விடைகளை அநுக்கிரகித் தருளியபடியே சும்மாவிருந்த சற்குரு சுவாமிகளைநோக்கிச் சற்சீடர்களும், அங்ஙனமே சும்மாவிருக்கும் சகஜாநுபவத்தில் அமைந்திருந்தனர் என்றறிக.

இச்சிந்தனையில் தசவிதசங்கை உத்தரங்களாயிருக்கின்றவைகளை நன்குணரப்புகும் அறிவினர்களுக்கு ...ம்பதப்பாயும் அவற்றுள் ஒவ்வொரு பகுப்பினும், முன் சங்கையுத்தரங்களைந்தும் பொதுத்தன்மையாயும், பி... சங்கையுத்தரங்களைந்தும் சிறப்புத்தன்மையாயும், முடிவில் கேளாதகேள்விக்குச் சொல்லாத மௌனமாகிய மறுமொழியாயும் விளங்கும். ஆயினும் இது உள்ளும் புறமும் மாறுபாடில்லாத சத்தியபத்தியோடு சற்குரு சந்நிதியை யடைந்து அவரது முகமாகக் கேள்வியுற்றுச் சிந்தித்துணரத் தக்கதேயாம்.

உச - வது

பந்தபஞ்சகநிவர்த்தகசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

உ௫ - வது

## அவஸ்தாபஞ்சகநிவர்த்தகசிந்தனை.

---

இங்கே தோன்றுகின்ற திருசியமான சகல உலகங்களும் நாமரூபமென்றுணரும் அவதரமே ஜாக்கிராவஸ்தையாம்.

இங்ஙனந் தோன்றும் நாமரூபங்களனைத்தும் சங்கற்பமயமென் றுணரு மவதரமே சொப்பனவஸ்தையாம்.

இங்ஙனஞ் சங்கற்பமாகிய நாமரூபங்களை உணர்ந்த தன்னை உணராதிருக்கு மவதரமே சுழுத்தி அவஸ்தையாம்.

இங்ஙன முணராதிருந்ததன்னைத் திருக்குரூபமான உணர்வென்று உணராதுணர்ந்து தன்னிடத்தில்தோன்றுஞ் சங்கற்பமயமாகிய நாமரூபங்களனைத்திற்கும் சாக்ஷிமாத்திரமாயிருந்து விளங்கு மவதரமே துரியாவஸ்தையாம்.

இங்ஙனமிருந்து விளங்கும் உணர்வாகிய தன்னிடத்தில் சங்கற்பமயமாகிய நாமரூபங்களனைத்தும் இருந்துதோன்றி இன்பமான அம்சத்தாலனைத்துமாகிய சச்சிதாநந்தாத்வைத பிரமசொரூபந்தானாய் அமையுமவதரமே துரியாதீதாவஸ்தையாம்.

இங்ஙனஞ் சொல்லிய சுத்த பஞ்சாவஸ்தைகளையும் ஞானாசாரிய ரருளிச்செய்த ஞானக்கண்ணினால் தெளிந்த விவேக வைராக்கியங்களோடும் ஜனசங்கமில்லாத ஏகாந்த ஸ்தானத்தில் சுகாசனத்திருந்து சற்குருவைத் தியானஞ்செய்து ஜடமாகிய தேகத்தை நியதிசெய்து விஷயங்களைக் கவர்தற்கு வாயில்களாக இராநின்ற இந்திரியங்களில் செல்லுமனத்தைக்கண்டு, அதை அங்ஙனஞ் செல்லவொட்டாமல் நிறுத்தி, ரஜோகுணம் சமான சலனபாவங்களையும், தமோகுணம்சமான சூன்யபாவங்களையும்; அடையவொட்டாமல் சத்வகுணம்சமான பிரகாசமாய் வைத்துக்கொண்டு, சகல உலகங்களையும் நாமரூபமே யெனக்கண்டுணர்ந்தால், தேகந்தானென்கின்ற பாவனையோடு நன்மைதீமையென்கின்ற பேதபாவனையுங் கெடும்.

சகல நாமரூபங்களையும் சங்கற்பமயமே எனக்கண்டுணர்ந்தால், விஷய உணர்வென்கின்ற இந்திரியங்களோடு விஷயக்காக்ஷியுங் கெடும்.

சகலத்தையு முணர்ந்த தன்னை மறைத்ததுபோன்ற அஞ்ஞானமாகிய சூன்யமிதுவே யெனக்கண்டுணர்ந்தால், சலனமென்கின்ற உள்ளத்தோடு கரணவாசனை யுங் கெடும்,

சகலத்தையு மறைத்த அஞ்ஞானமாகிய சூன்யத்தைச் சுட்டாதொளிரும் சுத்தவறிவே தானெனக்கண்டுணரா துணர்ந்தால், சுட்டறிவென்கின்ற ஜீவத்துவத்தோடு அவித்தையுங் கெடும்.

சகலசாக்ஷிய வடிவமாகிய நாமரூபங்களிரண்டும் சாக்ஷிவடிவமாகிய சச்சிதாநந்த சொரூபத்தில் தன்மயமாகிய அத்துவிதமாய் விளங்கும் பிரமமேதானாய்க் கண்டுணர்ந்தால், சாக்ஷியறிவென்கின்ற ஈசுரத்துவத்தோடு மாயையுங்கெடும்.

இங்ஙனஞ் சகல துவிதபாவங்களுங்கெட்டுச் சச்சிதாநந்தாத்வைத பிரமம் தானென வுணர்வதுவே வேதமுடிவாகிய உபநிஷத்தின் மஹாவாக்கிய தாற்பரியமும் குருபதேசமும் ஜீவன்முத்தர்களுடைய அநுபவமுமாகிய மூன்றும் ஒத்ததுணிவாகும்.

ஆதலால், சாதனசதுஷ்டயமுடைய பக்குவியானவன் சற்குருகடாக்ஷம்பெற்று முற்சொல்லியபடி நினைப்பின் வசஞ்சென்று பிரவிர்த்தியடையாமலும், மறப்பின் வசமழுந்தி நிவிர்த்தியடையாமலும், மத்தியில்தெளிந்த

ஞானவிருத்தியால், முன்னர்த்தோன்றுநின்ற நாமரூப ங்களையும் அந்நாமரூபங்கள் சங்கற்பமயமென்பதையும் தனது யதார்த்தசொரூபத்தைக் காணவொட்டாதும மறைத்த அஞ்ஞானத்தையும், இதுவிதுவென உள்ளபடி அநுபவமாயுணர்ந்து, பின்னர் இங்ஙனம் இவ்வவஸ்தா த்திரயங்களை உணர்ந்த உணர்வாகிய தன்னை ஞானாசா ரியர் உணர்த்தியபடியே உணர்ந்து முற்கண்ட சங்கற் பமயமான நாமரூபங்கள் அனைத்திற்கும் எவ்விடங்களி னும் எப்பொழுதும் சாக்ஷிமாத்திரமாயிருக்குந் தனது வியாபகசொரூபத்தையும், அந்தச்சங்கற்பமயமான நா மரூபங்களும் சச்சிதாநந்தத்தைவிட வேறாகாமல் தா னே அவையனைத்துமா யிருந்து தோன்றிரமித்துக்கொ ண்டு விளையாடும் அத்வைத சொரூபத்தையும், சகஜா நுபவமாயுணர்ந்த முத்தனாகும்வலாயினும் முற்சொல் லிய நிலைகளில்எந்தெந்தநிலைகள் அநுபவத்திற்குவந்த னவோ அந்தந்தநிலைகளை சகஜப்படுத்திக்கொண்டு அத ற்குமேல் மற்றநிலைகளைஅடையும் அப்பியாசங்களைக் கொண்டு அவற்றையும் சகஜாநுபவப்படுத்தும் அவதர த்தில், உணர்வாகிய தன்னையுணர்ந்தவிடத்தில் அஞ்ஞா னமாகிய சுழுத்தியவஸ்தைகெட்ட அநுபவஅடையா ளமும் சர்வசாக்ஷியாகியதன்னையுணர்ந்தவிடத்தில் சங் கற்பமாத்திரமென்றுகாணுதநாமரூபங்களின் சத்தியத் தோற்றமாகிய ஜாக்கிராவஸ்தை கெட்டவநுபவஅடை யாளமும், சச்சிதாநந்தாகண்டாத்வைத சொரூபமாகி

ய தன்னையுணர்ந்தவிடத்தில் தன்மயமென்றுகாணுதநா மரூபமயமாகும் சங்கற்பத்தின்மித்தைத் தோற்றமாகி ய சொப்பனுவஸ்தைகெட்ட அநுபவ அடையாளமும், இங்ஙனம் அவஸ்தாத்திரயங்களுங்கெட்ட விடத்தில் அவற்றிற்குச் சாக்ஷியாயிருந்து விளங்குவதாகிய துரி யாவஸ்தைகெட்ட அநுபவஅடையாளமும், இங்ஙனம் துரியாவஸ்தை கெட்டவிடத்தில் அதுபற்றித் துரியாதீ தாவஸ்தையென்பதும் விவகாரமட்டன்றிப் பாரமார்த் தத்தில் வசனமாத் திரமேயென்னும் அநுபவ அடை யாளமுங்கண்டு கழித்து, சகஜாநுபவத்தில் சும்மா இருக்கும் ஜீவன்முத்தியையடைந்து பின்னர் விதேக முத்தியை யடையவேண்டுவதே செய்காரியமாகும்.

உரு - வது

அவஸ்தாபஞ்சகநிவர்த்தகசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

உசு - வது

## துரியாநுபவசிந்தனை.



உலகத்தின்கண்ணே வேதவிதிப்படி புண்ணியங்க ளைச் செய்துள்ள அநேகஞ் ஜீவர்களுக்குள் ஒருபுண் ணியாத்மாவானவன் சிவபுண்ணியங்களைச்செய்து, அ தனுல் சித்தபரிபாகப்பட்டவனுய்ச் சாதுக்கள்து சார் பினுல், அவனுக்குச் சாஸ்திரவாசனையுண்டாகியபோது சாக்கிரத்தில் விழித்தலும், தூங்கலும், சொப்பனத்தி ல் நினைத்தலும், மறத்தலும், சுழுத்தியில் அறிதலும், அ றியாமையும் ஆகிய இச்சகல கேவலங்களினுல் தனது எதார்த்த சொரூபத்தை அறியாமல், தொன்றதொட்டு ச் சனனமரணப்பட்டுத் துக்கசாகரத்தில் வீணுய்மூழ் கிப்போகின்ருேமென்றறிந்து, பின்னர் இச்சகலகேவ லங்கள் தாக்காத சுத்தாவஸ்தையில் நிறுத்தி, யதார்த் த சொருபத்தை அறிவித்து, நித்தியாநந்தமாகிய கரை யிலேற்றி இரக்ஷித்தருளும் பாசவைராக்கியம், ஜீவ காருண்ணியம், ஈசுரபக்தி பிரமஞானமாகிய இந்நா

ன்குமே ஓர்வடிவாய்த் திரண்டுவந்த ஞானசாரியனைத் தேடியடைந்து, அவரது திருவருள்பெறும்படி அவனை அன்போடு துதித்து வணங்கி வினவும் ஆப்தம், அங்கம், தானம், சற்பாவமாகிய சிஷாசாரம் முற்றும் அமைந்த சற்சிஷனுக்கு அவரநுக்கிரகஞ்செய்த பிரகாரம்,

ஓரிந்திரிய மானது ஒருவிஷயத்தைச் சுட்டிக் கிரகித்தால், அப்பொழுது அவ்வொருவிஷயமாத்திரம் கிரகிக்கப்பட்டதாயும், மற்றவிஷயங்கள் கிரகிக்கப்படாதனவாயுமுடியும். இங்ஙனம் முடிவதே சகலகேவலமாகும்.

அங்ஙனம் யாதொருவிஷயத்தையும் இந்திரியங்களானவை சுட்டிக் கிரகியாமல் பொதுப்பார்வையா யிருந்தால், ஸ்தூலபிரபஞ்ச விஷயங்கள் விசேஷமாய்த் தோன்றுவதாகிய அறிவும், அத்தியந்தம் தோன்றாமையாகிய அறியாமையும் கெட்டு, பார்வை பாராமையற்ற மத்திய கதாவஸ்தையாகும்.

இம்மத்திய கதாவஸ்தையில் நின்று ஞானசாரியர் அருளிச்செய்தபடி சற்சிஷனானவன் தனது எதார்த்த சொரூபத்தை அறிந்து, ஸ்தூலபிரபஞ்ச விஷய சாமான்யத்தோற் றரவிற்குச் சாக்ஷிமாத்திரமா யிருப்பதே ஜாக்கிரத்தில் துரியமாகும்.

மனமானது ஒரு விஷயத்தைச் சுட்டி நினைத்தால் அப்பொழுது அவ்வொரு விஷயமாத்திரம் நினைக்கப் பட்டதாயும், மற்ற விஷயங்கள் நினைக்கப்படாதனவா யு முடியும், இங்ஙன முடிவதே சகல கேவலமாகும்.

ஆதலால், அங்ஙனம் யாதொருவிஷயத்தையும் மன மானது சுட்டிநினையாமல் பொதுப்பார்வையாயிருந் தால், சூக்ஷும பிரபஞ்சவிஷயங்கள் விசேஷமாய்த் தோன்றுவதாகிய அறிவும், அத்தியந்தந்தோன்றுதலா கிய அறியாமையும் கெட்டு, நினைப்புமறப்பற்ற சுத்தா வஸ்தையாகும்.

இச்சுத்தாவஸ்தையில் நின்று ஞானாசாரியரரு[illegible] செய்தபடி சற்சீஷனானவன் தனது எதார்த்தசொரூ[illegible] த்தை யறிந்து, சூக்ஷும பிரபஞ்சவிஷய சாமான்ய[illegible] தோற்றரவிற்குச் சாக்ஷிமாத்திரமா யிருப்பதே செ[illegible] பனத்தில் துரியமாகும்.

ஜீவனானவன் சூன்யத்தைச் சுட்டி யறிந்தால் அ[illegible] பொழுது அந்தச் சூன்யமாத்திரம் அறியப்பட்டதா[illegible] ம், அறிந்த தான் அறியப்படாதவனாயும் முடியும், [illegible] ங்ஙனமுடிவதே சகல கேவலமாகும்.

ஆதலால், அங்ஙனம் எதிரிட்ட ஸ்தூலசூக்ஷும பிர பஞ்ச விஷயாபாவமான சூனியத்தைச் சுட்டி அறியா மல் பொதுப்பார்வையாயிருந்தால், காரண பிரபஞ்ச

மான சூனியம் தோன்றுவதாகிய அறிவும், தனதுதோன்றாமையாகிய அறியாமையும் கெட்டு, ஞானஞ்ஞானமற்றசமாதி யவஸ்தையாகும்.

இச்சமாதி அவஸ்தையில்நின்று ஞானசாரிய ரருளிச்செய்தபடி சற்சிஷனானவன் தனது எதார்த்த சொரூபத்தை அறிந்து, சந்நிதானத்தில் தோன்றுவதாகிய சர்வத்திற்கும் சாக்ஷிமாத்திரமா யிருப்பதே சுழுத்தியில் துரியமாகும்.

ஈசுராம்சனான சாக்ஷிகன் மாயாம்சமான சர்வநாமரூபங்கட்கும் சாக்ஷிமாத்திர மாகத் தன்னை அறிந்தால், அப்பொழுது தனது சாக்ஷித்துவமாத்திரம் அறியப்பட்டதாயும், சொரூபாம்சமான சச்சிதாநந்தாத்வைதத்துவம் அறியப்படாததாயு முடியும்; இங்ஙனம் முடிவதே சகல கேவலமாகும்.

ஆதலால், அங்ஙனம் சாக்ஷியத்துக்குச் சாக்ஷியாக அறியாமல் சும்மா இருந்தால், மஹாகாரண பிரபஞ்சமான சாக்ஷித்துவம் தோன்றுவதாகிய அறிவும், நாமரூபங்கள் சச்சிதாநந்தமயமாய் விளங்கும் அத்வைதத்துவம் தோன்றாததாகிய அறியாமையும் கெட்டு, விவகார பாரமார்த்திகமற்ற சகஜாவஸ்தை யாகும்.

இச்சகஜாவஸ்தையில் நின்று ஞானசாரியரருளிச்செய்தபடி சற்சிஷனானவன் தனது எதார்த்தசொரூப

மாயிருந்து விளங்கிரமித்துச் சுத்தாத்வைத பிரமமாய் அமைவதே துரியத்தில் துரியமாகும்.

இஃது பக்ஷாந்தரத்தினுல் துரியாதீதமென்றும் சொல்லப்படும்.

இதுவே வேதாந்த பிரதிபாதகமாகிய சித்தாந்தப் பொருளென்றுணர்த்தியபடி உணர்ந்தனன்.

உசு - வது

துரியாநுபவசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

## உஎ - வது

## துரியாதீதசொரூபாநுபவசிந்தனை.

இவ்விடத்தில் இந்திரியங்களானவை ஸ்தூலபிரபஞ்சமாகிய பிரத்தியக்ஷவிஷயங்களை அறிகின்ற அவதரமே ஜாக்கிராவஸ்தையாம்.

மனமானது சூக்ஷும பிரபஞ்சமாகிய வாசனுவிஷயங்களை அறிகின்ற அவதரமே சொப்பனுவஸ்தையாம்.

ஜீவனுனவன். காரணபிரபஞ்சமாகிய சூன்யவிஷயத்தை அறிகின்ற அவதரமே சுழுத்தி அவஸ்தையாம்.

இவற்றுள் சாக்கிரத்தில் சாக்கிரம் சாக்கிரத்தில் சொப்பனம் சாக்கிரத்தில் சுழுத்தி எனவும், சொப்பனத்தில் சாக்கிரம் சொப்பனத்தில் சொப்பனம், சொப்பனத்தில் சுழுத்தி எனவும், சுழுத்தியில் சாக்கிரம் சுழுத்தியில் சொப்பனம் சுழுத்தியில் சுழுத்தி எனவும், இங்ஙனம் ஒவ்வொன்றில் மும்மூன்றாக ஒன்பதவஸ்தைகள் உள்ளன.

இவற்றுள் ஞானேந்திரியங்களுக்கு விஷயப்படும் பொருள்களா யிருத்தலால் இத்தூலபிரபஞ்சம் வேறு, இதை அறியும் ஞானேந்திரியங்கள் வேறென்று அறிகின்ற அவதரமே சாக்கிரத்தில் சாக்கிரமாம்.

இத்தூல பிரபஞ்சத்தைச் சடமென்று நியதிகளைந்து, இதையறிந்த அறிவாகிய ஞானேந்திரியங்களினது சொரூபம் யாதெனநோக்கும் அவதரமே சாக்கிரத்தில் சொப்பனமாம்.

இங்ஙனம் நோக்கும்பொழுது அந்தஞானேந்திரியங்களினது சொரூபம் தோன்றாதிருக்கும் அவதரமே சாக்கிரத்தில் சுழுத்தியாம்.

இங்ஙனமே மனத்திற்கு விஷயப்படும்பொருள்களாயிருத்தலால், இச்சூக்ஷும பிரபஞ்சம்வேறு, இதை அறியும் மனம் வேறு என்று அறிகின்ற அவதரமே சொப்பனத்தில் சாக்கிரமாம்.

இச்சூக்ஷும பிரபஞ்சத்தைச் சடமென்றுநியதிகளைந்து, இதைஅறிந்த அறிவாகியமனத்தினது சொரூபம் யாதெனநோக்கும் அவதரமே சொப்பனத்தில் சொப்பனமாம்.

இங்ஙனம் நோக்கும்போது அந்தமனத்தினது சொரூபம் தோன்றாதிருக்கும் அவதரமே சொப்பனத்தில்சுழுத்தியாம்.

இங்ஙனமே ஜீவனுக்குவிஷயப்படும் பொருளாயிரு

த்தலால் இச்சூன்ய பிரபஞ்சம் வேறு, இதையறியும் ஜீவன் வேறு என்று அறிகின்ற அவதரமேசுழுத்தியில் சாக்கிரமாம்.

இச்சூனிய பிரபஞ்சத்தைச் சடமென்று நியதிகளை ந்து, இதை அறிந்த அறிவாகிய ஜீவனது சொரூபம் யாதென நோக்கும் அவதரமே சுழுத்தியில் சொப்பனமாம்.

இங்ஙனம் நோக்கும்பொழுது அந்தச் சீவனது சொரூபம் தோன்முதிருக்கும் அவதரமே சுழுத்தியில் சுழுத்தியாம்.

இங்ஙனம் அவஸ்தாத் திரயங்களையும், இவ்வவஸ்தா பேதங்களையும், இவ்வவஸ்தா அறிவுகளையும், வெவ்வேருகப் பார்த்தறிந்து சகலத்தையும் நியதிகளைந்து, சேஷித்த கூடஸ்தராயிருந்து விளங்கும் தன்னையறியும் அவதரமே துரியாவஸ்தையாம்.

இத்துரியாவஸ்தையில் துரியத்தில் சாக்கிரம், துரியத்தில் சொப்பனம், துரியத்தில் சுழுத்தி, துரியத்தில் துரியம் எனநான்கவஸ்தைகள் உள்ளன.

இவற்றுள் ஸ்தூலபிரபஞ்சம் சொப்பனத்தில் மாறிச்சுழுத்தியில் கெடும் என்றும், விக்ஷேபசக்தியின் தமோகுண விருத்திபரிணமம் என்றும், ஞானேந்திரியங்கள் அல்ல என்றும், இதைஅறியும் ஞானேந்திரியங்களினது சொரூபம் கோளகங்களைப் பற்றி அறியும் வி

க்ஷேபசக்தியின் சத்துவகுண வியஷ்டி விருத்திவடிவமாகிய அறிவேஎன்றும், இவைமனத்திற்கு விஷயப்படும் பொருள்களாய்த் தம்மைத்தாமறியாதபடியால் சடமென்றும், சூக்ஷும பிரபஞ்சம்சாக்கிரத்தில் மாறிச்சுழுத்தியில் கெடுமென்றும், சங்கற்பத்தின் வாசனுசமஸ்கார விருத்தி பரிணுமம் என்றும், மனம் அன்றென்றும், இதை அறியும் மனத்தினதுசொரூபம் கோளகங்களைப்பற்ருது அறியும் விக்ஷேபசக்தியின் சத்துவகுண சமஷ்டி விருத்தி வடிவமாகிய அறிவே என்றும், இது ஜீவனுக்குவிஷயப்படும் பொருளாய்த்தன்னைத்தான் அறியாதபடியால் ஜடமென்றும், சூன்யபிரபஞ்சம் சொப்பன சாக்கிரங்களில் மாறித் துரியத்தில் கெடுமென்றும், ஸ்தூலசூக்ஷும பிரபஞ்சங்களின் அபாவமான இருளேஎன்றும், ஜீவன் அன்றென்றும், இதை அறியும் ஜீவனது சொரூபம் ஆவரணசத்தியினுல் மறைப்புண்டு சுட்டிஅறியும் அவித்தைசக்தியின் பிரதிபலித்த சித்தின் பிரதிபிம்ப வடிவமாகிய அறிவே என்றும், இதுகூடஸ்தராகிய தனக்குவிஷயப்படும் பொருளாய்த் தன்னைத்தான் அறியாதபடியால் ஜடம் என்றும், வேறுபிரித்து இவற்றை அறியும் தான்வேறென்று அறிகின்ற அவதரமே துரியத்தில் சாக்கிரமாம்.

இந்த ஸ்தூலாதி மூவிதப்பிரபஞ்சங்ளையும் ஞானேந்திரியாதி மூவித அறிவுகளையும் நியதிகளைந்து இவற்றை அறிந்த தனது சொரூபம் யாதெனப் பராக்வி

ருத்தியாக நோக்காது பிரத்தியக் விருத்தியினல் நோக்காது நோக்கும் அவதரமே துரியத்தில் சொப்பனமாம்.

இங்ஙனம் நோக்காது நோக்கும்பொழுது தனது சொரூபம் ஸ்தூலாதி மூவிதப்பிரபஞ்சங்களாகிய பிரமேயமாய்த் தோன்ருதிருக்கும் அவதரமே துரியத்தில் சுழுத்தியாம்.

இங்ஙனம் இவ்வனைத்தையும் அறிந்த அறிவாகியதான் எந்த அவஸ்தையிலும் அறியுந்தன்மைமாருது இருத்தலினுலும், எக்காலத்திலும் அறியாமல் கெட்டுப்போகாதிருத்தலினுலும், யாதொன்றினுலும் விஷயப்படும் பொருளாகா திருத்தலினுலும், எவ்விதத்திலாயினும் நியதிகளையக் கூடாதிருத்தலினுலும், நிர்விகார சச்சிதாநந்தமே தனது சுயசொரூபமென்று தன்னைத் தனது சுயம்பிரகாசத்தால் தானே அப்பிரமேயமாய் அறியாதறிந்தும், முன்னர்த்தூலபிரபஞ்சாதி ஞேயத்துக்கும், இதவிருத்தியாதிஞானத்துக்கும், சிதாபாசஞதிஞாதிருவுக்கும்; நிராவரணத்தினல் சகலத்தையும் அறியும் சுத்தமாயையிற் பிரதிபலித்த சித்தின்பிரதிபிம்ப வடிவாகிய ஈசுரத்துவமான சாக்ஷித்துவம் பொருந்தி, பின்னர்ச் சாக்ஷியங்களாகிய சர்வசமஷ்டி உபாதிகளையும் வேறென்று நியதிகளைந்து, சேஷித்த பிரமமாத்திரமாயிருந்து விளங்கி ரமிக்கும் அவதரமே துரியத்தில் துரியமாம்.

இங்ஙனம் சச்சிதாநந்த பிரமசொருபமாகிய தன்னிடத்தில் ஜீவேஸ்வரஜகங்களாகச் சொல்லிய ஆரோபமான நாமரூபமூல மாயாம்சம் தோன்றாமல், எப்போதும் எவ்விடங்களிலும் எந்தவஸ்துக்களும் அதிஷ்டானமான சச்சிதாநந்த சுபாவசொரூபாம்சமாகவே விளங்கிச் சாக்ஷிவாசனைகளைாந்து, அகண்டைக ரசாநந்தாத்வைத சொரூபமாய் அமையும் அவதரமே துரியாதீதமாம்.

முற்சொல்லிய அவஸ்தைகளைப் பற்றி இதையும் அதீதமாகிய ஓரவஸ்தை என்று உபசாரமாய்ச் சொல்லியதே அன்றி வாஸ்தவம் அன்று. ஆதலால், இஃது சகஜாநுபவமாகிய சுபாவசொரூபமேயாம்.

இத்துரியாதீத சொரூபாநுபவத்தைச் சற்குருஸ்வாமிகளது கிருபையினால் சமாதியின்கண் சாக்ஷாத்காரமாயடைந்தவனே முத்தனென்பதற்குச் சகலசுருதிகளும் பிரமாணசித்தி.

உஎ - வது

துரியாதீதசொரூபாநுபவசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

உஅ - வது

## சதுஷ்பாதசிந்தனை.

---

ஸ்ரீசச்சிதாநந்த சொரூபமே நன்றாய் விளங்கிக்கொண்டிருப்பதை அங்ஙனமே காட்டாது மறைத்து, நாமரூபத்தைக் காணச்செய்யும் மாயையினது அபேதத்தை விரும்புவதாகிய பாசவைராக்கியமும், சச்சிதாநந்தநாமரூபங் களினிடைநின்று பந்தப்பட்டு வருந்தும் ஜீவத்துவத்தைக் கெடுப்பதாகிய ஜீவசாருண்ணியமும், சச்சிதாநந்தங்கள் மூன்றும் அதிஷ்டானமாகிய தனது சொரூபாம் சமென்றும், நாமரூபங்களிரண்டும் ஆரோபமாகிய தனதுமாயாம்சமென்றும், அறிவித்தருளும் ஞானமூர்த்தியினிடத்துப் பேதபாவனையை நீக்குவதாகிய ஈசுரபக்தியும், சச்சிதாநந்த பிரமசொரூபமாகிய தன்னில் நாமரூபமாயா ஜகம் வேறின்றி அத்துவிதமாய் விளங்குந்தன்னை எதிரிட்டறியாது அமைவதாகிய பிரமஞானமும் ஆகிய இந்நான்கையுந் திருமேனியாக உடைய ஞானசாரியனாயும் சுருதியையும் அநுசரித்து, நித்தியாநித்திய வஸ்துவிவேகாதிசாதன சதுஷ்டய முடையஅதிகாரிகள் ஆவசியகமாய்ச்

செய்யத்தக்க செய்கையைச் செய்து அடையத்தக்க அடைவையடைய வேண்டும்.

அதாவது தேகவிவகாரத்தைத் தேகத்தில் விவகரியாது விவகரித்தலாகிய சுகாசனமே சரியையாகத் துணிந்து, அதனைநன்றாய்ச் செய்து அதற்குப் பலனாகிய ஞானேந்திரிய மென்னும் அறிவிருக்குஞ் சாலோக்ய பதமும், கட்பார்வையைக் கண்ணிற்பாராது பார்த்தலாகிய லக்ஷியதிருஷ்டியே கிரியையாகத் துணிந்து, அதனைநன்றாய்ப் பார்த்து அதற்குப்பலனாகிய சத்துவ விருத்தியென்னும் அறிவிற்குச் சாமீப்யபதமும், மனநினைவை மனத்தினினையாது நினைத்தலாகிய அபாவத் தியானமே யோகமாகத் துணிந்து, அதனைநன்றாய் நினைத்து அதற்குப்பலனாகிய சுத்தசீவனென்னும் அறிவினது சாரூப்யபதமும், அறிவின்றிவை அறிவினறியாதறிதலாகிய நிர்விகற்ப சமாதியே ஞானமாகத்துணிந்து, அதனை நன்றாயறிந்து அதற்குப் பலனாகிய சின்மாத்திர சொரூபமாகிய பிரமமென்னும் அறிவாம் சாயுச்சிய பதமும்பெறுதலேயாம்.

இஃது அஞ்ஞானமறச் சிரவணஞ் செய்து சம்சயமற மனனித்து விபரீதமறச் சுவாநுபூதியினால் சகஜமாயுணரத்தக்கது.

௨அ - வது சதுஷ்பாதசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

உகூ - வது

## ஞானசித்திசிந்தனை.

---

ஆகாயகமனஞ்செய்து ஆநந்தமடைதலே மேலாகிய சித்தியென்று பெரியவர்கள் சொல்லும் சொற்பொருளைச் சிந்திக்குமிடத்து ஆகாயமென்றும், கமனமென்றும், ஆநந்தமென்றும், சித்தியென்றும் நான்கு பகுப்பாயிருக்கும்.

இவற்றுள் ஆகாயமானது பூதாகாயம், மனகாயம், சிதாகாயமெனவும், கமனமானது தேககமனம், மனோகமனம், போதகமனமெனவும், ஆநந்தமானது ஸ்தூலவிஷயாநந்தம், சூக்ஷும விஷயாநந்தம், காரண பிர்மாநந்தமெனவும், சித்தியானது தேகசித்தி, மனோசித்தி, ஞானசித்தியெனவும் ஒவ்வொன்றும் மும்மூன்று பிரகாரமாய் இருக்கும்.

இவற்றை யடைதற்குச் சாதனங்கள் முறையே தந்திரத்தோடுங்கூடிய வாசியோகம், மந்திரத்தோடுங் கூ

டிய லக்ஷியயோகம், விசாரத்தோடுங்கூடிய ஞானயோகமென மூன்றுவிதமாய் இருக்கும்.

இவற்றுள் வாசியோகம் அவ்விலக்கண முணர்ந்த குருமூலமாய்க்கேட் டப்பியாசஞ்செய்யின், பூதாகாயத்துள் ஸ்தூலதேகமானது வேண்டுமிடங்களில் சமனித்து அவ்வவ்விடங்களிலுள்ள ஸ்தூலபிரபஞ்ச விஷயக்காட்சிகளால் வரும் ஸ்தூலவிஷயாநந்தங்களை இம்மையி லநுபவித்து வாழ்வதே தேகசித்தியெனவும், லக்ஷியயோகம் அதையறிந்த குருமூலமாய்க்கேட் டப்பியாசஞ்செய்யின், மனுகாயமாகிய சர்வஜீவர்களுடைய இருதயாகாயத்துள்ளும் பூதாகாயத்துள்ளும் மனமானது எண்ணிய எண்ணங்களிலும் காலதேசங்களிலும் சூக்ஷுமமாய்க் கமனித்து அவ்வவ்விடங்களிலுள்ள அதியற்புத சூக்ஷுமபிரபஞ்ச விஷயக்காட்சிகளால் வரும் சூக்ஷும விஷயாநந்தங்களை இம்மைமறுமைகளி லநுபவித்து வாழ்வதே மனோசித்தியெனவும், ஞானயோகம் அவ்விலக்கணத்தைச் சுவாநுபவமாய் நன்குணர்ந்த சற்குருமூலமாய் விசாரித்தறிந்து அப்பியாசஞ்செய்யின், அளவுகளுக்கெட்டாத சிதாகாயத்துள் போதமானது அறியாதறியுமிடங்களில் பூரணமாய்க் கமனியாது கமனித்து அவ்வவ்விடங்களிலுள்ள நிஷ்பிரபஞ்ச ஞானேயத் தன்மயக்காட்சியால் வரும் காரணபிர்மாநந்தத்தைத் தானாய்ச் சர்வகாலமு

ம் அநுபவித்து வாழ்வதே ஞானசித்தியெனவும் சொல்லப்படும்.

மேற்சொல்லிய அப்பியாசங்கண் மூன்றனுள், வாசியோகாப்பியாச பிரகாரமும், லக்ஷயயோகாப்பியாச பிரகாரமும், அவ்வச்சம்பிரதாயங்களாலுணரலாம்.

ஞானயோகாப்பியாச பிரகாரமாவது ஸ்தூலபிரபஞ்ச நீக்கம், சூக்ஷுமபிரபஞ்ச நீக்கம், காரணபிரபஞ்ச நீக்கம், மஹாகாரண நிஷ்பிரபஞ்சப் பேறு என நான்காம்.

இவற்றுள் முற்சொல்லிய, மூன்றையும் நீக்கவும், பிற்சொல்லியஒன்றைமாத்திரம் அடையவும், அவ்வக்காரணங்களை நன்குணர்ந்தாலன்றி நீக்கவும் அடையவுங் கூடாவாம்.

ஆகலின், முன்னர் ஸ்தூல பிரபஞ்சத்தைநீக்கிச் சூக்ஷும பிரபஞ்சத்தை அடைவதற்குக் காரணம் யாதென்னின்?

அந்த ஸ்தூலபிரபஞ்சமானது அசுத்தமென்றும் சுத்தமென்றும் இரண்டுவிதமாய் இருக்கும்.

இவற்றுள் அசுத்தமாவது அறியாமையோடும் இகலோக விவகாரமாகிய உழவு, தொழவு, வாணிபம், சிற்பம், பரதம், எழுத்து, ஆகிய அறுவகைத்தொழில்களையும், பரலோக விவகாரமாகிய நித்திய நைமித்திய காம்

ய பிராயச்சித்த நிஷித்தம் ஆகியஐவகைத்தொழில்களை யும் அற்பசுருதியிற் சொல்லிய பிரகாரஞ்செய்தலாம்.

சுத்தமாவது அஞ்ஞானமற மோக்ஷலோக விவகார மாகிய ஆத்மாநாத்ம விசார சாஸ்திரசிரவணங்களைப் பிரபல சுருதியிற் சொல்லியபிரகாரம் செய்தலாம்.

இவ்விரண்டில் சுத்தஸ்தூல பிரபஞ்சமொன்றே கா ரணமாகும், இவ்வொன்றே அவ்விரண்டிற்கும் எங்ங னங் காரணமாம் என்னின்?

ஆரம்பமானது நீக்குதலுக்கும், அவதியானதுஅடை தலுக்குமாம். மேலிங்ஙனம் வருமிடங்களுக்கும் இவ் வண்ணமே யுக்தியாகும்.

இக்காரணமாகிய சுத்தஸ்தூல பிரபஞ்சத்தைக்கொ ண்டு அசுத்தஸ்தூல பிரபஞ்சத்தை நீக்கிச் சூக்ஷுமம பிரபஞ்சத்தை யடையின், மேலதைநீக்கிக் காரண பி ரபஞ்சத்தை யடைதற்கு ஏது யாதென்னின்?

அச்சூக்ஷுமம பிரபஞ்சமும் அசுத்தமென்றும் சுத்த மென்றும் இரண்டுவிதமாய் இருக்கும்.

இவற்றுள் அசுத்தமாவது, முற்சொல்லிய உழவாதி நித்தியமாதி கன்மங்களைக்குறித்துச் சந்தேகத் தோடு ஞ் சிந்திக்குமனனமாம்.

சுத்தமாவது முற்சொல்லிய சிரவணபலமாகிய ப ரோக்ஷஞானத்தைக் குறித்துச் சந்தேகமறச் சையுக்தி களோடுசிந்திக்குமனனமாம். இச்சுத்தமேகாரணமாம்.

இக்காரணமாகிய சுத்தசூக்ஷும பிரபஞ்சத்தைக் கொண்டு அசுத்த சூக்ஷும பிரபஞ்சத்தை நீக்கிக் கார ண பிரபஞ்சத்தை அடையின், மேலதைநீக்கி மஹாகா ரண நிஷ்பிரபஞ்சத்தை யடைதற்குக் காரணம் யா தென்னின், -

அக்காரண பிரபஞ்சமும் அசுத்தமென்றும் சுத்த மென்றும் இரண்டுவிதமாய் இருக்கும்.

இவற்றுள் அசுத்தமாவது முற்செய்த சந்தேகசிந்த னையால் விபரீதத்தோடும் ஓர்பிரகாரமாய்த் தெளியு ந் தெளிவாம்.

சுத்தமாவது முற்செய்த மனனபலமாகிய அபரோ க்ஷஞானத்தைக் குறித்து விபரீதமறச் சர்வானுபவசித் தமாய்த் தெளியுந் தெளிவாம், இச்சுத்தமே காரண மாம்.

இக்காரணமாகிய சுத்தகாரண பிரபஞ்சத்தைக்கொ ண்டு அசுத்தகாரண பிரபஞ்சத்தை நீக்கி மஹாகார ண நிஷ்பிரபஞ்சத்தை யடையின், மேலதை நீக்கவே ண்டுவதில்லையோ வென்னின்?

முன்னர்த்தெளிந்த தெளிவின் பலமாய்உதயமாகும் அப்பிரதிபந்தாபரோக்ஷ ஞானத்தினுல் சமாதி முகமாய்ப் பிர்மாநந்த சாக்ஷாத்காராநுபவ சித்திதானுய்க் கிடைத்தலாலும், மேலடையப் போகின்ற பதம்வேறென்றிருந்தாலன்றே, அதை யடையும்பொருட்டு இதைநீக்கவேண்டும். இங்ஙனம் பரிபூரணுநந்த பரப்பிர மத்தைத்தவிர இன்மையாலும் இதை நீக்கவேண்டுவதில்லை, பிரதமத்தில் சுத்த ஸ்தூலபிரபஞ்சத்தை யடைதற்கு யாதொருகாரணமும் உரைக்கவில்லையே அஃதன்றே முன்னந்தெரியவேண்டு மென்னின்?

இந்த ஞானயோகாப்பியாச பிரகாரத்தை நித்தியாநித்திய வஸ்து விவேகாதி சாதன சதுஷ்டயமுடைய அதிகாரிக்கே சொல்லவந்தமையால், அவ்வதிகாரத்துவமே அதற்குக் காரணமாதலால் அஃதுரைக்கவில்லை.

முற்சொல்லிய காரணரூபங்களாகிய சுத்தஸ்தூல பிரபஞ்சமும், சுத்த சூக்ஷும பிரபஞ்சமும், சுத்தகாரண பிரபஞ்சமும், மிகுந்திருக்கின்றவைகளை நீக்குதற்குக் காரணங்களும் உரைக்கவில்லையே' யென்னின்?

கலக்கம் நீங்கித் தெளிவையடைதற்குக் காரணமாய்ச் சலத்திற்சேர்த்த தேற்றுவித்தானது எங்ஙனம் தன்காரியமானபிறகு தானும் அதனுடன் நீங்கி விடுமோ

அங்ஙனமே இவையும் தத்தங்காரிய முடிவுகளில் தாமே நீங்கிவிடும், ஆதலால், அவையுமுனாக்கவில்லை.

இச்சுத்தமாகிய திரிவிதகாரணங்களையும் பழகுங்கால் இவைகள் விருத்தியடைவதற்குச் சகாயமாய் முறையே குருசந்நிதானமும், ஏகாந்தஸ்தானமும், விடுதலும் வைத்துக்கொண்டும், இவற்றிற்குப் பலவிதமாய் வரும் பிரதிபந்தங்களின் நிவர்த்திக்குச் சகாயமாய் முறையே ஆப்தாதி குருசேவையும், பிரணவாதிமந்திர செபமும், தக்ஷிணாமூர்த்தியாதி தியானமும்வைத்துக்கொண்டும், விவேகஉபரதி வைராக்கியங்களோடும் பழகி யடையத்தக்கது ஞானசித்தி ஒன்றேயாம்.

இங்ஙனம் இஞ்ஞானசித்தியை மாத்திரமடைந்தால் முற்சொல்லிய அவ்விரண்டுசித்திகளையும் அடையவேண்டாவோ என்னின்?

சிதாகாயத்தின்கண் மனாகாயமும், பூதாகாயமும் போத கமனத்தின்கண் மனோகமனமும், தேககமனமும், பிர்மாநந்தத்தின்கண் சூக்ஷுமவிஷயாநந்தமும், ஸ்தூல விஷயாநந்தமும், ஞானசித்தியின்கண் மனோசித்தியும் தேகசித்தியும், அறியாமையின் காரியமாகிய பிராந்தி ஞானத்தில் ஆரோபிதமாய்த்தோன்றி அறிவினால் தோன்றுந் தெருண்ஞானத்தில் ககனாரவிந்தம்போலச் சொன்மாத்திரமாய் முடிதலால், அவ்விரண்டு சித்

திகளும் விசாரித்தறிந்த மஹான்களா லடையத்தக்க வையல்லவாம்.

அவ்விரண்டுவித சித்திகளின் இலக்கணங்களையும் இவ்விடத்திற் சொல்லிய காரணம் யாதென்னின்?

அவற்றினிழிவும் இதனதுயர்வுந்தோன்றக் கூறியதே அன்றிவேறன்று.

இவற்றைநன்குணர்ந்து சகஜாநுபவமாக ஞானசித்தியை யடையவேண்டுவதே மேலானபிரயோசன மென்று தோன்றுகின்றது.

ஆதலால், விவேகியானவன் எவ்விதமுயற்சியைச் செய்தேனும் இஞ்ஞானசித்தியை யடைந்து ஞானசித்தனாய் வாழ்வதே பரமோத்தமமாகும்.

உகூ - வது

ஞானசித்திசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

## ௯௦ - வது

## ஞானராச்சியபாரசிந்தனை.

---

ஸ்ரீசச்சிதாநந்த நித்தியபரிபூரண சிவசொரூபத்தின் அம்சமாகிய ஜீவச்செல்வ சிகாமணி யென்னுஞ் சிறுகுழந்தையை, சுருதிநம்பிக்கையென்னுங் கைத்தாயானவள், நிஷ்காமியகன்மமென்னும் பாலூட்டி, சுத்தாந்தக்கரணமென்னுந் தேகத்தை வளர்த்து, நித்தியாநித்தியவஸ்து விவேகாதி சாதனசதுஷ்டய முடைய அதிகாரத்துவ மென்னும் பருவமாக்கி, ஆசாரியத்தேட்டமென்னும் அரண்மனைக்குக் கொண்டுவந்து, காருண்யமென்னும் பரமகல்யாணி சமேதராய் வேதோபநிஷத்தென்னுஞ் சிங்காசனத்தி லெழுந்தருளி யிருந்து, தத்துவஞானோபதேச மென்னும் அரசுசெலுத்திக்கொண்டு, கைம்மாறுவேண்டாது ஒப்புயர்வற்ற திருவருள்வடிவமாய் விளங்காநின்ற சிவஞானதிலக தேஜோமயாநந்த குருராயரென்னு முண்மைப் பிதாவினது சந்நிதானத்தி லொப்புவிக்க, சற்குரு சிகாமணியும் சோதனையென்னும் திருக்கரங்களாலெடுத்து, திருநோக்க

ம், பரிசம், பாவனைமுதலிய தீக்ஷையென்னுஞ் செய் கைகளினாற் பாராட்டி, அசுத்தவாசனை யென்னுங்கோ லங்களைக் களைந்து, ஆத்மா நாத்ம விசாரணை யென்னு ங் கங்காபிஷேகஞ் செய்து, சமாதியோக மென்னும் பீதாம்பராபரணாலங் காரங்களுஞ் செய்து, தத்துவ ஞானமென்னுந் திருநீற்றைத்தரித்து, சாந்தமென்னுஞ் சந்தனத்தோடு சந்தோஷ மென்னும் அக்ஷதைப் பொ ட்டிட்டு, சச்சிதாநந்த மென்னுந் திருநாமந்தரித்து, நிற்சங்கற்ப சக்தியென்னும் நித்யகல்யாண சுந்த ரியை விவாகஞ் செய்து, துரியமென்னும் மஹாராஜ ச பாமண்டபத்தில் ஆநந்த மென்னுஞ் சிங்காசனத்தி லேற்றி, ஜீவத்வமென்னுஞ் சிரசில் அதீதமென்னுந் திருமுடியைச் சூட்டி, அகண்டாகார விருத்தியென்னு ந் திருக்கரத்தில் சாக்ஷித்வமென்னும் ஞானச்செங்கோ லைக் கொடுத்து, அகண்டைகரசவிருத்தி யென்னும் அ ங்குலியிற் சர்வம்பிர்ம மயமென்னுஞ் சின்முத்திரா மோதிரத்தைத் தரித்து, பந்தமோக்ஷ மென்னும் விவ காரத்தை அபாவப் படுத்துஞ் சகஜாநுபவ நிலையென் னும் பரமோக்ஷநகரத்துக்கு, ஆதிமத்தியாந்த ரகிதமெ ன்னுஞ் சார்வபௌமனாக நானேநீ நீயேநானென்னும் ஐக்கியார்த்த மஹாவாக்கியோப தேசத்தால், நித்தியா பரோக்ஷசாக்ஷாத்கார சகஜாநுபூதி யென்னும் அரசா க்ஷியைச் சுதந்தர லீலாவிநோத உல்லாசத் தோடுங் கொடுத்தருளி, மற்றும் சுத்தசத்துவகுண சிந்தாம

ணியை மந்திரியாகவும், பக்திவைராக்கிய விவேககுண திலகனைப்பிரதானிகளாகவும், அறிவு சாந்தம் வாய்மை அடக்கம் தவம் ஆசாரம் அவிரோதம் கெம்பீரமுதலா கியநற்குணுளர்களைப் படைத்தலைவர்களாகவும், அபே தசங்கற்ப வேறுபாட்டினையுடைய லீலாகற்பனைகளை ரதகஜதுரகபதாதிகளாகிய சேனைகளாகவும், வகுத் துக்காண்பித்தருளி, மேலும் மைத்திரி கருணைமுதிதை உபேக்ஷை முதலாகிய் சேடியர்களோடும், சமநிலையா கிய அந்தப்புரத்தில், ஜீவன்முத்தர்களுக் கடுத்தநடை களில், தனக்கு வேண்டியபடி விளையாடிக்கொண் டமைந்த நிற்சங்கற்ப சக்திசம்யோகத்தினுல், மேற்சொ ல்லிய சர்வத்துக்குந் தானே பொருளாளியாய் விளங் காநின்ற அவாங்மானச கோசரமென்னும் புத்திரனை ப் பெற்று ராச்சியபாரஞ்செய்து வாழ்வாயென்று, ஆ சீர்வாதஞ்செய்தருளியபடி வாழ்ந்தனன்.

இதைநிஷ்கபட பக்திபூர்வகமாகஇடைவிடாதமுயற் சியோடும் நம்பித்தவஞ்செய்து கிரமமாகக் கிடைக்க ப்பெற்றுக்கொண்டு ஒப்புயர்வற்ற ஞான அரசனுய்வா ழ்ந்து சுகத்தை யடைவதே இதற்குப்பலமாகும்.

ருO - வது ஞானராச்சியபாரசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

## ௩௧ - வது

## ஞானவியாபாரசிந்தனை.

யாவராலும் அளவிடுதற்கரிய அஞ்ஞானமாகியமுத லைக்கொண்டு, சுவர்க்கமத்திய பாதாளங்களாகிய பற்பல பெருந்துறைகளிற்சென்று, அவன் அவள் அது என்னும் முன்னிலைகளாகிய வர்த்தகர்களிடத்தில், புண்ணியபாவங்களாகிய சரக்குகளை ஆகாமியமாய்ச் சம்பாதித்தும், காலம்பார்த்து வியாரம்பண்ணுமளவும் மாயையாகிய மளிகையிற் சஞ்சிதமாய்க் கட்டிவைத்தும், நியமித்த காலங்களில் சுகதுக்காகாரமாகும் பிராரத்த போகாநுபவங்களாகிய வியாபாரம் பண்ணியும், சனனமரணங்களாகிய வரவுசெலவுகளைப்பார்த்தும், பந்தமோக்ஷங்களாகிய நஷ்டலாபங்களைக் கொண்டும், அநாதிதொட்டு ஜீவனம் பண்ணிக்கொண்டு வரும் அவித்தையாவானுகிய கடைச்செட்டி யானவன் இங்ஙனம் விருதாவியாபாரஞ் செய்து கொண்டுவந்ததை வித்தியா சம்பந்தராகிய பழையகணக்கப்பிள்ளை யான

வர்பார்த்து, ஏன்வீண் வியாபாரஞ் செய்து உள்ளபொ
ருளை யிழந்து துன்பமுறுகின்றாய், உனதபிதிரார்ச்சித
மாகிய அளவற்ற திரவியம் மூன்றுங் கட்டின் உட்பு
றத்து முற்றத்துள் தடையின்றி நன்றாய்த் தோன்றுவ
தை யாம்காட்ட நீகண்டெடுத்துக்கொள்ளின், சும்மா
விருந்தே சுகமாய்ச் சீவனம்பண்ணிக் கொண்டுவாழ்
வாயென்று பன்முறைசொல்லி, அஞ்ஞான சந்தேக வி
பரீதமற அவனையுட்புறத்துக் கழைத்துக்கொண்டு போ
ய்க் காட்டிக்கொடுத்தவளவில், செம்பொருளிருப்பைக்
கண்ணாரக்கண்டு, ஆநந்தபரவசமாய்முன்செய்துகொ
ண்டிருந்த வியாபாரங்களைச் சர்வாத்மனாய் விட்டுவி
ட்டு, மளிகையை அக்கினிபிரவேசம் பண்ணி சும்மாஇ
ருந்தபடி யிருந்தே அப்பொருளாற் சுகஜீவனம் பண்
ணிக்கொண் டுறங்கும்போது, பழையவியாபார வாச
னையினால் ஓர்மேன்மாளிகையின் சரக்கறையில், தன
து வெங்காயமூட்டையி லுள்ள சீரகம்,சிலநல்லவியா
பாரிகளுடைய பெருங்காயவாசனையை மாத்திரம்
பொருந்திக் கட்டுக்கிடையா யிருக்கின்றதைக் கண்ட
தாயும், அதனைச்சுருதிவிதிப்ப தாகிய ஏற்றுமதியும்
நிஷேதிப்பதாகிய இறக்குமதியும் செய்கின்ற அவ்வி
யாபாரிக ளுடைய வஞ்சகமற்ற நெஞ்சகத் துறைக்கு
அனுப்புகின்றதாயும், மற்றைக்கடைச் சரக்குகள் இவ்
விடத்தில் யாதொன்றும் நிலுவை யின்மையும், முத
லாயிருந்த இருப்பைக் கொண்டு சுகஜீவனம் பண்

ணுவதாகிய நாள்கழித்தலும்,வீட்டுவியாபாரத்தை மா த்திரம் வேண்டுவோர்களால் சுருக்கமாய்ச் செய்து விடுவதாகிய வியாபார வொழிவும் என்னும் இம்மூன் று யிருக்கும் இவ்விடத்துச் சமாசாரங்களைத் தான் அ வர்களுக்குத் தெரிவிக்கவேண்டு மென்பதாயும், சற்கு ருஸ்வாமிகளது உபதேசத்தில் ஞாபகமாகிய சங்கற்ப சரக்கேனும்,மறதியாகிய விஸ்மரண சரக்கேனும்,அவ் விடத்தி லவர்களுக்குள்ள மளிகையிலிருக்குஞ் சரக் கு விவரத்தையும், நாமரூபமாகிய ஜலதாரைச் சேற்றி ன்கண்பொருந்தலேயும், பஞ்சவிஷயங்களாகிய மலாதி களையருந்தலேயு முடைய நாட்டுச் சூகரபாவ மடைந்த க்ஷாமகாலமேனும், உருவநாமமயமாகிய இருதயகமல த்தின்கண் சத்வாசனையையும் சின்மகரந்தத்தையும் ஆ நந்தத்தேனையும் புசித்தலேயும் வசித்தலேயு முடைய காட்டுப் பிரமரபாவமடைந்த க்ஷேமகாலமேனும், அ வர்களுடைய அவித்தியா புரத்தினிகழுங் காலவிசே ஷத்தையும் பரார்த்த வியாபாரமேனும், ஆத்மார்த்த வியாபாரமேனும், அவர்கள்செய்துகொண்டு வரும் வி யாபார சாமார்த்தியத்தையும் அவர்கள் தனக்குத் தெ ரிவிக்கவேண்டு மென்பதாயும், அங்ஙனம் அவர்கள் தெரிவிக்குஞ் சரக்குவிவரம் வியாபார விவரம் கால விவரம் ஆகியமூன்றனைக் கொண்டே அவர்களுக் கி னிமேல்வரும் லாபலோபங்களையும் முன்கையிருப்புக ளையும் இப்போது ஜீவனம்பண்ணிக் கொண்டுவரும்

அம்சங்களையும் தெரிந்துகொள்ளலா மென்பதாயும், இங்ஙனமோர்சுந்தர மாகிய சொப்பனங் கண்டதைச் சகஜத்தில் விழித்துணர்ந்து,அதனைத் தன்னையடுத்த அவ்வியாபாரிகளது ஜாக்கிரத்தில் விவகரிக்கும்படியாய்த் தெரிவித்ததை அவர்களும் நன்குணர்ந்து சந்தோஷமடைந்தனர்.

இதனை விவேகிகள் செவ்வையாகச் சிரவணித்துக் கூர்ந்த யுக்தியோடும் எல்லாமொழிகளையு மெடுத்து அதற்கேற்ப அநுபவத்தில் பொருட்படுத்திக்கொண் டுணர்வார்களாயின், உயர்ந்தஞானவியாபார சீமான்களாய் வாழ்வார்கள்,இதற்குயாதொருதடையுமில்லை,சத்தியம்.

நுக - வது

ஞானவியாபாரசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

## ௯௨ - வது.

## ஞானகிருஷிசிந்தனை.

---

மாயையாகிய பெருங்காட்டைத் துறவாகிய குடாரத்தால்வெட்டி, அஞ்ஞானமாகிய வேரைச் சாஸ்திரஞானமாகிய அக்கினியாற்கொளுத்தி, அகங்காரமாகியகல்லைச் சிவபக்தியாகிய தொந்தாலியாற்பிளந்து, நெஞ்சமாகிய பூமியில் கோரமூட விருத்திகளாகிய மேடுபள்ளங்களைச் சத்துவவிருத்தியா யிருத்தலாகிய சமஞ்செய்து, அவித்தையாகிய் கரம்புத்தன்மையைத் தத்துவ விசாரவித்தையாகிய கொழுவாலுழுது, குருபணிவிடையாகிய எருவிட்டு, மஹாவாக்கியமாகிய விதை விதைத்து, அன்பாகிய நீர்பாய்ச்சி, சந்தேகமாகிய களைகளை மனனித்தலாகிய களைகட்டாற்களைந்து, விபரீதமாகிய கொடுந்திருஷ்டி விழாமல் நிதித்தியாசனமாகிய திருஷ்டி பரிகாரப்பாவையை வைத்து, பூதபிரதிபந்தம், வர்த்தமானபிரதிபந்தம்,பௌஷியபிரதிபந்தங்களாகிய பறவைக் கூட்டங்களும் மிருகக்கூட்ட

ங்களும் புழுக்கூட்டங்களு மணுகாமல், மனோநாசம் வாசனுக்ஷயங்களாகிய அஸ்திர சஸ்திரங்களாலோட்டிக்கொண்டு, ஈஷணுத்திரயங்களாகிய கள்வரணுகாமல், வைராக்யமாகிய வேலியிட்டு, மைத்திரியாதிகுணங்களாகிய துணையுடன் புருஷமுயற்சியாகிய காவலிருந்து, சிவாநந்தமாகிய போகம் விளைவித்து, சமாதியாகிய பாகம்பண்ணி, சாக்ஷாத்காரமாகிய போசனஞ்செய்தால், சனனமரணமாகிய பசிநீங்கி சகஜாநுபவமாகிய திருப்தியடைந்து, சும்மாவிருத்தலாகிய பெருவாழ்வில் ஜீவன்முத்தர்களாகிய குடிகளாய் வாழவார்கள்.

ஆதலால், இதைச்செவ்வையாயுணர்ந்து இதிற்சொல்லிய பிரகாரஞ் செய்வார்களாயின், ஞானக்குடிகளாய் வாழ்வார்கள். இதில் யாதொரு சம்சயமுமில்லை, சத்தியம்.

௬௨ - வது

ஞானகிருஷிசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

௩௩ - வது

## குணபேதாவஸ்தாவிவகாரசிந்தனை.

---

முதலாவது

திரிகுணாத்மகமான மனத்தின் அசுத்தகுணத்தில்தாமதகுணவிவகாரமாவது, கொலைமுதலாகிய பஞ்சமாபாதகங்களையும், அதிநித்திரை அதிபோசன முதலிய, நிஷித்தகர்மங்களையும் சார்வதா பயமின்றிச்செய்தலாம்.

இராஜதகுண விவகாரமாவது உழவுமுதலாகிய அறுவகைத்தொழில்களையும், நித்தியநைமித்திய முதலிய உசிதகர்மங்களையும் சார்வதா ஆசையோடுஞ் செய்தலாம்.

சாத்துவிக் குணவிவகாரமாவது அன்னதான முதலாகிய முப்பத்திரண்டு தர்மங்களையும், தேவதாசாமான்ய பக்தியையும் சார்வதாபய பக்திகளோடுஞ் செய்தலாம்.

உ - வது.

இப்புண்ணிய பக்திகளின் பயனாகிய சித்தபரிபாக த்தினு லுண்டான அசுத்தாசுத்த சாத்துவிக குணத்தி ல் தாமதகுண விவகாரமாவது, பிறரிம்சையைக்குறித் து அதமதேவதார்ப்பணமாகப் புண்ணியங்களைச் செ ய்தலாம.

இராஜதகுண விவகாரமாவது தனது சவுக்கியத் தைக்குறித்து மத்திமதேவதார்ப் பணமாகப் புண்ணி யங்களைச்செய்தலாம்.

சாத்துவிககுண விவகாரமாவது சித்தசுத்தியைக் கு றித்து உத்தமதேவதார்ப்பணமாக நிஷ்காம்ய புண் ணியங்களைச் செய்தலாம்.

௩ - வது.

இந்நிஷ்காம்ய புண்ணியப்பயனாகிய ஈசுவராநுக் கிரகத்தா லுண்டான சித்தசுத்தியை யுடைய சுத்தசா த்துவிக குணத்தில் தாமத குணவிவகாரமாவது, நித்தி யாநித்திய வஸ்துவிவேகத்தை யடைதலாம்.

இராஜதகுண விவகாரமாவது இகமுத்தரார்த்த பல போகவிராகத்தை யடைதலாம்.

சாத்துவிககுண விவகாரமாவது சமாதிசட்கசம்பத் தையடைதலாம்.

கரு

௬ - வது.

இச்சாதனத்திரயங்களின் எதார்த்தத்தினு லுண்டான அதமசுத்தசாத்துவிக குணத்தில் தாமதகுணவிவகாரமாவது முமுக்ஷுத்வத்தை யடைதலாம்.

இராஜதகுண விவகார்மாவது சம்சாரதுக்கஞ் சகிக்கமாட்டாமல் இத்துக்க நிவர்த்தியைச் செய்விக்குஞ் சற்குருவைத் தேடுந் தேட்டரவை யடைதலாம்.

சாத்துவிக குணவிவகாரமாவது அநாசாரியர்களை விடுத்து ஞானுசாரியனை யடைந்து, அவரது திருவருள் பெறும்படி ஆப்தம், அங்கம், தானம், சற்பாவம் ஆகிய ஞானச்சரியா சொரூபமாகிய குருசிசுருஷையைச் செய்யும்பே றடைதலாம்.

௫ - வது.

இஞ்ஞானச்சரியையின் பேற்றினுலுண்டான சற்குருகிருபையினுல் விளங்கும் மத்திமசுத்தசாத்துவிக குணத்தில் தாமதகுணவிவகாரமாவது, சித்த ஏகாக்ரசித்தம் ஞானக்கிரியா சொரூபமாகிய சகுணபிர்ம தியானத்தை யடைதலாம்.

இராஜதகுண விவகாரமாவது அச்சகுண பிர்ம சாக்ஷாத்காரத்தை யடைதலாம்.

சாத்துவிககுண விவகாரமாவது நிர்க்குணபிர்மோபாசனு பேக்ஷையை யடைதலாம்.

சு - வது.

இந்நிர்க்குண பிர்மோபாசனு பேக்ஷையின் மிகுதியினு லுண்டான உத்தம சுத்த சாத்துவிக குணத்தில் தாமதகுண விவகாரமாவது, சித்தபிரகாச நிமித்தம் பிர்மாத்மைக்கிய ஞானேதயமாகும்படி சடுவிதலிங்க தாற்பரியமாக அத்வைதத்தைப் பிரதிபாதியா நின்ற வேதாந்த சாஸ்திரார்த்தத்தை சற்குரு முன்னிலையில் சிரவணஞ்செய்தலாம்.

இராஜதகுண விவகாரமாவது சிரவணஞ் செய்த பொருளைப்பற்றி, தர்க்கயுக்தி யநுமானங்க ளோடுந் தானேதனித்து மனனஞ்செய்தலாம்.

சாத்துவிககுண விவகாரமாவது மனனஞ்செய்த பொருளைப்பற்றி, மந்திரயோகாதி பஞ்சகத்தோடும் ஞானயோக சொரூபமாகிய நிதித்தியாசனஞ் செய்தலாம்.

எ - வது.

இந்நிதித்தியாசனமாகிய ஞானயோகாப் பியாச பிரயாசத்தினுலுண்டான உத்தமோத்தம சுத்தசாத்துவிககுணத்தில் தாமதகுண விவகாரமாவது, விசேஷார்த்தத்தோடும் விளங்காநின்ற சப்தாதி பஞ்ச விஷய[illegible]களாகிய பிரபஞ்சத்தினிடத்திலும், சாமான்யாம்சத்தோடும் விளங்காநின்ற சின்மாத்திர சொரு

பமாகிய பிரமத்தினிடத்திலும், இருக்குஞ் சித்தவிருத்தியோடு விச்சின்ன தியானஞ்செய்தலாம்.

இராஜதகுண விவகாரமாவது அர்த்தாபாவத்தோடுஞ் சாமான்யமாய் விளங்காநின்ற சப்த விஷயக் கிராகியமாத்ரமாய் விசேஷாம்சத்தோடும் விளங்காநின்ற சச்சிதாநந்த சொரூபமாகிய பிரமத்தினிடத்தில் தைலதாரையைப்போல சஜாதீயவிருத்தி பிரவாகரூபமாயிருக்குஞ் சித்தவிருத்தியோடு சந்ததந்தியானஞ் செய்தலாம்.

சாத்துவிககுண விவகாரமாவது சாமான்ய சப்தமுந்தோன்றாமல், அபேதத்திரிபுடியான சொரூபானுபவத்திலமைந்து விளங்கும் சித்தவிருத்தியோடு சவிகற்ப சமாதியை யடைதலாம்.

அ - வது.

இச்சவிகற்பசமாதி அப்பியாச முதிர்ச்சியினு லுண்டான மிகவும் உத்தமோத்தம சுத்தசாத்துவிக குணத்தில் தாமதகுண விவகாரமாவது, அதிஷ்டபல ரூபமான மனக்களிப்பிற் கேதுவாகிய சிலபிரகாசங்களின் சொரூபமாகும் விந்துவிளக்கத்தோடும், சிலசப்தங்களின்சொரூபமாகும் நாதமுழக்கத்தோடும், ஞானயோக மகிமையினுல் சிற்சத்திசமேதராய் விளங்கும் ஆநந்த நடேசரது பஞ்சகிர்த்திய நடன சொரூபதரிசன பிராப்தியாம்.

இராஜதகுண விவகாரமாவது நிர்விகற்ப சமாதிக் கொருபிரகாரம் அநுகூலமாயும், ஒருபிரகாரம் 'பிரதிகூலமாயும் உலகத்தில் மகத்துவத்திற் கேதுவாயு மிராநின்ற அப்பிரத்யக்ஷபதார்த்தங்களின் ஞானமும் திரிகாலஞானமும் விளக்குவதாகிய இரிதம்பரபிரஞ்ஞை யென்றொரு அதிசயஞானப் பிராப்தியாம்.

சாத்விககுண விவகாரமாவது முற்சொல்லிய சகலாவஸ்தைகளு மில்லாமல் திரிபுடிரகிதமாய் இப்படியப்படி யென்று வாக்குமனங்களினுற் சொல்லவும் நினைக்கவுங்கூடாத ஆநந்தமாத்திரமான சுத்தாத்வைத சொரூபாநு பவத்தோடுங்கூடி விளங்காநின்ற ஞானஞான சொரூபமாகிய நிர்விகற்ப சமாதி பிராப்தியாம்.

கூ - வது.

இந்தமிகவும் உத்தமோத்தம சுத்தசாத்துவிக குணத்தில் சாத்துவிககுணசமான சித்தவிருத்தியானது மேற்சொல்லிய கிரமப்படி ஒருவனுக்கு தெய்வீகமாய் லபிக்கும்வழியிலும், அவன் சற்குரு ஸ்வாமிகளுடைய சந்நிதானத்தைவிட்டகலாது, அவரநுக்கிரகஞ் செய்தருளும் உபதேசவாக்கியங்களும் அதற்கவிரோதமாகிய உபநிஷத்து வாக்கியங்களும் இதமாய்ச் செலுத்தாநின்ற சன்மார்க்கத்திற் சென்று, புருஷார்த்த சொரூபமாகிய நிர்விகற்பசமாதியை யடைந்து லோககுருவாய் விளங்குஞ் ஜீவன்முத்தனுன பிரமவித்தன

து இந்நிர்விகற்பசமாதியின் நூநாதிக காலநிஷ்டையி னுலுண்டான மகாவுத்தமோத்தம சுத்தசாத்துவிக குணத்தில் தாமதகுண விவகாரமாவது, சுத்தவாசனுசமஸ்காரத்தினுல் தானேசமாதியைபநீங்கி வர்ணுச்சிரமோசிதகர்ம நிஷ்டனுய் சொப்பனத்தனைப் போல, பிராரத்த போகங்களை சாக்ஷிமாத்திரமா யிருந் தநுபவித்து விட்டவுடனே பிரமாதமின்றிப் பூர்வம்போலச் சமாதியையடைந்திருக்கும் பிரமவித்துவரனுயிருத்தலாம்.

இராஜதகுண விவகாரமாவது சமீபித்த பக்தஜனங்களாகிய அந்நியராற் சமாதியைநீங்கி, சுத்தவாசனுசமஸ்காரத்தினுல் வழக்கப்படி சுழுத்தனைப்போல, இச்சாபிராரத்த நீங்கலான பிராரத்தத்துவயங்களில் வரும்போகங்களைச் சாக்ஷிமாத்திரமா யிருந்து அநுபவித்து விட்டவுடனே வெகுசுலபமாய்ப் பூர்வம்போல, சமாதியை யடைந்திருக்கும் பிரமவித்துவரியானு யிருத்தலாம்.

சாத்துவிககுண விவகாரமாவது தன்னுலும் அந்நியராலும் ஒருகாலுஞ் சமாதியைவிட்டு நீங்காது, சகஜாநுபவ சாக்ஷாத்காரத்தோடும் பிராரத்த மிருந்தும்மில்லாமலே சும்மாவிருக்கும் பிரமவித்துவரிட்டனு யிருத்தலாம்.

சகலசுருதிகளின் முடிந்ததாற்பரியமும், மஹாதேவரது சுவாநுபவமும் இந்நிஷ்டையே ஆம். ஆதலால், இந்நிஷ்டையை யடைந்த பரிபூரணஞானியே ஜீவன் முத்தி தசையில் விதேகமுத்தியை யடைந்தவனாகும்.

இப்பரமபுருஷார்த்தத்தை யடைய விரும்பிய பக்குவர்கள் முற்சொல்லிய கிரமப்படி ஸ்ரீசற்குருஸ்வாமிகளது திவ்ய சந்நிதானத்தையடைந்து அவரால் விசாரித்தறிந்து சுவாநுபவ சாக்ஷாத்காரம் பெற்றுய்யக்கடவர்கள். இதில்யாதொரு சம்சயமுமில்லை, சத்தியம்.

௩௩ - வது

குணபேதாவஸ்தாவிவகாரசிந்தனை

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான் திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

௩௪ - வது.

## சற்குருகடாக்ஷபிரபாவசிந்தனை.



சத்திநிபாதம் பதிந்த இருதய சுத்தியையடைந்து நித்தியாநித்தியவஸ்து விவேகாதி சாதன சதுஷ்டய முண்டய பக்குவியானவன், சற்குருசந்நிதியை யடைந்து அவரது முகத்தால் சுருதியினாலும் யுக்தியினாலும் தத்துவவிசாரஞ்செய்து முன்னர்ப்பரோக்ஷஞானம்பெற்றுப்பின்னர் அவ்வாசாரியர் மஹாவாக்கியவிசாரத்தால் கடாக்ஷித்தருளிய அபரோக்ஷஞானம்பெற்று, அத்திருவருண் ஞானப்பிரகாசத்தால் அநாதியாகிய அஞ்ஞானந்தகாரத்தைக் கெடுத்து, அக்கடாக்ஷ வீக்ஷண்யத்துக்கு நேராயிருந்து, சுவாநுபவ சாக்ஷாத்காரத்தைப் பிரதிபந்தமின்றி அடையும்படியான சமாதியிலிருந்து, சதாகாலமும் அநுசந்தானம் பண்ணிக்கொண்டு வரல்வேண்டும்.

அஃதெங்ஙனமெனின், 'குரு' என்னுஞ் சொற்க ண் இருக்கும் இரண்டுவர்ணங்களின் பொருளாவது கு-என்பது அஞ்ஞானம், ரு-என்பது ஞானம் ஜீவனது அஞ்ஞானத்தைச் சிவஞானத்தினல் கெடுக்கவேண்டிக் குருவானவர் முடிவாகிய ஞானமென்னும் பொருளோடும் விளங்காநின்ற தனது திருவருட்கடைக்கண்ணால் உபதேசித் தருளலும், அத்திருவருண் ஞானப்பிரகாசமானது ஜீவனதறிவின்கண் ஒன்றி அவ்வறிவின்கண்ணேகமாய்க் கலந்திருந்த அநாதியஞ்ஞா னந்தகாரத்தைக்கெடுத்து, பாசவடிவாகிய நினைவொன்றிய நாமரூபமயமாகும் பிரபஞ்சத்தையும், பதிவடிவாகிய அறிவொன்றிய சச்சிதாநந்தமயமாகுஞ் சிவத்தையும், இவற்றிற்கு நடுநின்ற பசுவடிவாகிய சகலகேவலமொன்றிய சுட்டறிவுமயமாகுஞ் ஜீவனையும், பூரணமாய்நின்று விளக்குவதை அக்கடைக்கண்ணுகிய திருவருண்ஞானப்பிரகாசத்தோ டேகமாய்க்கலந்த ஜீவனதறிவின்கண்தெரிந்து நாமரூப மயமாதலாகிய நினைவொன்றுதலால் பந்தப்பட்டுப் பிறவித்துன்பமடையுமார்க்கமிஃதென்றும், சச்சிதாநந்த மயமாதலாகிய ஞானமொன்றுதலால் மோக்ஷம் பெற்றுச் சிவாநந்தமடையு மார்க்கமிஃதென்று முணர்ந்து, துன்பவழியிற் செல்லாமலும் இன்பவழியில் நீங்காமலும் தத்துவங்களி னிருப்பிடமாகிய சகலமும் அவற்றினபாவத்தி னிருப்பிடமாகிய கேவலமும் அற்ற திருவருண்ஞானத்தி

னிருப்பிடமாகிய சுத்தநிலையென்னுந் துரியத்தினின்ற படியே நின்று சதாகாலமும் அறிதுயில் கொள்ளுவதேயாம்.

இங்ஙனம் பதிபசுபாசங்களினது உண்மையை யுணர்த்துந் திருவருண் ஞானப்பிரகாசத்தைக் கொடுத்தருளி, தொன்று தொட்டு வாராநின்ற பிறவித்துன்பத்தினின்றும் எடுத்து, சிவாநந்தத்தெளிவில் வைத்து ரக்ஷித்த சற்குருநாதனைத் தெய்வங்களுக்கெல்லா மேலாய்விளங்கும் மஹாதேவராகிய சச்சிதாநந்த சிவசொரூபமான உண்மைத் தெய்வசிகாமணியெனத் துணிந்து பின்னர் அந்தஞானாசாரியர் திருவருளினால் துக்க நிவர்த்தியாய்த் தடையற்ற வாநந்தாநுபவாதி சயத்தையடையுந் தோறும் அவரைப் பாகியாந்தரங்களி லிருவகைக் கரணங்களால் "நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தோறு மெப்போது மனைத்தெலும் புண்ணெக" "உள்ளங்கா(நின்றுச்சியளவு நெஞ்சாயுருகியுருகி யுடம்பெல்லாங் கண்ணுபழுதழுது" ஆகத்தின் மயிர்க்காலுக்கொரு வாயாய்த் துதித்துப் பாடியாடித் தாசோகபக்தி மேலிட்டு எவ்வெத்திசைகளில் எவ்வெப்பொருள்களை எவ்வெவ்விதமாய் நின்று சிவப்பிரகாசமாகிய அத்திருவருண்ஞானப் பிரகாசமுணர்த்துமோ, அவ்வத்திசைகளில் அவ்வப்பொருள்களை அவ்வவ்விதமாக அநதப் பரிபூரண ஞானப்பிரகாசமாய் நின் றுணரும்ப

டியான அத்வைதஞான பூசையென்னும் இச்சகஜாநுப
வ அடையாள அங்கத்தால் சும்மாவிருந்தபடியே யிரு
க்கும் பண்டைநிலையாகிய துரியாதீதத்தை யடைந்து
திருப்தியடைவிக்க வேண்டுவதே அவ்வாசாரியருக்கு
மாணுக்கன் செய்யும் பிரதியுபகாரமாகும்.

சொரூபஞான நிஷ்டாபரனு யிருப்பாய்ஆயின் நீ
செய்யும் கைம்மாறென்று முன்னேருங் கூறியிருக்கி
ன்றனர். ஆதலால், இப்போதுள்ள பக்குவர்களும் இங்
ஙனமே செய்து வாழக்கடவர்கள்.

௫சு - வது

சற்குருகடாக்ஷபிரபாவசிந்தனே

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

ஸ்ரீசற்குருநாதன் சரணாரவிந்தம் நீடூழிவாழ்க.

## வாழ்த்து.

---

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆதிநடுவந்தமிலா வருளாளன்வாழ்க
அகிலமெலாமீன்றளிக்கு மருட்சத்திவாழ்க
நீதிநெறியொழுகுசிவ நேசர்குழுவாழ்க
நிமலமறையாகமங்க ணீடூழிவாழ்க
பூதியொடுமெக்கமணி பொலிந்தெங்கும்வாழ்க
புகலரியசிவநாமம் புகழ்பெருகிவாழ்க
சோதிவடிவாய குரவன்மரபுவாழ்க
சொலுமுலகத்துயிர்களெலாஞ் சுகித்துறவாழியவே.

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

## ௯௫ - வது.

## சிவபெருமான்துதிபதிகம்.



பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பொன்னொளி பரந்தமதி வதனமும் விரிசடைப்
பொற்புமரு ணெக்கிணையுமுப்
புண்டர மிலங்குநன் னுதலுமா வாக்கியம்
புகல்குமுத வாய்மலரும்வெள்
அன்னமதி னுமமோ டுலவுநுமிழ் நாசியும்
மணிமகர குண்டலஞ்சேர்
அழகுசெவி யிணையுமிரு திண்புயமு மக்கமணி
யாரமணி மார்பினழகும்
பின்னமறு ஞானமுத் திரையினொடு கோசமும்
பிடித்தவிரு கரமலர்களும்
பெரியசெம் பட்டாடை யோகபட் டிகையொடு
பிறங்கிடையு மிருமலரடிச்

சின்னமுங் கண்டுய்ய வாதவூ ரடிகளைச்
செங்குருந் தடியினுண்ட
தேசிகநி னாருளி னுலெனக் கருளுவாய்
தெக்ஷிணா மூர்த்தசிவமே. (௧)

அன்னமய முதலான வைங்கோச வெதிரித்த
மாகியுந் தூலமுதலா
அழியுமுடன் மூன்றினுக் குயர்வி லக்ஷணமாயு
மவத்தையொரு மூன்றினுக்கும்
உன்னலறு சாக்ஷியா யும்மொளிசெய் சீவனுக்
கோங்கதிட் டானமாயும்
உற்றபர சச்சிதா நந்தசிவ மேநின்ன
துண்மைவடி வாகுமெனவே
மன்னுமறை முடிவான வாக்கியப் பொருளையொரு
மௌனோப தேசமொழியால்
மாட்சிபெறு மெய்ஞ்ஞான தீட்சையுட னருளியே
மதுராமா நகரில்வந்த
தென்னவற் குயிரான வாதவூ ரடிகளைச்
செங்குருந் தடியினுண்ட
தேசிகநி னாருளி னுலெனக் கருளுவாய்
தெக்ஷிணா மூர்த்தசிவமே. (௨)

கஞ்சனெனு மோர்குயவ னுக்குமி வுடற்கடங்
கரணமுயிர் மூன்று மான

காட்சியை யுணர்ந்தவறி வேதினது மெய்ப்பதக்
காரணப் பொருளதாகும்
பஞ்சவித பூதபெள திகமான சகமாயை
பரமனிவை மூன்றனையுமே
பாகமறவே யறிய வந்தவறிவே நமது
பதமத னருத்தமாமிவ்
விஞ்சையுட னீயுநா மும்முலகு மொன்றதாய்
விடினசி பதார்த்தமாகும்
மிக்கவிவ் வர்த்தமே யுணர்வைபெனி னழியாத
மெய்ப்பதம் பெறுவையென்றோர்
செஞ்சொலுறு பொருளுதவி வாதவூ ரடிகளைச்
செங்குருந் தடியிலுண்ட
தேசிகநி னருளி னலெனக் கருளுவாய்
தெக்ஷிண மூர்த்தசிவமே. (௩)

அந்தமுறு மிவ்வுலக மெய்யெனச் சீவனு
ளுதிபர னொருவனுளனென்
றனுகலது சீவனு மிவையாவு மென்னிடத்
தாரோ பித்ங்களெனவே
பந்தமற நிற்கிலஃ தீசனுஞ் சகமொடுயிர்
பரனுமொரு புரணமான
பகர்வரிய சச்சிதா நந்தசிவ மன்றியொரு
பந்தமொடு வீடுமிலையென்

றிந்தவிதம் வந்துறி லதேபிரம மாமஃது
மெங்ஙனெனி னுடகமுமோர்
இயல்பினெ டிருக்கவது வெகுவிதா பரணமா
யிலகினும் பொருளொன்றெனச்
சிந்தையதி லுணர்வையென வாதவூ ரடிகளைச்
செங்குருந் தடியினுண்ட
தேசிகநி னாருளி னலெனக் கருளுவாய்
தெக்ஷிண மூர்த்தசிவமே. (சு)

ஓதமுணர் வீதெனச் சுட்டிறந் தியாவுமா
யொளிர்நிலை யதீதமாகும்
ஓரசைவ தாகுநினை வாயிடிற் சொப்பனம்
முறுநினைவு நாமவுருவாய்ப்
பேதமொ டியர்ந்துவளர் கின்றநிலை சாக்கிரம்
பேசுமிவை யின்மயமதாய்ப்
பெந்தமுற வேதனை யயர்ந்திடச் சுழுத்தியாம்
பெயர்ந்தொடுங் காமலென்றும்
போதவறி வாயிருந் திவையறித றுரியமாம்
புகலுமித் துரியமாகில்
பொய்யுருவ நாமமோ டயர்வுமறு நினைவுநின்
புரணவடி வாகுமெனவே
தீதிலொரு மொழியுதவி வாதவூ ரடிகளைச்
செங்குருந் தடி யினுண்ட
தேசிகநி னாருளி னலெனக் கருளுவாய்
தெக்ஷிண மூர்த்தசிவமே. (ரு)

அரிபிரம ரறியாத நினையறி யவத்தையே
தருடியெனி லேயவுலகம்
ஆகின்ற போதுமது மாய்கின்ற போதுமறி
யாயென்ற வளவிலாயின்
தெரிகின்ற வுலகமுறி னினைவாகு மஃதறிற்
றெரியாத மறைவாமெனத்
தெளிவான தாதலின் னினைவயர்வு மாய்வகைச்
செப்பியரு ளென்னினினைவும்
புரணவறி வாயிருந் தெவைக்குமுயர் கரியெனப்
புணர்வை யெனின்மடமையோடும்
போகும்மப் போதுரச தமகுணத் தொடுமோய்ந்து
புத்தியிற் சத்வமேலாய்த்
தெரியுமதி லறிவையென வாதலூ ரடிகளைச்
செங்குருந் தடியினுண்ட
தேசிகநி னாருளி னுனெனக் கருளுவாய்
தெக்ஷிணு மூர்த்தசிவமே (கூ)

மறைமுடிவி லொளிர்பரம குரவவிவ் வுலகமது
வந்தநெறி யருடியென்னின்
வானிடத் தரில்முற் பவமான தகைமையின்
வத்துவிற் றேன்றுமெனவே
முறைமையொடுசத்யமாய்க் கண்டிடுவ தென்னெனின்
மோகமுறி லரவமஃது

முப்பொழுதி லாதறினு முண்மையாம் புரியிடம்
முற்புரியை யறியிலரவம்
இறையள வுருதகலு மங்ஙனமி தில்லெனி
லிரவிமுன் னலகைரதமும்
இன்றென வுணர்ந்திடினு மிலகும்விவ காரமதி
னில்லெனிற் கனவுபோன்றே
சிறையற விளங்குமென வாதலூ ரடிகளைச்
செங்குருந் தடியினுண்ட
தேசிகநி னாருளி னலெனக் கருளுவாய்
தெக்ஷிணு மூர்த்தசிவமே. (எ)

உருவமொடு நாமமா யுறுவிடய மைந்தினும்
முற்றதொரு காதலற்றால்
உயர்கரும விந்தியத் தொடுஞான விந்தியம்
முலைவினெடு முணர்வுமறுமால்
கருதுமத நூலநில மனமுமசை வறுமதாற்
கறையி லறிவேவிளங்கும்
கண்டவிது தன்னினறி யாமையறு மாதலாற்
காத லறலேமிதுந்த
பெரியமுயல் வென்னகுரு நாதவதை நீக்கிடும்
பெற்றியருள் செய்தியென்னின்
பேதமறு சச்சிதா நந்தமய மாயுருப்
பெயருமொளிர் கின்றதெனநீ

தெரியிலஃ தொழியுமென வாதவூ ரடிகளேச்
செங்குருந் தடியிருண்ட
தேசிகநி ருரருளி ருலெனக் கருளுவாய்
தெக்ஷிண மூர்த்திசிவமே. (அ)

இகபர மிரண்டிலொரு துணையாகி யாள்குரவ
வெளியனகம் வாக்குடலுமே
இன்பவடி வாகவொரு சூழ்ச்சியரு ளென்னிலுனே
யேதமுறவே செய்திடும்
சகலமொடு கேவலங் களேயுதவு கின்றவிரு
தமரச குணங்கள்போக்கிச்
சத்வகுண மாமகமு மாய்வசன நான்கையுந்
தள்ளி யொளிர்மௌனவாக்கும்
மிகவசித் தியமான வுடலமொரு மூன்றையும்
விலக்கி யொளிர்துரியவுடலும்
மேன்மையொடு பெற்றுவளர் கிற்பையெனி னின்பமா
மினிருமென வுண்மையுதவிச் [ய்
செகமதிற் புகழ்பெற்ற வாதவூ ரடிகளேச்
செங்குருந் தடியிருண்ட
தேசிகநி ருரருளி ருலெனக் கருளுவாய்
தெக்ஷிண மூர்த்திசிவமே. (க)

அத்தனரு ளாகம மிலங்குமுப் பொருளெனும்
மரியமறை யோர்பொருளெனும்

ஆதலிற் பந்தமொடு வீடுமுள வாமெனவு
  மாயிடா வெனவுமெனது
சித்தமதி லையமுறு மவையினிற் றுணிவதைச்
  செப்பியரு டேசிகவெனின்
சிற்சதா நந்தபர மானவுன் றிருமுனிற்
  றிகழ்நினைவ நினைவென்றிரு
சத்திகள நாதியில் விநோதமா யொளிர்தலிற்
  றகைமைமிக் குடையவந்தச்
சத்திகளி னுலுரிய வப்பகுப் பாகுமின்
  றன்மையா லவையெலாமோர்
சித்ரமாய்க் காண்பையென வாதலூ ரடிகளைச்
  செங்குருந் தடியினுண்ட
தேசிகநி னாருளி னலெனக் கருளுவாய்
  தெக்ஷிண மூர்த்தசிவமே. (கo)

அறியாமை யென்கின்ற விருளினெடு தத்துவம்
  மாகின்ற பலவுடுக்கள்
அறைகின்ற சீவனுடை யொளியெனுஞ் சசிகிரண
  மானவிவை நீங்கிடவுநல்
குறியாகு முகமெனுங் கஞ்சமலர் மலரவுங்
  கோதில்கா மலர்கூம்பவும்
குறிகுணங் குறியாத நிலையிலுறு நினைவெனக்
  கூறுமள நிறுகவும்பேர்

சிறிதான மனமெனும் மெழுதுருகவும் பொலாச்
செகநோக்க மென்றகூகைச்
செங்கணிரு ளாகவுஞ் சச்சிதா நந்தமது
தெரியவரு கண்ணொளிரவும்
செறிஞான கதிருதவி வாதவூ ரடிகளைச்
செங்குருந் தடியிலாண்ட
தேசிகநி னாருளி னாலெனக் கருளுவாய்
தெக்ஷிணா மூர்த்தசிவமே. (கக)

௫ரு - வது

சிவபெருமான் துதிபதிகம்

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

சிவபெருமான்திருவருள்வாழ்க.

# தத்துவஞானதீபிகை.

## வாழ்த்து



எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

வாழிசோபனம் வல்லபை நாயகர்
வாழிசோபனம் வள்ளி மணாளனார்
வாழிசோபன மம்பிகை பாகனார்
வாழிசோபன மென்னருட் டேசிகர்
வாழிசோபன நீறுடன் மாமணி
வாழிசோபன மஞ்சக் கரமனு
வாழிசோபன மெய்யடி யாரெலாம்
வாழிசோபனம் வையகீ டூழியே.

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவபெருமான் திருவருள்வாழ்க.

# பாட்டுமுதற்குறிப்பு அகராதி.

---

பாட்டுமுதற்குறிப்புஅகராதி
முற்றிற்று.

---

உ

சிவபெருமான் திருவருள்வாழ்க.

# பிழைதிருத்தம்.

---

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௮ | ௬௩ | களற்ருல் | கள்ரால் |
| ௪௨ | ௩0 | வைத்து | வைத்தே |
| ௬௭ | ,, | மறுளின் | மருளின் |
| ௪௮ | ,, | யுணர்த்தல் | யுணர்தல் |
| ௫௧ | ௩0 | வீடென்நன்கு | வீடெனநன்கு |
| ௬௫ | ௪௩ | சொரூபத்தைத் | சொரூபத்தையும் |
| ௭௧ | ௧௯ | தொழிலு | தொழிலும் |
| ௭௯ | ௪௯ | இன்றிய | இல்லாத |
| ,, | ௨0 | அறிவேண்டும் | அறியவேண்டும் |
| ௮௧ | ௪௯ | சர்வாதிஷ்ட்டான் | சர்வாதிஷ்டான |
| ௧0௭ | ௨0 | விவகாரத்தை | விசாரத்தை |
| ௧௧௮ | ௪ | இல்லனவாய் | இல்லனவாய |
| ௧௩௧ | ௧ | மறைந்திருந்த | மறைத்திருந்த |
| ௧௬௭ | ௧0 | ஆர்ச்சித்த | ஆர்ச்சித |
| ௧௬௭ | ௧௨ | ரூபமாகசேஷ்டி<br>ப்பித்து | ரூபமாகச்சேஷ்டி<br>ப்பிக்கும் |
| ,, | ௬ | மன்னித்து | மனனித்து |
| ௧௫௧ | ௧௬ | பந்தத்துகு | பந்தத்துக்கு |
| ௪௫௩ | ௨௩ | அதிஷ்ட்டாஞ்ஞான | அதிஷ்டானஞ்ஞான |
| ௯௭௧ | ௧ | விருத்தியாகநோ<br>க்காது | விருத்தியால்நோ<br>க்காது |